# சங்க இலக்கியத்தில் சூழலியல்

திருச்சிராப்பள்ளி, பாரதிதாசன் பல்கலைக்கழகத் தமிழ்
முனைவர் (Ph.D.) பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு

ஆய்வாளர் :

**இரா.மதன்ராஜ்**

*பதிவு எண்:*32646/Ph.D.-K6/Tamil/Full Time/October 2015/Dt: 23.09.2015

நெறியாளர் :
முனைவர் **க.தமிழ்மாறன்**
உதவிப் பேராசிரியர்

தமிழாய்வுத் துறை

**அரசு கலைக் கல்லூரி**

அரியலூர் – 621 713

ஆகஸ்ட் – 2020

முனைவர் க.தமிழ்மாறன், எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
உதவிப் பேராசிரியர்,
தமிழாய்வுத் துறை,
அரசு கலைக் கல்லூரி,
அரியலூர்–621 713.

# நெறியாளர் சான்றிதழ்

சங்க இலக்கியத்தில் சூழலியல் என்னும் தலைப்பில் அமைந்த ஆய்வேடு, பாரதிதாசன் பல்கலைக்கழகத் தமிழ் முனைவர் பட்டத்திற்காக ஆய்வாளர் இரா.மதன்ராஜ் (பதிவு எண்: 32646/Ph.D.-K6/Tamil/Full Time/October 2015/Dt: 23.09.2015) அவர்கள், அரியலூர், அரசு கலைக் கல்லூரி, தமிழாய்வுத் துறையில் என் மேற்பார்வையில் உருவாக்கியது என்றும், அவரது சொந்த முயற்சியால் எழுதப்பெற்றது என்றும், இதற்குமுன் வேறு எந்தப் பட்டத்திற்கும் இவ்ஆய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கிறேன்.

இடம் : அரியலூர்,

நாள் :

துறைத்தலைவர் கையொப்பம் நெறியாளர் கையொப்பம்

முதல்வர் கையொப்பம்

முனைவர் க.தமிழ்மாறன், எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,
உதவிப் பேராசிரியர்,
தமிழாய்வுத் துறை,
அரசு கலைக் கல்லூரி,
அரியலூர்–621 713.

## கருத்துக் களவின்மைச் சான்றிதழ்
## (Plagiarism-Free Certificate)

என் மேற்பார்வையில் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொண்ட இரா.மதன்ராஜ் (பதிவு எண்: 32646/Ph.D.-K6/Tamil/Full Time/October 2015/Dt: 23.09.2015) அவர்கள் தம் ஆய்வேட்டில் சான்றுகளுக்கு மட்டுமே அறிஞர்கள், வல்லுநர்கள் போன்றோர் கருத்துக்களைப் பயன்படுத்தியுள்ளார். அச்சான்றுகள் மிக இன்றியமையா இடங்களில் மட்டும் மேற்கோள்களாகக் காட்டப்பட்டுள்ளன. பல்கலைக்கழக விதிமுறை 10.3இன்படி Urkund (Analysis Result) மென்பொருள் சோதனைக்குட்படுத்தப்பட்டுப் பெறப்பட்ட அறிக்கை D640253154 இவ்ஆய்வேட்டின் இறுதியில் இணைக்கப்பட்டுள்ளது என்று சான்றளிக்கிறேன்.

இடம் : அரியலூர்,

நாள் :

நெறியாளர் கையொப்பம்

**இரா.மதன்ராஜ்,**
முனைவர் பட்ட ஆய்வாளர்,
பதிவு எண்: **32646/Ph.D.-K6/Tamil/Full Time/October 2015/Dt: 23.09.2015,**
தமிழாய்வுத் துறை,
அரசு கலைக் கல்லூரி,
அரியலூர்–621 713.

# ஆய்வாளர் உறுதிமொழி

**சங்க இலக்கியத்தில் சூழலியல்** என்னும் தலைப்பில் அமைந்த இந்த ஆய்வேடு, பாரதிதாசன் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக, அரியலூர், அரசு கலைக் கல்லூரி, தமிழாய்வுத் துறையில், **முனைவர் க.தமிழ்மாறன்** அவர்களின் மேற்பார்வையில், என் சொந்த முயற்சியில் உருவானது என்றும், இந்த ஆய்வேடு இதற்குமுன் வேறு எந்தப் பட்டத்திற்கும் அளிக்கப்படவில்லை என்றும் உறுதி கூறுகிறேன்.

இடம் : அரியலூர்,

நாள் : ஆய்வாளர் கையொப்பம்

# நன்றியுரை

**சங்க இலக்கியத்தில் சூழலியல்** என்னும் பொருண்மையில் முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்ள வாய்ப்பை நல்கிய பெருமைமிகு திருச்சிராப்பள்ளி, பாரதிதாசன் பல்கலைக்கழகத்திற்கு என் நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

என் முனைவர் பட்ட ஆய்விற்கு அனுமதி வழங்கி, கல்விப் பணியில் சிறந்து விளங்குவதுடன், ஆய்வுப் பணிகளுக்கு எப்போதும் முன்னுரிமை வழங்கி வரும் அரியலூர், அரசு கலைக் கல்லூரியின் முதல்வர் **முனைவர் ஜெ.மலர்விழி, எம்.எஸ்சி., எம்.ஃபில்., பி.ஜி.டி.சி.ஏ., பிஎச்.டி.,** அவர்களுக்கும் என் நன்றிகளை உரித்தாக்குகிறேன்.

முனைவர் பட்ட ஆய்வு மாணவராக என்னை ஏற்றுக் கொண்டு ஆய்வு நெறியாளராகக் கல்வியோடு ஒழுக்கத்தையும், நேர்மையையும், தன்னம்பிக்கையும் ஊட்டி நெறிப்படுத்திய அன்பு பேராசிரியர் **முனைவர் க.தமிழ்மாறன், எம்.ஏ., எம்.ஃபில்., பிஎச்.டி.,** அவர்களுக்கு என் நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

ஆய்வு சிறப்பாக அமைந்திட பல்வேறு நூல்களில் உள்ள தரவுகளைச் சேகரிக்க என்னை ஆற்றுப்படுத்திய ஆய்வறிஞர் குழு உறுப்பினர்கள் திருச்சிராப்பள்ளி, ஜமால் முகமது கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைவர் பேராசிரியர் **முனைவர் அ.சையத் ஷாஹிர் ஹசன்** அவர்களுக்கும், அரியலூர், அரசு கலைக் கல்லூரியின் தமிழ்த்துறைப் பேராசிரியர் **முனைவர் ம.இளையராஜா** அவர்களுக்கும் நன்றிகளைத் தெரிவித்து மகிழ்கிறேன்.

ஆய்வு நிகழும் காலத்தில் என்னை ஊக்கப்படுத்திய என் பெற்றோர்கள் **திரு.க.இராயர், திருமதி இரா.சாந்தி** அவர்களுக்கும், சகோதரர் **திரு.இரா.மதன்மோகன்** அவர்களுக்கும், மாமா **எஸ்.ஏ.பழனிவேல், சி.தமிழ்ச்செல்வன்** அவர்களுக்கும், அக்கா **ப.ரெங்கநாயகி** அவர்களுக்கும் மனமார்ந்த நன்றியை உரித்தாக்குகிறேன்.

ஆய்வு காலங்களில் எனக்குத் தரவுகளைச் சேகரிப்பதற்கும், உணவு, உடை இருப்பிடத்திற்கும் உதவிய பேரன்புமிக்க ஆசான்களான **திருமதி கே.சாந்தி, முனைவர் மா.திருவள்ளுவன், முனைவர் வீ.பொய்யாமணி, முனைவர் து.சேகர், முனைவர் து.ரோசி, முனைவர் பி.கரிகாலன், முனைவர் கோ.குணசேகர், முனைவர் தி.ஹேமலதா, முனைவர் வெ.மனோகரன், முனைவர் த.கார்த்திகேயன், முனைவர் பெ.கலைச்செல்வன், முனைவர் கோ.பவானி, முனைவர் கோ.குணசுந்தரி, திரு.வீ.குமார், முனைவர் இரா.இராமதாஸ், திரு.ம.வெங்கடேசன், முனைவர் மு.கு.மகேஸ்வரி, முனைவர் த.நித்யா,**

**முனைவர் ரெ.சின்னப்பா, முனைவர் வீ.கொளஞ்சிநாதன், முனைவர் இரா.கவிதா, முனைவர் நா.பொற்கொடி** *உள்ளிட்ட அனைத்துப் பேராசிரியர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றிகளைத் தெரிவித்துக் கொள்கிறேன்.*

*ஆய்வு காலத்தில் பொருளுதவி செய்த பிற துறைப் பேராசிரியர்களான* **திரு.ஜான்சன் ஃபெர்ணான்டஸ், முனைவர் வெ.கருணாகரன், முனைவர் சி.பாலசுப்பிரமணியன், முனைவர் ஆ.முருகேசன், முனைவர் சா.ஜெயக்குமார், முனைவர் சு.ரவிபால், முனைவர் சு.சுமதி, முனைவர் ப.கென்னடி, திரு.ஆ.இராஜஇராஜ சோழன்** *உள்ளிட்ட அனைத்துப் பேராசிரியர்களுக்கும் நெஞ்சம் நிறைந்த நன்றிகளைக் காணிக்கையாக்குகின்றேன்.*

*ஆய்வேடு செம்மையாக அமைவதற்கு உதவிய நண்பர்களான* **ஆப்பிள் இளங்கோவன், திரு.தி.தர்மராஜ், திரு.வே.செந்தில்குமரன், திரு.சே.சுரேஷ், முனைவர் ப.வேலுசாமி, முனைவர் அ.இளையராஜா, முனைவர் ப.ஆனந்த், முனைவர் செ.செல்வகுமார், முனைவர் மு.முத்துமாறன், முனைவர் இரா.ரவி, முனைவர் அ.விசுவநாதன், முனைவர் ந.செந்தில், திருமதி த.தனுஷ்கோடி, திரு.இரா.ராஜா, திருமதி ஜெ.சங்கீதா, திரு.மு.பிரகாஷ், திருமதி எம்.இ.நூர்ஜகான், திருமதி ச.சரண்யா, திரு.த.செல்வம், திருமதி மா.இந்திராணி, திரு.மு.பாலசுப்பிரமணியன், திரு.க.கார்த்திக்ராஜ், திரு.சா.கார்த்திக், திரு.ப.சண்முகம்** *ஆகியோருக்கு அன்பார்ந்த நன்றிகளை உரித்தாக்குகிறேன்.*

*என் முனைவர் பட்ட ஆய்வு காலத்தில், தொய்வின்றி ஆய்வு செய்வதற்கு உதவித்தொகை வழங்கிய தமிழக அரசின் ஆதிதிராவிடர் நலத்துறைக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.*

*ஆய்வுக் கட்டுரைச் சிறப்புற அமைவதற்கு பல திறனாய்வு நூல்களைத் தந்து உதவிய திருச்சிராப்பள்ளி பாரதிதாசன் பல்கலைக்கழக நூலகத்திற்கும், அரியலூர் அரசு கலைக் கல்லூரியின் நூலகர்* **திரு.சு.சரவணன்** *அவர்களுக்கும் நன்றிகளை உரித்தாக்குகின்றேன்.*

*ஆய்வு தொடர்பான பல்வேறு நூல்களை கொடுத்துதவிய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகத்திற்கும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ், உமா பதிப்பகம், பாரதிதாசன் பதிப்புத் துறை, சிவசக்தி புக் ஸ்டோர்ஸ் போன்ற பதிப்பகங்களுக்கு நன்றியை உரித்தாக்குகிறேன்.*

*ஆய்வேட்டினை நன்முறையில் கணினி அச்சு செய்த தஞ்சாவூர், நாகு கம்ப்யூட்டர்ஸ் நிறுவனத்தார்க்கு என் நெஞ்சார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.*

**இரா.மதன்ராஜ்**

# பொருளடக்கம்

# முன்னுரை

சங்க இலக்கியங்கள் பாட்டும் தொகையும் என்று அழைக்கப்படுகின்றன. தமிழர்தம் வாழ்வியலைச் சங்க இலக்கியங்கள் அழகுற எடுத்தியம்புகின்றன. மிக நுட்பமாகவும், ஆழமாகவும் அக்கால மக்களின் வாழ்வியல் பதிவுகள் சங்க இலக்கியங்களில் வெகுவாகக் காணக்கிடக்கின்றன. இலக்கியங்கள் தாம் படைக்கப்படும் கால, சமுதாயச் சூழலைப் பின்புலமாகக் கொண்டுள்ளன. படைப்பாளர்கள் காலம், இடம், இயற்கை, பண்பாட்டுச் சூழல் முதலியவற்றைப் பின்புலமாகக் கொண்டு கருத்துக்களைப் பதிவு செய்கின்றனர். அத்தகையப் பதிவுகளில் சூழலியல் குறித்தக் கருத்துக்கள் காணக்கிடக்கின்றன.

சங்க இலக்கியங்கள் இயற்கையோடு இயைந்து வாழ்ந்த மக்களின் வாழ்வியல் பின்புலங்களை வெளிப்படுத்துகின்றன. இவை முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகியவை கால, இடச்சூழலை மையமாகக் கொண்டே கட்டமைக்கப்பட்டுள்ளன. மக்கள்தம் வாழ்வியலை வெளிப்படுத்தும் இலக்கியங்கள் அம்மக்களின் சூழலியலையும் பதிவு செய்கின்றன. மக்களின் அகம் மற்றும் புற வாழ்வியல் சூழலியலோடு பின்னப்பட்டிருப்பதைப் புலவர்கள் தெள்ளிதின் அறிந்திருந்தனர். சங்க இலக்கியங்கள் அக்கால மக்களின் வாழ்வியலில் இரண்டறக் கலந்த சூழலியல் காரணிகளாகியத் தாவரங்கள், விலங்குகள், பறவைகள் போன்றவற்றை இயல்பாக வெளிப்படுத்துகின்றன.

இலக்கியங்களைப் பன்முக நோக்கில் அறிவியல் முறையில் ஆராய்ந்து கருத்துக்களை வெளிக்கொண்டுவரும் பாங்கு ஆய்வுலகில் வளர்ந்து வருகின்றது. சங்க இலக்கியத்தைச் சூழலியல் நோக்கில் ஆராய்ந்து வெளிப்படுத்தும் வகையில் இவ்வாய்வு மேற்கொள்ளப்படுகிறது. சூழலியல் நோக்கில் தாவரங்கள், விலங்குகள், பறவைகள் குறித்து ஆராய்ந்து, அவை மக்களின் வாழ்வியலோடு கொண்டிருந்த தொடர்புகளை வெளிக்கொணர்வதாக இவ்வாய்வு அமைகிறது. எதிர்வரும் தமிழ்ச்சமூகம்

மேலும் ஏற்றம் பெறும்வகையில் சங்க இலக்கியங்கள் புலப்படுத்தும் சூழலியல் கருத்துக்களை ஆராய்வது தற்காலச் சூழலில் உகந்ததாக உள்ளது.

## 1. ஆய்வுத் தலைப்பு

"சங்க இலக்கியத்தில் சூழலியல்" என்பது இவ்வாய்வின் தலைப்பாகும்.

## 2. ஆய்வு நோக்கம்

சங்க இலக்கியத்தில் இடம்பெறும் தமிழ்ச் சமூகத்தின் வாழ்வியல், இயற்கையோடு இயைந்த சூழலியலோடு தொடர்புடையதாகக் காணப்படுகிறது. ஐந்நிலப் பாகுபாட்டோடு அக்கால மக்கள் சூழலியலோடு கைகோர்த்த உயர்தர வாழ்க்கையை மேற்கொண்டுள்ளனர். அக்காலத் தமிழ்ச் சமூகத்தின் இயற்கையுடன் இயைந்த வாழ்வியல் கூறுகளைச் சூழலியல் நோக்கில் ஆராய்ந்து வெளிப்படுத்துவது இவ்வாய்வின் நோக்கமாகும்.

## 3. ஆய்வுத் தலைப்புத் தேர்வுக்கான காரணங்கள்

இளங்கலை மற்றும் முதுகலைப் பயிலும் காலங்களில் சங்க இலக்கியத்தில் காணப்படும் இயற்கை வருணனைகள், தாவரங்களின் பயன்பாடுகள், விலங்குகளின் வாழ்க்கை, மலர்களின் சிறப்புப் போன்றன மிகுந்த ஆர்வத்தை ஏற்படுத்தின. சங்க இலக்கியத்தில் இடம்பெறும் சூழலியல் கூறுகளை முழுமையாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற ஆர்வத்தின் காரணமாக இத்தலைப்புத் தேர்வு செய்யப்படுகிறது.

## 4. கருதுகோள்

சங்க இலக்கியத்தில் இடம்பெறும் தாவரங்கள், விலங்குகள், பறவைகள் ஆகியவை மக்கள் வாழ்வியலோடு சூழலியலமைப்பில் இயைந்துள்ளன என்பது இவ்வாய்வின் கருதுகோளாகும்.

### 5. ஆய்வு மூலங்கள்

#### 0.1. முதன்மை ஆதாரங்கள்

சங்க இலக்கியங்களான பாட்டும் தொகையும் எனக் கூறப்படும் பதினெண் மேல்கணக்கு நூல்களாகிய நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு ஆகிய எட்டுத்தொகையின் எட்டு நூல்களும்; திருமுருகாற்றுப்படை, பொருநராற்றுப்படை, சிறுபாணாற்றுப்படை, பெரும்பாணாற்றுப்படை, முல்லைப்பாட்டு, மதுரைக்காஞ்சி, நெடுநல்வாடை, குறிஞ்சிப்பாட்டு, பட்டினப்பாலை, மலைபடுகடாம் ஆகிய பத்துப்பாட்டு நூல்களும் எனப் பதினெட்டு நூல்கள் முதன்மை ஆதாரங்களாக அமைகின்றன.

#### 0.2. துணைமை ஆதாரங்கள்

சங்க இலக்கியங்களின் உரைநூல்கள், சங்க இலக்கியம் தொடர்பான திறனாய்வு நூல்கள், அக்கால மக்களின் சூழலியல் தொடர்பான ஆய்வு நூல்கள், கட்டுரைகள் துணைமை ஆதாரங்களாக அமைகின்றன.

### 6. ஆய்வு எல்லை

எட்டுத்தொகையும், பத்துப்பாட்டுமாகிய தொகுப்பு நூலாகிய சங்க இலக்கியம் ஆய்வு எல்லையாக அமைகிறது.

### 7. ஆய்வு அணுகுமுறை

இவ்வாய்வில் சமூகவியல், பகுப்புமுறை, விளக்கமுறை ஆகிய ஆய்வு அணுகுமுறைகள் கையாளப்பட்டுள்ளன.

### 8. முந்தைய ஆய்வுகள்

'சங்க இலக்கியத்தில் சூழலியல்' என்னும் பொருண்மையில் இதுவரை முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்ளப்பட்டதாக அறிய இயலவில்லை. எனினும் இப்பொருண்மை குறித்துக் கருத்துக்களை வெளிப்படுத்தும் நோக்கில் நூல்கள் வெளிவந்துள்ளன. சு.சந்திரா என்பவர் 'இலக்கியமும் சூழலியலும்' என்ற நூலினைப் படைத்துள்ளார். இதில் இலக்கியப்

படைப்பாக்கத்திற்கானச் சூழலியல் குறித்து விளக்கப்பட்டுள்ளது. மு.கவிதாதேவி என்பவர் ‘நற்றிணை காட்டும் சூழல்கள்’ என்னும் பொருண்மையில் ஐந்திணை பகுப்பு, சமூக அமைப்பு, உளவியல், உயிரியல், வரலாற்றுச் சூழல் குறித்துக் கருத்துரைத்துள்ளார். சிவ.மங்கையர்கரசி என்பவர் ‘சூழலியல் தமிழ்’ என்னும் பொருண்மையில் தமிழ்ச் சமுதாயச் சூழலியல் ஏற்படுத்தியுள்ள குறைபாடுகள் குறித்து விளக்கியுள்ளார். மேற்குறிப்பிட்டுள்ளவற்றிலிருந்து மாறுபட்ட நோக்கில் இந்த ஆய்வு அமைகிறது. தாவரங்கள், விலங்குகள், பறவைகள் ஆகியவற்றின் சூழலியல் மனித வாழ்வியலோடு கொண்டிருந்த தொடர்புகள் குறித்து இந்த ஆய்வு ஆராய்கிறது.

## 9. ஆய்வேட்டின் கட்டமைப்பு

இந்த ஆய்வு முன்னுரை, முடிவுரை நீங்கலாக நான்கு இயல்களாகக் கட்டமைக்கப்பட்டுள்ளது. அவை,

1. சூழலியல் - அறிமுகம்
2. சங்க இலக்கியச் சூழலியலில் தாவரங்கள்
3. சங்க இலக்கியச் சூழலியலில் விலங்குகள்
4. சங்க இலக்கியச் சூழலியலில் பறவைகள்

என்பனவாகும்.

ஒவ்வொரு இயலின் இறுதியில் அவற்றிற்குரிய ஆய்வு முடிவுகளும், சான்றெண் குறிப்புகளும் இடம்பெறுகின்றன. ஆய்வு முடிவுகள் தொகுக்கப்பெற்று நிறைவுரையாகத் தரப்பெற்றுள்ளது. நிறைவுரைக்குப் பின் பின்னிணைப்புகள் இடம்பெறுகின்றன.

## 0.1. சூழலியல் - அறிமுகம்

‘சூழலியல் - அறிமுகம்’ என்னும் முதல் இயலில், சொற்பொருள் விளக்கம், தமிழ் அகராதி கருத்துக்கள், ஆங்கில அகராதி கருத்துக்கள், அறிஞர்கள் கருத்துக்கள், இணையதளக் கருத்துக்கள் விளக்கமாக ஆராயப்பட்டுள்ளது.

### 0.2. சங்க இலக்கியச் சூழலியலில் தாவரங்கள்

*இரண்டாவது இயலான 'சங்க இலக்கியச் சூழலியலில் தாவரங்கள்' என்னும் இயலில் காவல் மரங்கள், ஊர் மன்றங்கள், உறவாக நினைத்தல், வீட்டு உபயோகப் பொருள்கள், போர்க் கருவிச் செய்யும் மரங்கள், இலைகள், புல், பயிரினங்கள், கீரை வகைகள், கிழங்குகள், கடவுள் சூடும் மலர்கள், மன்னர் சூடும் மலர்கள், வீரர்கள் சூடும் மலர்கள், தலைவன் சூடும் மலர்கள், தலைவி சூடும் மலர்கள், பொதுமக்கள் சூடும் மலர்கள், உணவில் மலர்கள், நற்சொல் கேட்டலில் மலர்கள் போன்றன விரிவாகக் கூறப்பட்டுள்ளன.*

### 0.3. சங்க இலக்கியச் சூழலியலில் விலங்குகள்

*'சங்க இலக்கியச் சூழலியலில் விலங்குகள்' என்ற மூன்றாவது இயலில், நீர்வாழ் விலங்குகள், நிலவாழ் விலங்குகள், இருவாழ் விலங்குகள், மனைவாழ் விலங்குகள், போர்க்கள விலங்குகள், தேர்களும் விலங்குகளும், மன்னர் கொடிகளில் விலங்குகள், வேளாண் தொழில்களில் விலங்குகள், உணவுகளில் விலங்குகள், விலங்குகளின் உறுப்புகள் பயன்பாடுகள், காதல் உணர்வில் விலங்குகள், விலங்குகளோடு பேசுதல், உயிரினங்களை நேசித்தல், பரிசுப் பொருள்களில் விலங்குகள், வேட்டையாடுதல், சடங்கு மற்றும் நம்பிக்கைகளில் விலங்குகள், ஏறு தழுவுதல் போன்றன ஆராயப்பட்டுள்ளன.*

### 0.4. சங்க இலக்கியச் சூழலியலில் பறவைகள்

*நான்காவது இயலான 'சங்க இலக்கியச் சூழலியலில் பறவைகள்' என்னும் இயல், கடவுளும் பறவைகளும், காலத்தை அறிவுறுத்தலில் பறவைகள், முன்னறிவிப்புச் செய்தலில் பறவைகள், பறவை இறகுகளின் பயன்பாடுகள், விளையாட்டுகளில் பறவைகள், நிமித்தங்கள் மற்றும் நம்பிக்கைகளில் பறவைகள், உணவும் பறவைகளும், வளர்ப்புப் பறவைகள், தலைவி காதல் உணர்வை வெளிப்படுத்துதலில் பறவைகள், பறவைகளை நேசித்தல், தூது அனுப்புதலில் பறவைகள் போன்றவற்றை விரிவாக ஆராய்கிறது.*

**10. சான்றெண் குறிப்புகள்**

*ஒவ்வொரு இயலின் இறுதியில் சான்றெண் குறிப்புகள் இடம்பெறுகிறது. அவற்றில் ஆய்வுக்குப் பயன்பட்ட நூல்களின் ஆசிரியர் பெயர், நூல் பெயர், பக்க எண் முறையே தரப்பட்டுள்ளன.*

**11. துணைநூற் பட்டியல்**

*துணைநூற் பட்டியல் பகுதியில் இவ்வாய்வுக்குப் பயன்பட்ட நூற்கள், கட்டுரைகள் முதலியவற்றின் பட்டியல்கள் அகரவரிசையில் இடம்பெறுகின்றன. இப்பட்டியல் முறையே ஆசிரியர் பெயர், நூற்பெயர், பதிப்பகம், வெளியான ஆண்டு என்ற முறையில் அமையப் பெறுகிறது.*

**12. பின்னிணைப்பு**

1. *சங்க இலக்கியப் பாடல்களில் தாவரங்கள் பட்டியல்*
2. *சங்க இலக்கியப் பாடல்களில் விலங்குகள் பட்டியல்*
3. *சங்க இலக்கியப் பாடல்களில் பறவைகள் பட்டியல்*
4. *சங்க இலக்கியப் பாடல்களில் தாவரங்கள், விலங்குகள் மற்றும் பறவைகளின் அறிவியல் பெயர்களின் பட்டியல்*

*போன்ற பட்டியல்கள் பின்னிணைப்பில் இடம்பெறுகின்றன.*

# இயல் – 1

# சூழலியல் – அறிமுகம்

## 1.0. முன்னுரை

தமிழ் இலக்கியங்களில் முதன்மையாகவும் கருவூலமாகவும் திகழ்வது சங்க இலக்கியங்கள் ஆகும். பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் மனித வாழ்வின் காதல், வீரம், பண்பாடு, கலாச்சாரம், பழக்கவழக்கம், போர்நெறிமுறைகள் போன்றவற்றைப் பிரதிபலிக்கின்றன. மேலும் அறிவியலோடு தொடர்புடைய வானியல், சூழலியல், சுற்றுப்புறச் சூழல், மேலாண்மை போன்றவையும் சுட்டுகின்றன. சங்க கால மக்கள், அவர்களைச் சூழ்ந்திருந்த தாவரங்கள், விலங்குகள், பறவைகள், நிலம், நீர் என அனைத்தையும் சார்ந்து வாழ்ந்தும் அவற்றைப் போற்றியும் வாழ்ந்தனர். அக்கால மக்கள் இயற்கையை வாழ்வின் முதன்மையானதாகக் கருதி வாழ்ந்துள்ளனர். தனிமனிதனுக்கும் அவனைச் சுற்றியுள்ள உயிருள்ள மற்றும் உயிரற்றப் பொருள்களுக்குமான வாழ்வியல் உறவு வியக்கத்தக்கதாக உள்ளது.

## 1.1. சூழலியல் - சொற்பொருள் விளக்கம்

சூழலியல் என்பதனை ஆங்கிலத்தில் “Ecology” என்று அழைப்பர். Ecology என்னும் சொல் கிரேக்க மொழியைத் தழுவியது. இது “ஆய்கோஸ்” மற்றும் “லோகஸ்” ஆகிய இரண்டு சொற்களாலானது. ஆய்கோஸ் (Oikos) என்னும் சொல் வீடு (House) அல்லது வாழும் இடத்தைக் (Place to Live) குறிக்கிறது. இந்த இரண்டு சொற்களும் இணைந்து ஈக்காலஜி (Ecology) என்ற சொல்லாகத் திரிபு பெற்றுள்ளது. இது பொதுவாக உயிரினங்களை அவை வாழுமிடத்தில் படிப்பது என்று பொருள்படும்.

> Ecology என்ற சொல் விலங்கியல் வல்லுநரான ரெய்ட்டெர் என்பவரால் (1885) முன்மொழியப்பட்டது. இந்தச் சொல் கிரேக்க மொழியிலிருந்து தோன்றியது. Oikos என்பதன் பொருள் குடியிருப்பு இடம் அல்லது குடியகம் (Dwelling place or home) என ஆங்கிலச் சொற்களைக் குறிப்பிடுகிறது. தமிழில் இது சூழலியல் என்று வழங்கப்படுகிறது.

> Logos என்பதன் பொருள் பயில்வு (discourse study) எனப் பொருள்படுகிறது. இப்படி Ecology என்ற சொல் இலக்கிய ரீதியில் தாவரவினங்களையும் விலங்கினங்களையும் உள்ளடக்கிய உயிரினங்களையும் இவை வாழ்ந்து வரும் வசிப்பிடங்களையும் பயில்வதற்கான பொருளைத் தருகிறது[1]

*என்று ப.சந்திரசேகரன் குறிப்பிடுகிறார்.*

## 1.2. சூழலியல் - தமிழ் அகராதி கருத்துகள்

*சூழலியல் என்ற சொல்லின் பொருள் குறித்தும் அதன் சிறப்புக் குறித்தும் அகராதிகள் பல்வேறு விளக்கங்களைத் தந்துள்ளன.*

### 1.2.1. பிரிட்டானிகா தகவல் களஞ்சியம்

*சூழலியல் என்பது,*

> உயிரினங்களுக்கும் அவற்றின் சூழலுக்கும் இடையிலுள்ள தொடர்புகளைப் பற்றிய ஆராய்ச்சி. உடலியங்கியல் சூழலியல் என்பது தனிப்பட்ட உயிரினங்களுக்கும் அவை வாழும் சூழலின் இயற்பியல் மற்றும் வேதியியல் பண்புகளுக்கும் இடையே உள்ள தொடர்புகளின் மீது கவனம் செலுத்துகிறது. தனிப்பட்ட உயிரினங்கள் சூழலுக்கு ஏற்ப எவ்வாறு எதிர்வினை ஆற்றுகின்றன என்பதை அடிப்படையாகக் கொண்டு அந்த உயிரினங்களின் நடத்தைப் பற்றி நடத்தைச் சூழலியல் நிபுணர்கள் அறிந்து கொள்கின்றனர். விலங்கு, தாவர இனத்தொகை அதிகரித்தல் மற்றும் எண்ணிக்கை போன்றவற்றைப் பாதிக்கும் முறைகள் பற்றி மக்கள் தொகை மரபியல் உள்ளடக்கிய இனத்தொகை சூழலியல் ஆராய்கிறது. தாவர மற்றும் விலங்குச் சமூகங்களின் அமைப்பையும் செயல்பாடுகளையும் பற்றிச் சமூகச் சூழலியல் ஆராய்கிறது. பழைய கற்காலச் சூழலியல் புதைபடிவ உயிரினங்களின் சூழலியல் பற்றிய ஆராய்ச்சியாகும். சூழலியல் நிபுணர்கள் பெரும்பாலும் குறிப்பிட்ட வகுப்பு, தொகுப்புக் குழுக்களை அறியவே முனைகின்றனர். செயல்முறைச் சூழலியல் விலங்குகள் மற்றும் பயிர்களின் எண்ணிக்கைத் தொகையை நிர்வகிக்கச் சூழலியல் கோட்பாடுகளைப் பயன்படுத்துகிறது. நடைமுறைப் பிரச்சனைகளை உருவாக்கி

அவற்றுக்கான தீர்வுகளைச் சில இணையான பொதுச்சூழல் மாதிரிகளைக் கோட்பாட்டுச் சூழலியல் நிபுணர்கள் வடிவமைப்பது உண்டு[2]

*என்று பிரிட்டானிகா தகவல் களஞ்சியம் விளக்கம் தருகிறது.*

### 1.2.2. க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி

*சூழலியல் என்ற சொல்லிற்கு,*

மனிதர்கள் வாழும் இடத்தைச் சுற்றியிருக்கும் இயற்கைப் பொருள்களின் தொகுதி, மனிதர்களின் செயலுக்கான மன அம்சங்களின் தொகுப்பு[3]

*என்று க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி கூறுகிறது.*

### 1.2.3. கல்வியியல் கலைச்சொல் விளக்க அகராதி

*சூழலியல் என்பதற்கு,*

உயிரிகளுக்கும் அவற்றின் சுற்றுப்புறத்துக்கும் இடையிலான உறவு பற்றிய இயல் ஆகும்[4]

*என்று செ.சுப்பிரமணியன் தனது அகராதியில் குறிப்பிடுகின்றார்.*

### 1.2.4. நர்மதாவின் ஆங்கிலம் - ஆங்கிலம் - தமிழ் அகராதி

*சூழலியல் என்ற சொல்லிற்கு,*

சூழ்நிலை, சுற்றுப்புறத்திற்கு ஏற்றபடி அமைந்திருக்கும் காற்று, நிலம், நீர், விலங்குகள், தாவரங்கள், பிற உயிரினங்கள் பற்றிய ஆராய்ச்சி அறிவு[5]

*என்று நர்மதா தமிழ் அகராதி விளக்கமளிக்கின்றது.*

### 1.2.5. ஆங்கிலம் - தமிழ் பேரகராதி

*சூழலியல்* (Ecology) *என்ற சொல், "உயிரின வாழ்க்கைச் சூழல் ஆய்வு நூல்"*[6] *என்று எ.சிதம்பர செட்டியார் குறிப்பிடுகின்றார்.*

### 1.2.6. ஆங்கிலம் - தமிழ்ச் சொற்களஞ்சியம்

*சூழலியல் என்பது "உயிரின வாழ்க்கைச் சூழல் ஆய்வு நூல்"[7] என்று குறிப்பிடுகின்றது.*

### 1.2.7. Mega Deluxe Dictionary

*சூழலியல் என்ற சொல்லிற்கு,*

> மக்கள், தாவரங்கள், விலங்குகள் ஆகியவை தங்களுக்கிடையே கொண்டுள்ளத் தொடர்புகள் மற்றும் அவைகள் தங்களுடைய சுற்றுப்புறச் சூழ்நிலையுடன் கொண்டுள்ளத் தொடர்புகளும், மேற்கண்டவைகள் பற்றிய அறிவியல் ஆய்வு[8]

*என்று* Mega Deluxe Dictionary *குறிப்பிடுகின்றது.*

### 1.2.8. Mega Lifco Dictionary

Mega Lifco Dictionary *சூழலியல் என்ற சொல்லிற்கு, "சூழ்நிலை சுற்றுப்புறத்திற்கு ஏற்றவாறு அமையும் உயிரினங்கள் பற்றிய ஆராய்ச்சி அறிவு"[9] என்று குறிப்பிடுகின்றது.*

### 1.2.9. The Great Lifco Dictionary

*சூழலியல் என்பது "சூழ்நிலை சுற்றுப்புறத்திற்கு ஏற்றவாறு அமையும் உயிரினங்கள் பற்றிய ஆராய்ச்சி அறிவு"[10] என்று* The Great Lifco Dictionary *கூறுகின்றது.*

### 1.2.10. கௌரா ஆங்கிலம் - தமிழ் அகராதி

*சூழலியல் என்பதற்கு கௌரா தமிழ் அகராதி "சூழ்நிலை இயல், சூழலியல்"[11] என்று குறிப்பிடுகின்றது.*

*சூழலியல் என்பது மனிதனுக்கும் விலங்குகள், பறவைகள், தாவரங்கள், நிலம், நீர், காற்றுப் போன்றவற்றுக்கும் இடையேயான உறவுகளைக் குறிப்பிடுவதாகும் என்பதனைத் தமிழ் அகராதிகள் தெளிவுறுத்துகின்றன.*

### 1.3. சூழலியல் - ஆங்கில அகராதி கருத்துகள்

சூழலியல் (Ecology) என்ற சொல்லிற்குக் கீழ்கண்டவாறு ஆங்கில அகராதிகள் விளக்கம் தருகின்றன.

#### 1.3.1. Oxford Advanced Learners Dictionary

சூழலியல் (Ecology) என்ற சொல்லிற்கு, "The relation of plants and Living creatures to each other and to their surroundings"[12] என்று Oxford Dictionary குறிப்பிடுகின்றது.

#### 1.3.2. DK Illustrated Oxford Dictionary

சூழலியல் என்ற சொல்லிற்கு, "The branch of biology concerned with the relations of organisms to one another and to their surroundings"[13] என்று DK Illustrated Oxford Dictionary குறிப்பிடுகிறது.

#### 1.3.3. The Great Lifco Dictionary

The Great Lifco Dictionary என்ற ஆங்கில அகராதி சூழலியல் என்பதற்கு, "Study of Living Things in relation to their environment"[14] என்று விளக்கம் தருகிறது.

#### 1.3.4. நர்மதா ஆங்கில - தமிழ் அகராதி

சூழலியல் என்னும் சொல்லிற்கு, "The relationships between the air. land, water, animals, plants, etc. of the particular or the scientific study of this"[15] என்று நர்மதா ஆங்கில அகராதி விளக்கம் தருகிறது.

#### 1.3.5. Cambridge University Press

Ecology என்பதனை Cambridge Dictionary, "The relationships between the air, land, water, animals, plants, etc. usually of a particular area, or the scientific study of this"[16] என்று குறிப்பிடுகின்றது.

### 1.3.6. Mega Lifco Dictionary

*சூழலியல் என்பதை* "Study of Living Things in relation of their environment"[17] *என்று* Mega Lifco Dictionary *குறிப்பிடுகின்றது.*

*சூழலியல் என்பது மனிதனுக்கும் அவனைச் சுற்றியுள்ள தாவரங்கள், விலங்குகள், பறவைகள், நிலம், நீர், காற்று, தட்பவெப்பநிலை போன்றவற்றிற்கும் இடையேயான தொடர்புநிலை என்று அகராதிகள் உறுதி செய்கின்றன.*

## 1.4. சூழலியல் - அறிஞர்கள் கருத்துகள்

*சூழலியல் என்பதற்குப் பல அறிஞர்கள் பல்வேறு வரையறைகளைக் குறிப்பிட்டுள்ளனர். நாகரிகம் வளராத காலம் தொட்டே ஒவ்வொரு மனிதனும், உயிர் வாழ்வதற்கு இயற்கையின் ஆற்றல்களையும், அவனைச் சுற்றியுள்ள தாவரங்கள், விலங்குகள், பறவைகள் போன்ற சூழ்நிலைகளைப் பற்றியும் தெளிவான அறிவைப் பெற்றிருந்தனர். சூழலியல் குறித்துப் பல்வேறு அறிஞர்களும் வரையறை செய்துள்ளனர்.*

### 1.4.1. எர்னஸ்ட் ஹேக்கல்

*எர்னஸ்ட் ஹேக்கல் என்ற ஜெர்மனிய நாட்டு அறிஞர் தான்,*

> 1869 ஆம் ஆண்டில் இந்த அறிவியலுக்குச் சூழலியல் (Ecology) என்னும் பெயரைச் சூட்டினார். ஆனாலும் 1900 ஆம் ஆண்டிற்குப் பின்னரே இது உயிரியலில் ஒரு தனிப்பிரிவாக அங்கீகரிக்கப்பட்டு, விரிவடைந்துள்ளது[18]

*என்று விளக்கம் தந்தார்.*

### 1.4.2. ரெய்ட்டர்

*ரெய்ட்டர் என்ற கிரேக்க அறிவியல் வல்லுநர் சூழலியல் என்பது,*

> உயிரினங்களுக்கும் சூழ்நிலைக்கும் இடையேயுள்ள தொடாப்பு உறவுகளை விளக்கும் அறிவியல் கிளை[19]

*என்று குறிப்பிடுகின்றார்.*

### 1.4.3. கெண்டே

*கெண்டே என்ற அறிஞர் சூழலியலை,*

> விலங்குகளுக்கும் தாவரங்களுக்கும் இடையேயுள்ள உறவுகளையும் மற்றும் இவை சூழலியலோடு கொண்டுள்ள உறவுகளையும் விளக்கும் அறிவியல் கிளை[20]

*என்று குறிப்பிடுகின்றார்.*

### 1.4.4. ஓடம்

*ஓடம் என்பவர், "சூழலியலானது அமைப்பு மற்றும் அதன் செயல்பாடுகளைப் பற்றி படிக்கும் அறிவியல்"[21] என்று விளக்கம் தருகின்றார். மேலும், "சூழலியல் உயிரினங்களுக்கும் சூழ்நிலைக்கும் இடையே உள்ள உறவுகளை விளக்குகிறது"[22] என்றும் விளக்கம் தருகின்றார்.*

### 1.4.5. ஹன்ஸ் ரெய்ட்டர்

*சூழலியல் என்பதற்கு ஹன்ஸ் ரெய்ட்டர் என்ற அறிஞர்,*

> ஓர் உயிரினத்திற்கும் அதனைச் சூழ்ந்துள்ள உயிருள்ள மற்றும் உயிரற்ற காரணிகளுக்கும் இடையிலான உறவு முறையாகும்[23]

*என்று விளக்கம் தருகின்றார்.*

### 1.4.6. ஹெக்டே

*சூழலியல் என்பதனை ஹெக்டே என்ற அறிஞர்,*

> சூழ்நிலையியல் விலங்குகளுக்கும் தாவரங்களுக்கும் உள்ள உறவுகளையும் இவை சூழ்நிலையோடு கொண்டுள்ள உறவுகளையும் விளக்கும் அறிவியல் பிரிவு[24]

*என்று குறிப்பிடுகின்றார்.*

### 1.4.7. சார்லஸ் எல்டன்

*சார்லஸ் எல்டன் என்ற அறிஞர் சூழலியல் என்பது, "இயற்கையின் அறிவியல் வரலாறு"[25] என்று குறிப்பிடுகின்றார்.*

### 1.4.8. இணையத்தளம்

*சூழலியல் என்பது,*

> உயிர் வாழ்க்கையின் பரவல் பற்றியும், உயிரினங்களுக்கும் அவற்றின் இயற்கைச் சூழலுக்கும் இடையிலான இடைவினைகள் பற்றியும் அறிவியல் அடிப்படையில் ஆய்வு செய்யும் துறையாகும்[26]

*என்று விக்கிபீடியா இணையத்தளம் விளக்கம் அளிக்கிறது.*

*தாவரங்கள், விலங்குகள், பறவைகள், நீர்நிலைகள், நிலம், நீர், காற்று, தட்பவெப்ப நிலை போன்றவற்றுக்கும் தனிமனிதனுக்குமான உறவுநிலை மனித வாழ்வை நிர்ணயிப்பதை அறிஞர்கள் தெளிவுபடுத்துகின்றனர்.*

## 1.5. தமிழ் அறிஞர்கள் கருத்துகள்

*சூழலியல் குறித்துத் தமிழ் அறிஞர்கள் விளக்கம் தந்துள்ளனர். சூழலியல் காரணிகள் மனிதனோடு இரண்டறக் கலந்து காணப்படுவதை எடுத்து இயம்பியுள்ளனர்.*

### 1.5.1. சிவ.மங்கையர்கரசி

*சூழலியல் என்பது, "மனிதனைச் சுற்றியுள்ள உயிரின உறைவிடமான அனைத்தும் சுற்றுச்சூழல்* (Ecology) *ஆகும்"*[27] *என்று குறிப்பிடுகின்றார். மேலும்,*

> குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்னும் ஐந்திணைகளையும் சங்கத் தமிழர்களின் உயிர்ச்சூழல் வட்டம் (Ecological Zones)[28]

*என்றும் குறிப்பிடுகிறார்.*

### 1.5.2. சு.சந்திரா

*சு.சந்திரா,*

> வாழிட வளத்திற்குச் செடி, கொடி, மரங்கள், மலர்கள், உணவு விளைபொருள்கள் மட்டுமல்ல, விலங்குகளும், பறவைகளும்கூட சூழல் சங்கிலியின் உறுப்பினர்களாக உள்ளனர்[29]

*என்று விளக்கம் தருகிறார்.*

### 1.5.3. பால்கிரேவ்

*இலக்கியத் திறனாய்வாளர் பால்கிரேவ்,*

> இயற்கையும் மனிதனும் மணம் செய்து கொள்ளும் உறவைச் சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது[30]

*என்று கூறுகின்றார்.*

### 1.5.4. மு.கவிதாதேவி

*மு.கவிதாதேவி,*

> சங்க கால மாந்தர்கள் தங்களது உடலும் உள்ளமும் சிறந்து விளங்க இயற்கைச் சூழலில் வாழ்ந்தனர். இலக்கியம் வளர்ந்து நிலைக்களனாக எழுவதற்கு மக்கள் பண்பாடும், இயற்கையும் தேவைப்படுகிறது. இயற்கையை விடுத்து மக்களையும் மக்களை விடுத்து இயற்கையையும் பாட இயலாது[31]

*என்று குறிப்பிடுகின்றார். மேலும்,*

> தாவர இன வகைகளான மரம், செடி, கொடி, மலர் ஆகியவற்றின் வாயிலாக மாந்தர்தம் வாழ்வில் ஏற்படுகின்ற தாக்கத்தை இயற்கைச் சூழல் விளக்கிக் கூறுகின்றது[32]

*என்றும் 'நற்றிணை காட்டும் சூழல்கள்' என்னும் நூலில் குறிப்பிடுகின்றார்.*

### 1.5.5. கு.வி.கிருஷ்ணமூர்த்தி

> தமிழ் மக்கள் சூழலைப் பேணிக்காத்தனர். சூழல் பேணப்பட்டால்தான் தாமும் காக்கப்படுவோம் என்பதை முற்றிலும் உணர்ந்திருந்தனர்[33]

*என்று கு.வி.கிருஷ்ணமூர்த்தி விளக்குகின்றார்.*

### 1.5.6. மு.வரதராசன்

*மு.வரதராசன்,*

> பழங்கால மனிதனின் பழக்க வழக்கங்கள், கொள்கை குறிக்கோள்கள், இயல்செயல்கள் யாவும் இயற்கைச் சூழ்நிலையில் தான் உருவாக்கப்பட்டன[34]

*என்று 'பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை' என்னும் நூலில் குறிப்பிடுகிறார்.*

### 1.5.7. கி.இரா.சங்கரன்

*கி.இரா.சங்கரன்,*

> இயற்கையினைத் தகவமைத்துக் கொண்டு வாழும் சமூகமே வரலாற்றில் இயற்கைச் சூழலைத் திணை என்று பகுத்தறிந்து அந்நிலைகளுக்குத் தக்கபடி சமூக நிகழ்வுகளை நிறுவனப்படுத்தியுள்ளது[35]

*என்று 'இரும்புக்காலமும் சங்க இலக்கியமும்' என்னும் நூலில் குறிப்பிடுகின்றார்.*

### 1.5.8. பி.நசீம்தீன்

*சூழலியல் என்பதற்கு பி.நசீம்தீன்,*

> இயற்கை என்பது மனிதனைச் சூழ்ந்துள்ள சூழல். அது அவனது ஈடுபாட்டுக்கு இடமளித்து அவனுக்கு ஆசிரியனாகவும் வழிப்படுத்தும் நூலாகவும் அமைவது புலன்களால் அறியக்கூடியதும் மனிதனோ, அவன் படைப்போ அல்லாததும் ஆகும்[36]

*என்று விளக்கம் தருகின்றார்.*

### 1.5.9. ந.முருகேச பாண்டியன்

*'மறுவாசிப்பில் செவ்வியல் இலக்கியப் படைப்புகள்' என்னும் நூலில் ந.முருகேச பாண்டியன்,*

> பண்டைத் தமிழர் குறித்த பதிவுகளுக்குச் சங்க இலக்கியம் பிரதிகள் பின்புலமாக விளங்குகின்றன. நிலமும் பொழுதும் தமிழர் மனங்களுக்குள் தகவமைக்கப்பட்டது. இயற்கைச் சார்ந்து விரியும் எழில்மிகு காட்சிகள் சூழலியல் அறிதலைப் புலப்படுத்துகின்றன[37]

*என்று விளக்கம் தருகிறார்.*

*சூழலியல் என்பது மனிதனுக்கும் தாவரங்கள், விலங்குகள், பறவைகள் இவற்றிற்கும் இடையேயுள்ள தொடர்புகள் என்பதை தமிழ் அறிஞர்களும் உறுதிசெய்கின்றனர்.*

## 1.6. தொகுப்புரை

மரங்கள், செடிகள், கொடிகள், விலங்குகள், பறவைகள், தட்பவெப்பநிலை போன்றவைக்கும் மனிதனுக்கும் இடையேயுள்ள உறவுமுறை அல்லது தொடர்புநிலைச் சூழலியல் ஆகும்.

சூழலியல் குறித்த விளக்கங்களை பிரிட்டானிகா தகவல் களஞ்சியம், க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, கல்வியியல் கலைச்சொல் அகராதி, ஆங்கிலம்-தமிழ்ப் பேரகராதி, லிப்கோ அகராதி, கௌரா ஆங்கிலம்-தமிழ் அகராதி எனத் தமிழ் அகராதிகளும், Oxford Dictionary, Lifco Dictionary, Cambridge Dictionary போன்ற ஆங்கில அகராதிகளும் விளக்கியுள்ளன. சூழலியல் என்பதை எர்னஸ்ட் ஹேக்கல், ரெய்ட்டர், கெண்டே, ஓடம், ஹெக்டே, சார்லஸ் எல்டன் போன்ற அறிஞர்கள் வரையறை செய்துள்ளனர். இணையத்தளங்களும் விளக்கம் அளித்துள்ளன.

சூழலியல் என்பது மனிதனுக்கும் இயற்கைக் காரணிகளான மரங்கள், செடிகள், கொடிகள், பறவைகள், விலங்குகள், நிலம், நீர், காற்று, தட்பவெப்பநிலை போன்றவற்றிற்கும் இடையேயுள்ள உறவு முறை அல்லது தொடர்புநிலை என்பதே பெரும்பான்மையான அகராதிகளின், அறிஞர்களின் கருத்தாகும். மனிதனுக்கும் அவன் வாழும் சுற்றுச்சூழலில் அமைந்துள்ள தாவர, விலங்கு, பறவை, ஐம்பூதங்கள் போன்றவற்றிற்குமான தொடர்பு காரணிகள் சூழலியல் என்றாகிறது. மனித வாழ்வை மேம்படுத்துவதாகச் சூழலியல் கருத்துகள் அமைந்துள்ளன.

**சான்றெண் குறிப்புகள்**


1. ப.சந்திரசேகரன், **சுற்றுச்சூழல் அறிவியல்,** *ப.1.*
2. **பிரிட்டானிகா தகவல் களஞ்சியம், தொகுதி III,** *ப.189.*
3. **க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி,** *ப.466.*
4. செ.சுப்பிரமணியன், **கல்வியியல் கலைச்சொல் விளக்க அகராதி,** *ப.93.*
5. **நர்மதாவின் ஆங்கிலம்-ஆங்கிலம்-தமிழ் அகராதி,** *ப.287.*
6. எ.சிதம்பர செட்டியார், **ஆங்கிலம்-தமிழ்ப் பேரகராதி,** *ப.338.*
7. **ஆங்கிலம்-தமிழ்ச் சொற்களஞ்சியம்,** *ப.338.*
8. **Mega Deluxe Dictionary,** p.302.
9. **Mega Lifco Dictionary,** p.390.
10. **The Great Lifco Dictionary,** p.322.
11. **கௌரா ஆங்கிலம்-தமிழ் அகராதி,** *ப.114.*
12. **Oxford Advanced Learners Dictionary,** p.383.
13. **DK Illustrated Oxford Dictionary,** p.217.
14. **The Great Lifco Dictionary,** p.322.
15. **நர்மதாவின் ஆங்கிலம்-ஆங்கிலம்-தமிழ் அகராதி,** *ப.287.*
16. **Cambridge University Press,** p.396.
17. **Mega Lifco Dictionary,** p.390.
18. லிவிங்ஸ்டன், **தாவரச் சூழலியல்,** *ப.2.*
19. பெர்னிஸ் ஆனந்த ராஜ், **சூழலியல்,** *ப.1.*
20. மேலது., *ப.1.*
21. லிவிங்ஸ்டன், **தாவரச் சூழலியல்,** *ப.3.*
22. பெர்னிஸ் ஆனந்த ராஜ், **சூழலியல்,** *ப.1.*
23. கீற்று, இணையத்தளம்.
24. மேலது.,
25. மேலது.,
26. விக்கிபீடியா, இணையத்தளம்.
27. சிவ.மங்கையர்க்கரசி, **சூழலியல் தமிழ்,** *ப.16.*
28. மேலது., *ப.25.*

29. *சு.சந்திரா*, **இலக்கியமும் சூழலியலும்,** *ப.38.*
30. *மு.கவிதாதேவி*, **நற்றிணை காட்டும் சூழல்கள்,** *ப.1.*
31. *மேலது., ப.2.*
32. *மேலது., ப.6.*
33. *கு.வி.கிருஷ்ணமூர்த்தி*, **தமிழரும் தாவரமும்,** *ப.30.*
34. *மு.வரதராசன்*, **பழந்தமிழ் இலக்கியத்தில் இயற்கை,** *ப.36.*
35. *கி.இரா.சங்கரன்*, **இரும்பு காலமும் சங்க இலக்கியமும்,** *ப.9.*
36. *மு.அருணாசலம்*, **தமிழச்சியின் வனப்பேச்சில் மண்ணும் மனித உறவுகளும்,** *ப.44.*
37. *ந.முருகேச பாண்டியன்*, **மறுவாசிப்பில் செவ்வியல் இலக்கியப் படைப்புகள்,** *ப.67.*

# இயல் – 2

# சங்க இலக்கியச் சூழலியலில் தாவரங்கள்

## 2.0. தாவரங்கள்

உயிரினச் சங்கிலியில் மனிதனோடு மிக நெருங்கிய உறவு கொண்டது தாவரங்களாகும். பூமியின் பசுமைக்கும், மழை வளத்திற்கும், உயிரினங்களின் உறைவிடத்திற்கும் இன்றியமையாத காரணியாக அமைந்திருப்பது தாவரங்களாகும். மனிதனின் வாழ்வியல் உணவிற்கும், உடைக்கும், இருப்பிடத்திற்கும் பெரிதும் துணைநிற்பது தாவரங்களாகும். சங்ககாலத் தமிழர் வாழ்வியலில் தாவரங்கள் மிக இன்றியமையாத இடத்தைப் பெற்றுள்ளன. தாவரங்களின் பயன்பாடின்றி மனித வாழ்வியல் சூழலியலே இல்லை என்னும் வகையில் தாவரங்கள் இடம்பெற்றுள்ளன. சங்ககால மக்கள் தம் வாழ்வியலின் அகச்சூழலியலிலும், புறச் சூழலியலிலும் தாவரங்கள் இழையோடி காணப்படுகின்றன. சங்க இலக்கியத்தில் தாவரங்கள் தொடர்புடைய மக்களின் அன்றாட வாழ்வியல் பெரிதும் பதிவாகியுள்ளன.

## 2.1. மரங்கள்

சங்க இலக்கியங்களில் மரங்கள் மதிப்பிற்குரியனவாகப் போற்றப்பட்டுள்ளன. தொல்காப்பியர் குறிப்பிடும் கருப்பொருள்களில் மரம் இன்றியமையாத இடத்தைப் பெறுகிறது. மன்னனின் மதிப்புமிகு முரசும், காவல் அரணும், உணவு மற்றும் பாதுகாப்பும் மரங்களை அடிப்படையாகக் கொண்டே அமைந்திருந்தன. இறைவன் உறையும் இடமாகவும் மரங்கள் அன்று முதல் இன்று வரை நம்பப்படுகிறது. உணவு மற்றும் வாழ்வியல் இருப்பிடமாக மரங்கள் விளங்கியுள்ளன. சங்க கால மக்கள் வாழ்வியல் சூழலில் மரங்கள் பெரும் பங்கை வகித்துள்ளன.

### 2.1.1. மூங்கில் மரம்

சங்க காலத்தில் மிகுதியாகக் காணப்படுகின்ற மரங்களில் மூங்கில் மரமும் ஒன்றாகத் திகழ்கிறது. காடுகளுக்குப் பசுமையான காட்சியினையும் கேட்பதற்கு இனிமையான ஓசையினையும் கொடுப்பது மூங்கில் மரமாகும்.

இந்த தாவரம் புல் வகையினைச் சேர்ந்தது என்று தொல்காப்பியர் குறிப்பிடுகிறார். ஆனால் மக்கள் மரமாகவே கருதுகின்றனர். இந்த மரம் மனிதர்களுக்கு உணவு எடுத்துச் செல்வதற்கும், கள்ளைக் குடிப்பதற்கும், சிலம்பம், வில், பரண், தூண்டில், புல்லாங்குழல், வீடு கட்டுதல் போன்றவற்றிற்கும் மக்கள் பயன்படுத்தி வந்துள்ளனர். மூங்கில் மரங்கள் நிறைந்த இயற்கையோடு இயைந்த சூழலியல் தொடர்புடன் அக்கால மக்கள் வாழ்வை மேற்கொண்டனர். இதன் தாவரவியல் பெயர் *"Bambusa arundinaecea"*[1] என்பதாகும்.

### 2.1.1.1. வேறு பெயர்கள்

மூங்கில் மரத்திற்கு,

நெட்டில், நேடல், திருடகிரந்தி, வங்கியம், இருசு, திருணகேது, மசுக்கரம், அமை, தோல், புனை, புட்பகாதகம், போல், மது திருணம், விண்பல், முந்துள், வேயல், இயலபலம், கார்முகில், தூதனம், சந்தில் வெதிர், தனித்திருமம், தட்டை, சடம் சதீசம், சீதம், கிளை, கண்கணு, ஓங்கல், வெதிரம், மிருத்தியுபவை, மிருத்திவீசம், முத்துளம், வேணு, விண்பகல், விவரநாலிகை, வேய், வேரல்[2]

என்று பலப் பெயர்களை சா.அனந்தகுமார் பட்டியலிடுகிறார்.

### 2.1.1.2. மூங்கில் குழாய்கள்

பண்டையத் தமிழர் உணவினை நீண்ட தூரம் கொண்டு செல்வதற்கு மூங்கில் குழாய்களைப் பயன்படுத்தினர். மூங்கில் கணுக்களே மூங்கில் குழாய்கள் ஆகும். அவற்றில் உணவு, கள், மலர் போன்றவற்றை வைத்துப் பயன்படுத்தினர். இதனை,

.... .... ....கோவலர்
மழவிடைப் பூட்டிய குழாஅய்த் தீம்புளி
செவிஅடை தீரத் தேக்கிலைப் பாக்கும்[3]

என்று அகநானூற்றுப் பாடல் தெரிவிக்கின்றது. கோவலர் மூங்கில் குழாயில் புளிச்சோற்றை அடைத்துப் புதியோருக்குக் கொடுப்பார்கள். இன்றும் நாகரீக வளர்ச்சியில் மக்கள் உணவு எடுத்துச் செல்லும் உணவு பெட்டி (Lunch Box) பயன்படுத்துகின்றனர். கேரளாவில் வாழ்கின்ற மக்கள் உணவுப்

*பொருளாகியப் புட்டுகளை மூங்கில் குழாயில் தயார் செய்து சுடச்சுட வழங்குவர். அதனை 'மூங்கில் புட்டு' என்று அழைப்பர். இதனை,*

.... .... ஈனல் எண்கின்
தோடுசின்ன உரீஇ உண்ட மிச்சில்
பைங்குழைத் தழையர் பழையர் மகளிர்
கண்திறள் நீள் அமைக் கடிப்பின் தொகுத்து
குன்றகச் சிறுகுடி மறுகு தொறும் மறுகும்[4]

*என்று அகநானூற்றுப் பாடலிலும்,*

கோலொருகைக் கொண்டு கடைக்
காலுமொரு கை தூக்கிக்
கோனேரிக் கோன் ஆட்டுக்கிடை
கொண்டு வந்தான்[5]

*என்னும் முக்கூடற்பள்ளு பாடலிலும் காணமுடிகிறது. மகளிர் மூங்கில் குழாயில் இருப்பை மலர்களை வைத்துக் கொண்டு மலையருகில் காணப்படும் சிற்றூர்களில் விற்றதையும், கோவலர்களுக்குப் பால் கறக்கும் பாத்திரமாகவும் பயன்படுத்தியச் சூழலையும் அறியமுடிகிறது.*

இரண்டு கணுவை வெட்டினால் மூங்கில் பாத்திரம் கிட்டும். பழங்குடி மக்களிடம் வேலைப்பாடுள்ள மூங்கில் பாத்திரத்தைப் பார்க்கலாம்[6]

*என்று மூங்கில் குழாய்களின் பயன்பாட்டை அரிஸ்டாட்டில் குறிப்பிடுகிறார்.*

### 2.1.1.3. கள் அருந்துதல்

*சங்க இலக்கியங்களில் மக்களின் உணவுப் பொருளாகக் கள், தேன் போன்றவை இருந்துள்ளன. மூங்கில் குழாய்களில் கள்ளையும் தேனையும் பருகி இன்புற்ற வாழ்வை வாழ்ந்தனர். இதனை,*

.... .... கமழ்நறுந் தீம்கனி
பயிர்ப்புறப் பலவின் எதிர்ச்சுளை அளைஇ
இறாளொடு கலந்த வண்டு மூசு அரியல்
நெடுங்கண் ஆடு அமைப் பழுநி கடுந்திறல்
பாப்புக் கடுப்பு அன்ன தோப்பி வான்கோட்டுக்
கடவுள் ஓங்கு வரைக்கு ஓக்கி குறவர்
முறித்தழை மகளிர் மடுப்ப[7]

என்று அகநானூற்றுப் பாடல் குறிப்பிடுகிறது. கோடைக் காலத்தில் குழாயில் அடைத்துப் பதப்படுத்தப்பட்ட கள்ளினை மலையில் வாழும் மகளிர்களும், குறவர்களும் உண்டனர். இவர்களின் வாழ்வியலில் மூங்கில் குழாய்கள் கள்ளும் தேனும் பருக பயன்பட்ட சூழலியலை அறியமுடிகிறது.

> மானுட இனம் மண்பாண்டம் என்பதை உருவாக்கக் கற்றுக் கொள்வதற்கு முன் நீரை எடுத்துச் செல்ல, உணவு சமைக்க, பொருட்களைப் பாதுகாக்க எனப் பல வழிகளில் மூங்கில்தான் பயன்பட்டது[8]

என்று ஆர்.கே.பாரதநேசன் மூங்கில் மரத்தின் தனித்துவத்தைக் குறிப்பிடுகின்றார். மேலும்,

அம்பணை விளைந்த தேக்கட் தேறல்
வண்படு கண்ணியர் மகிழும் சீறூர்[9]

என்று அகநானூறும்,

குறி இறைக் குரம்பைக் குறவர் மாக்கள்
வாங்கு அமைப் பழுனிய தேறல் மகிழ்ந்து[10]

என்று புறநானூறும்,

சாறு அயர்ந் தன்ன கார் அணி யாணர்த்
தூம்பு அகம் பழுனிய தீம்பிலி மாந்தி[11]

என்று பதிற்றுப்பத்தும்,

திருந்து அமை விளைந்த தேக்கள் தேறல்[12]

என்று மலைபடுகடாம் பாடலும் குறிப்பிடுகின்றன. ஆண்கள், பெண்கள் அனைவரும் மூங்கில் குழாயில் கள்ளை உண்டு மகிழ்வோடு வாழ்ந்த சூழலியல் தொடர்பான வாழ்வைக் காணமுடிகிறது.

### 2.1.1.4. மூங்கில் வேலிகள்

மக்கள் தங்களுடைய தினைப் புனத்தைப் பாதுகாக்க சுற்றி வேலிகளை அமைத்தனர். இத்தகைய வேலிகள் மூலம் விலங்கினங்கள் பயிர்களை அழிக்காமல் பாதுகாத்து வேளாண்மை செய்தனர். இதனை,

வேரல் வேலிச் சிறுகுடி அலற[13]

என்று நற்றிணை பாடல் கூறுகிறது. மூங்கிலைக் கொண்டு வேலி அமைத்து, பாதுகாப்பாக வாழ்ந்த வாழ்க்கைச் சூழலியலைக் காணமுடிகிறது.

பழங்குடி மக்களின் பசுமைத் தங்கமாகிய மூங்கில் மிகச் சிறந்த உயிர் வேலி. வேலியோரங்களில் பசுமையாக வளரவிட்டு உள்ளே சாகுபடி செய்யப்படும் கனிவகைப் பயிர்களுக்குக் காற்றுத் தடுப்புச் செய்யலாம்[14]

*என்று அரிஸ்டாட்டில் குறிப்பிடுகின்றார்.*

முந்தூழ் வேலிய மலை கிழவோற்கே[15]

*என்று குறுந்தொகை பாடல் மூங்கில் வேலியைத் தெரிவிக்கின்றது. மலைநாட்டில் வாழும் தலைவனின் ஊரானது மூங்கில் வேலியினை உடையது என்ற குறுந்தொகையின் கருத்து அக்கால மக்கள் மூங்கிலோடு கொண்டிருந்த இயற்கை தொடர்புடைய வாழ்க்கையைப் பின்பற்றிய சூழலியலை அறியமுடிகிறது.*

### 2.1.1.5. சிறுவர் விளையாடுதல்

*சங்க இலக்கியத்தில் சிறுவர்கள் தாம் வாழும் இடத்தில் காணப்படுகின்ற மரங்களில் ஏறி விளையாடி மகிழ்வார்கள். அத்தகைய விளையாட்டுகளில் மூங்கில் மரமும் இடம்பெற்றிருந்தன. இதனை,*

கழை பாடு இரங்க . . . .    . . . .
. . . .    . . . .    . . . .    . . . .
. . . .    . . . .    . . . .    . . . .
கழைக் கண் இரும் பொறை ஏறி விசைசுத்து எழுந்து
குறக் குறுமாக்கள் தாளம் கொட்டும் அக்
குன்றகத்ததுவே குழு மிளைச் சீறூந்[16]

*என்று நற்றிணை பாடல் குறிப்பிடுகிறது. சிறுவர்கள் மூங்கிலால் ஆன புல்லாங்குழல் ஒலிக்க பெரிய பாறைகளில் உள்ள மூங்கில் மரத்தின் மேல் ஏறிக் கொண்டு தாளம் கொட்டி விளையாடியதை அறியமுடிகிறது.*

புண்ணிய நெடுவரைப் போகிய நெடுங்கழைக்
கண்ணிடை ஒருசாண் வயர்ந்தது கொண்டு[17]

*என்று சிலம்பு மூங்கில் பயன்பாட்டைக் கூறுகிறது. மாதவி நடனம் ஆடுவதற்கு ஆடரங்கம் செய்ய மூங்கில் பயன்பட்டச் சூழலியலைக் காணமுடிகிறது.*

### 2.1.1.6. ஆயுதங்களில் மூங்கில்

*மனிதன் முதன் முதலில் கண்டுபிடித்தது நெருப்புதான். இது சங்க இலக்கியத்திலும் காணப்படுகிறது. இதனை,*

ஆய்நலம் மறப்பெனோ மற்றே சேண் இகந்து
ஒலிகழை பிசைந்த ஞெலிசொரி ஒண் பொறி
படுஞெமல் புதையப் பொத்தி[18]

*என்று அகநானூற்றுப் பாடல் குறிப்பிடுகிறது. பரிணாம வளர்ச்சியில் உணவு சமைக்கவும், விலங்குகளை விரட்டவும், மூங்கில் நெருப்பைப் பயன்படுத்திய சூழலைக் காணமுடிகிறது.*

இருப்பிடம், ஆய்தம், நெருப்பு இவை அனைத்தையும் கொடுத்தது மூங்கில்தான்[19]

*என்று ஆர்.கே.பாரதநேசன் மூங்கிலின் சிறப்பினைக் குறிப்பிடுகிறார். மேலும்,*

வாங்கு அமை நோன்சிலை எருத்தத்து இரீஇ[20]

*என்று அகநானூறும்,*

கொல்வினைப் பொலிந்த கூர்வாய் எறிஉளி
முகம்பட மடுத்த முளிவெதிர் நோன்காழ்[21]

*என்று குறுந்தொகையும் மூங்கில் ஆயுதங்களைக் கூறுகின்றன. குறவன் வேட்டையாடுவதற்கு வில்லையும், கொல்லன் உளியையும் மூங்கிலால் செய்து ஆயுதமாகப் பயன்படுத்தி வாழ்ந்த சூழலியலை அறியமுடிகிறது.*

### 2.1.1.7. மூங்கிலின் பிற பயன்பாடுகள்

*சங்க இலக்கியத்தில் பெண்கள் தங்கள் வீட்டில் நெல் குற்ற உலக்கையைப் பயன்படுத்துவார்கள். அந்த உலக்கையைச் செய்யப் பயன்படும் மரங்களில் மூங்கிலும் ஒன்றாகும். இதனை,*

வெதிர் உழக்கு நாழியால் சேதிகைக் குத்திக்[22]

*என்று கலித்தொகையும்,*

நெடுங்கழைத் தூண்டில் விடுமின் நொடுத்து[23]

*என்று புறநானூற்றுப் பாடலும் கூறுகின்றன. மக்கள் உலக்கை, தூண்டில் செய்ய மூங்கில் மரம் பயன்பட்ட இயற்கை சார்ந்த சூழலியலை அறியமுடிகிறது.*

> பூமி உயிர்க்கோளமாகத் திகழ்வதற்கு மிக முக்கியமான காரணிகள் நீர், நெருப்பு, காற்று இந்த மூன்றையும் தன்னகத்தே கொண்டுள்ள ஒரே மரம் மூங்கில். அதனால்தான் தமிழில் மூங்கிலுக்குத் திரிகண் எனப் பெயரிட்டுள்ளனர்[24]

என்று ஆர்.கே.பாரதநேசன் குறிப்பிடுகிறார்.

சங்ககால மக்கள் மூங்கில் மரத்தினைக் குழாய்களாக வடிவமைத்து உணவினையும், தேனையும், மலர்களையும், கள்ளையும் உண்டு மூங்கிலோடு தொடர்புடைய சூழலியலோடு வாழ்ந்ததை அறியமுடிகிறது. மூங்கில் கிளைகளை மக்கள் தங்கள் இருப்பிடத்தைச் சுற்றியும், விளைநிலங்களைச் சுற்றியும் வேலியாக அமைத்துப் பாதுகாத்து வாழ்ந்த வாழ்வியலையும் உணரமுடிகிறது. விலங்குகளை வேட்டையாடவும், போர் புரிவதற்காகவும் மூங்கில் வில்லாகப் பயன்பட்ட புறச் சூழலியலையும் அறியமுடிகிறது. உலக்கை, தூண்டில் போன்றவற்றை மூங்கிலால் செய்து மனநிறைவான வாழ்வை மேற்கொண்ட சூழலியலைச் சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது.

### 2.1.2. பனை மரம்

தமிழர்களின் வாழ்வியலில் பனை மரம் ஓர் அங்கமாகத் திகழ்கிறது. இம்மரம் தமிழ்நாட்டின் மாநில மரமாகவும் சிறப்புற்று விளங்குகிறது. தமிழர்கள் தோன்றிய காலம் முதல் பனை மரங்கள் தோன்றி, அவர்களின் வாழ்வை வளப்படுத்தியுள்ளன. பனைமரத்தின் ஓலை, காய், பழம், கிழங்கு, மரத்துண்டுகள் என அனைத்து உறுப்புகளும் அன்று முதல் இன்று வரை மனிதனுக்குப் பயன்தரக் கூடியனவாக அமைந்துள்ளன.

பனை மரம் என்பதன் அறிவியல் பெயர் "*Borassus flabellifer*"[25] என்பதாகும். மரமாகக் காணப்பட்டாலும் தொல்காப்பியர்,

> புறக்கா ழனவே புல்லெனப் படுமே[26]

என்று புல்லினத்தில் சேர்த்துள்ளார்.

#### 2.1.2.1. வேறு பெயர்கள்

பனை மரத்திற்கு பல்வேறு பெயர்கள் காணப்படுகின்றன.

> சடாபலம், மகோன்னதம், தருவிராசன், திருணத்துருமம், தீர்க்க தரு, தூரோரோகம், உடு பாதகம், உபாதகம், ஐந்தார், ஐயந்தாலம், கரதாளம், கரும்புல், கரும்புறம், புல், துருமசிரேட்டம், புல்லூதியம், புற்பதி, புற்றாளி, பூமி பிசாசம்[27]

*என்று பனை மரத்தின் பல்வேறு பெயர்களை சா.அனந்தகுமார் பட்டியலிட்டுள்ளார்.*

### 2.1.2.2. பனை மரத்தின் தோற்றம்

> *பனை மரமானது,*
>
> உள்ளே வெளிற்றிணை உடையது. கரிய நிறமுடையது, புல்லின் செறும்பை உடையது, புல் வகையைச் சேர்ந்தது[28]

*என்று சு.சண்முகசுந்தரம் கூறுகின்றார். இதனை,*

> பனையை மரம் என்று வழங்குகின்றோம். ஆனால் இது மர இனத்தைச் சேர்ந்தது அன்று. செரிந்து உறுதிப்பட்டதை வயிரம் பாய்ந்தது என்பர். உட்பகுதி வயிரத்தை உள் வயிர்ப்பு என்றும், புறப்பகுதி வயிரத்தைப் புறவயிர்ப்பு[29]

*என்றும் இளம்பூரணனார் குறிப்பிடுகின்றார். இதன் மூலம் பனையின் தோற்றத்தையும் வடிவத்தையும் அறியமுடிகிறது. பனைமரம் 34 வகையில் காணப்படுவதாக இயற்கைச்சார் வல்லுநர்கள் தெரிவிக்கின்றனர்.*

### 2.1.2.3. பனையின் பயன்பாடுகள்

*பனங்கொட்டையை நிலத்தில் போட்ட பின்பும் இயல்பாக முளைத்து மரமாகி மனிதர்க்கு எல்லாவிதப் பயன்பாடுகளையும் தருகின்றது. பனைமரம் உண்ண உணவாகப் பனங்கிழங்கு, நுங்கு, பதநீர், கருப்புக்கட்டி போன்றவைத் தந்து மனித வாழ்வில் துணையாக நிற்கின்றது.*

> பனை ஓலையைக் கூரையாக வேய்வதற்குப் பயன்படுத்துகிறோம். அன்றாட வாழ்க்கைக்குப் பனை நார்ப் பெட்டி, பனை ஓலைப் பெட்டி இவை பயன்படுகின்றன. உறங்குவதற்குப் பனைநார்க் கட்டில் பயனாகின்றது. பனைப்பொருளிலிருந்து கயிறு தயாரிக்கின்றனர். பனஞ்சவரி மெத்தைக்கும் பயன்படுகிறது[30]

*என்று ச.வே.சுப்பிரமணியன் பனையின் பயன்களைக் குறிப்பிடுகின்றார்.*

### 2.1.2.4. பனை பற்றிய கல்வெட்டுக் குறிப்புகள்

*பனை மரத்தை வெட்டுவதால் வழங்கும் தண்டனையை ஒரு கல்வெட்டில் பதிவு செய்துள்ளது.*

> காலம் குறிப்பிடப்படாத ஒரு கல்வெட்டில் ஒரு உயிருள்ள பனை மரத்தை வெட்டுபவனுக்கு அரசின் ஆணைப்படி தகுந்த தண்டனை வழங்கப்படும் என்ற செய்தி குறிப்பிடப்பட்டுள்ளது (246 of 1906)[31]

*என்று கு.வி.கிருஷ்ணமூர்த்தி கூறுகின்றார். மன்னர்களும் பனை மரத்தைப் பாதுகாத்து வந்ததை மேற்கண்ட கல்வெட்டு மூலம் அறியமுடிகின்றது.*

### 2.1.2.5. தலைவனின் நாட்டு வளம்

*நாட்டின் வளம் இயற்கைச் சார்ந்தே அமைகிறது. வயல்வெளிகள் செழிப்பாக இருந்தால்தான் அங்கு வாழும் மக்கள், மன்னர் அனைவரும் மகிழ்வாக வாழ முடியும். சங்க இலக்கியத்தில் தலைவன் தலைவியின் களவு வாழ்வில் தலைவனைவிட அவன் வாழும் நாட்டின் இயற்கை வளத்திற்கு முதலிடம் அளிக்கப்பட்டிருந்தது. இதனை,*

> மடல்அம் பெண்ணை அவனுடை நாடே[32]

*என்கிறது ஐங்குறுநூறு. தலைவி, பனைமரங்களை மிகுதியாக உடைய நாடு தன் தலைவனின் நாடு என்று தோழிக்குக் கூறுகின்றாள். இதன் மூலம் தலைவனை அறிமுகப்படுத்தவதற்கு முன்பே அவன் வாழும் நாட்டில் உள்ள இயற்கையைக் குறிப்பிடுவது சங்க காலத்தில் பெருமையாகக் கருதப்பட்டிருந்ததை உணரமுடிகிறது. மேலும் இதனை,*

> மடல் தாழ் பெண்ணை எம்சிறு நல் ஊரே[33]

*என்று குறுந்தொகை பாடலும் சிறப்பிக்கிறது. தலைவன் வாழும் கடற்கரை பனைமரங்கள் நிறைந்த ஊராக இருந்ததைக் காணமுடிகிறது.*

### 2.1.2.6. ஊர் மன்றம்

*சங்க காலத்தில் மக்கள் தங்கள் ஊரில் பொதுவான ஓர் இடத்தில் கூடி பேசுவது மன்றம் எனப்பட்டது. அந்த மன்றமானது ஊரின் நடுவே காணப்பட்டது. அவற்றில் மரங்களும் இடம்பெறுவதுண்டு. இந்த மரத்தின் அடியில்தான் அனைவரும் ஒன்று கூடி பேசுவர்.*

*கடற்கரைச் சோலையில் வாழ்பவர் நெய்தல் நில மக்கள் ஆவர். அவர்கள் ஊரின் மன்றங்களில் பனை மரம் இடம்பெற்றன.*

மன்றலம் பெண்ணை மடல்சேர் வாழ்க்கை[34]

*என்று குறுந்தொகை பாடல் ஊர் மன்றங்களில் பனை மரமும் ஒன்றாக இருந்ததைத் தெரிவிக்கின்றது.*

கள்ளின் கேளிர் ஆர்த்திய உள்ளூர்ப்
பாளை தந்த பஞ்சிஅம் குறுங்காய்
ஓங்கு இரும் பெண்ணை நுங்கொடு பெயரும்[35]

*என்று குறுந்தொகை பாடல், மருதநில மக்கள் தன் சுற்றத்தாருடன் கள்ளைப் பருகிவிட்டு, ஊர் நடுவில் காணப்படும் பனைமரத்தில் உள்ள பாளையையும், நாரினையும், நுங்கினையும் பெற்றுக் கொண்டு வாழ்ந்த வாழ்வியலைக் குறிப்பிடுகிறது. மக்களின் வாழ்விலும், வாழ்கின்ற இடத்திலும் பனை மரம் ஒன்றிணைந்து வாழ்ந்திருந்த சூழலியலைக் காணமுடிகிறது.*

### 2.1.2.7. உணவு முறைகள்

*தமிழர்களின் பாரம்பரிய மரம் பனை மரம் ஆகும். இம்மரத்தில் விளைந்த நுங்கு கால்சியம் சத்துக்கள் நிறைந்த உணவுப் பொருளாகும். சிறுவர்கள் முதல் பெரியவர்கள் வரை அனைவரும் விரும்பி உண்ணும் உணவாக இது இன்றுவரை திகழ்ந்து கொண்டிருக்கிறது.*

தலையோர் நுங்கின் தீம்சோறு மிசைய
இடையோர் பழத்தின் பைங்கனி மாந்த
கடையோர் விடுவாய்ப் பிசிரொடு சுடுகிழங்கு நுகர
நிலமலர் வையத்து வலமுறை வளைஇ[36]

*என்று புறநானூற்றுப் பாடல் நுங்கினைச் சிறப்பிக்கின்றது.*

*மன்னர்களுக்கு வெற்றியும், புகழையும் சேர்ப்பவர் வீரர்கள் ஆவர். அந்த வீரர்கள் உடலும், உள்ளமும் வலிமையுடன் இருந்தால்தான் திறம்பட போர் புரிய முடியும். நலங்கிள்ளி மன்னனின் படைகளில் காலாட் படையானது மூவகையாகக் காணப்பட்டது. அவை முதற்படை, இடைப்படை, கடைப்படை ஆகும். முதற்படை வீரர்கள் எதிர்நாட்டைத்*

தாக்கும் பொழுது பனை மரங்களை மிகுதியாக உடைய காட்டைக் கடந்து செல்வார்கள். அவ்வாறு செல்லும் போது வீரர்கள் உணவாகப் பனநுங்கு சாப்பிட்டுப் போர் புரிவார்கள். இடைப்படை வீரர்கள் போர் புரிய செல்லும் போது பனம் பழத்தை உண்டு போர் புரிவார்கள். கடைப்படை வீரர்கள் போர் புரியும் போது பனங்கிழங்கினை உண்டு போர் புரிந்து வெற்றி பெற்று வருவார்கள். இவர்களின் போர்கள் நிறைந்த வாழ்வில் நுங்கு, பனம் பழம், கிழங்கு போன்றன கால்சியம் சத்து நிறைந்த மிகச் சிறந்த சக்தி தரும் உணவாக வீரர்களுக்கு அமைந்திருப்பதை அறியமுடிகிறது. இப்பாடலுக்கு,

> ஒரு பனந்தோப்பினுள் நுங்கு காலத்தில் நுழைந்த படையின் கடைப்பகுதி கிழங்குக் காலம் தோன்றிய பின்னரே அத்தோப்பைக் கடந்து செல்லுமளவு நனிமிகப் பெரிது நலங்கிள்ளியின் நாற்படை[37]

என்று கா.கோவிந்தன் விளக்கமளிக்கிறார். மேலும்,

> .... .... ஒண் தொடி மகளிர்
> இரும் பனையின் குரும்பை நீரும்[38]

என்று புறநானூற்றுப் பாடல் ஆண்கள் மட்டுமில்லாமல் மகளிரும் நுங்கு உண்டு வாழ்ந்ததைக் குறிப்பிடுகிறது.

### 2.1.2.8. பாதுகாப்பு மற்றும் உணவு

மக்கள் தங்கள் வீட்டைச் சுற்றி நிழலுக்காகவும் மண்ணரிப்பைத் தடுப்பதற்காகவும், அழகுக்காகவும் மரங்கள், செடிகள், கொடிகள் போன்றவற்றை வளர்த்து வந்தனர். இவற்றில் பனை மரமும் இன்றியமையாத ஒன்றாகும். மழைக் காலங்களிலும் புயல் காலங்களிலும் பனை மரம் வீழ்வதே கிடையாது. அவ்வளவு உறுதியான மரமாகப் பனை மரம் காணப்படுகிறது.

> பனை மரங்கள் அழிவதால் மண் வளமும் மனித வளமும் கெடுகிறது. வைரம் பாய்ந்த பனை மரத்தின் மதிப்புத் தேக்கை விட உயர்வானது[39]

என்று அரிஸ்டாட்டில் பனை மர உறுதியைக் குறிப்பிடுகின்றார்.

> தூங்கல் ஓலை ஓங்குமடற் பெண்ணை
> மாஅரை புதைத்த மணல் மலிமுன்றில்[40]

என்று நற்றிணை பாடல், மக்கள் தங்கள் வீட்டின் அருகில் பனை மரம் வளர்த்து வந்ததைத் தெரிவிக்கின்றது. பனை மரம் மக்களுக்குப் பாதுகாப்பாகவும் உணவாகவும் இருந்துள்ள சூழலியலை அறியமுடிகிறது.

### 2.1.2.9. விளையாட்டுகள்

*மக்களின் அன்றாட வாழ்வின் பொழுதுபோக்குகளில் ஒன்றாக இருப்பது விளையாட்டு ஆகும். மக்கள் கடற்கரைச் சோலையிலும், மரத்தின் அடியிலும், நீரோடைகளிலும் விளையாடி மகிழ்ந்தனர்.*

.... .... .... நெடும்பனை
குறிய ஆகும் துறைவனைப்
பெரிய கூறி யாய் அறிந்தனளே[41]

*என்று குறுந்தொகை பாடல் வாயிலாகக் கடற்கரையில் பனை மரங்களின் காய்களை பறித்து விளையாடியதை அறியமுடிகிறது.*

பெருங் கயிறு நாலும் இரும் பனம் பிணையல்
பூங்கண் ஆயம் ஊக்க[42]

*என்று நற்றிணை பாடல், பெண்கள் பனை நாரினால் செய்த கயிறைக் கட்டி ஊஞ்சல் ஆடியதைக் குறிப்பிடுகிறது. இதன் மூலம் விளையாட்டுகளிலும் பனை மரப் பொருள்கள் இடம்பெறுவதை அறிந்து, இயற்கையோடு இயைந்து வாழ்ந்த அக்கால மக்களின் சூழலியலை உணரமுடிகிறது.*

### 2.1.2.10. பனையோலை

*சங்க கால மக்கள், உறங்குவதற்கு ஓலைகளால் வேய்யப்பட்ட பாய்களைப் பயன்படுத்தி வந்ததை அறியமுடிகிறது. ஈச்ச மரம், பனை மரம், தென்னை மரம், ஞாழல் போன்றவற்றால் பாய்கள் செய்துள்ளனர்.*

பறிப் புறத்து இட்ட பால் நொடை இடையன்[43]

*என்று நற்றிணை பாடல், பால் விற்கும் இடையன் என்பவன் பறி என்று அழைக்கப்படும் பனையோலை பாயோடு வாழ்ந்திருந்ததைச் சுட்டுகிறது. மேலும்,*

வெயில் வெரிந் நிறுத்த பயில்இதழ்ப் பசுங்குடை
கயம் மண்டு பகட்டின் பருதி[44]

*என்று அகநானூறு பாடலும் பனையோலையில் செய்யப்பட்ட குடுவையில் கள்ளைக் குடித்ததைத் தெரிவிக்கின்றது.*

.... .... பனையூற்றுக் கள்ளும்
வடக்குவாய்ச் செல்லியுண்ணக் குடத்தில் வையும்
தோத்திரம் பண்ணும் பண்ணூங்கூத் தாடியே[45]

என்று முக்கூடற்பள்ளு, கிராம மக்கள் தங்களின் காவல் தெய்வத்திற்கு பனை மரத்தில் உள்ள கள்ளை எடுத்து வந்து படைத்து வழிபாடு செய்ததைக் குறிப்பிடுகிறது.

மக்கள் பனை மரத்தில் உள்ள பனை ஓலையினை உறங்குவதற்கும், குடிப்பதற்கும், பொருள் கொண்டு செல்லும் குடுவையாகவும் பயன்படுத்தியதை அறியமுடிகிறது. தற்காலத்தில் பனை ஓலை கோடை காலத்தில் விசிறி செய்யவும், குழந்தைகளுக்குக் கிளுகிளுப்பைச் செய்யவும் பயன்பட்டு வருவதைக் காணமுடிகிறது.

### 2.1.2.11. பாதுகாப்பு அரண்

மக்கள் தங்களுடைய இருப்பிடத்தைச் சுற்றி பாதுகாப்பிற்காக வேலிகள் அமைப்பது மரபாகும். அந்த வேலியானது முட்கள், பனைகள், தென்னை, மரத் துண்டுகள் போன்றவைகளில் அமைத்துக் கொண்டனர். இது சிறந்த பாதுகாப்பு அரணாகவும் அமைந்தது. இதனை,

. . . .     . . . . தோழி கலங்குநீர்க்
கழிசூழ் படப்பைக் காண்டவாயில்
ஒலி காவோலை முள்மிடை வேலி
பெண்ணை இவரும் ஆங்கண்
வெண்மணற் படப்பை எம் அழுங்கல் ஊரே[46]

என்று நற்றிணை பாடல் புலப்படுத்துகின்றது. நெய்தல் நில மக்கள் வாழும் கடற்கரையில் காண்ட வாயில் என்னும் ஊரிலுள்ள மக்கள் முற்றிய பனையோலைகளையும், முட்களையும் சேர்த்துத் தங்களது தோட்டங்களைச் சுற்றி வேலியாக அமைத்துப் பாதுகாப்பாக வாழ்ந்து வந்தனர். பனை வேலியானது எந்த காற்றிலும் மழையிலும் மக்களைப் பாதுகாக்கும் என்பதை நம் முன்னோர்கள் அறிந்து வைத்திருந்த இயற்கைசார் வாழ்வியலை உணரமுடிகிறது.

### 2.1.2.12. மடல் அமைப்பு

சங்க அக இலக்கியங்களில் தலைவன் தலைவியைக் காதல் கொண்டு, அவளை அடைய முடியாத நிலையில் இறுதி முயற்சியாக மடல் ஏறத் துணிகின்றான்.

மடலேறுதல் என்பது பனைமரத்தின் கிளை மட்டை எனப்படும். இது இரண்டு பாகங்களிலும் கூறிய முள் போன்ற அமைப்பினைக் கொண்டிருக்கும். இந்த பனை மரத்தின் கிளைகளினால் குதிரை போன்று உருவம் செய்வர். இதன் மேல் தலைவி மீது காதல் கொண்ட தலைவன் ஏறி அமர்ந்திருப்பான். இதன் கீழ் உருளைப் பொருத்தப்பட்டிருக்கும். அவற்றில் கயிரைக் கட்டி இழுத்துச் செல்வர். இதுவே மடலேறுதல் எனப்படும். இதனை,

விழுத்தலைப் பெண்ணை விளையல் மாமடல்
மணிஅணி பெருந்தார், மரபிற் பூட்டி[47]

என்று குறுந்தொகை பாடல் எடுத்துரைக்கின்றது. தலைவன் பனையோலையாகவும், கறுக்கினை உடைய மட்டையாலும் குதிரை வடிவில் மடலைத் தயாரித்துத் தன் காதலை ஊராருக்கும், தலைவியின் பெற்றோர்க்கும் தெரிவிக்கும் நிகழ்வைக் குறுந்தொகை தெளிவுறுத்துகிறது.

மடலே காமம் தந்தது[48]

என்று நற்றிணையும்,

பெருமடற் பெண்ணைப் பிணர்த்தோட்டுப் பைங்குரும்பைக்
குடவாய்க் கொடிப் பின்னல் வாங்கி[49]

என்றும்,

பனை ஈன்ற மாவும்[50]

என்றும்,

ஓங்கு இரும் பெண்ணை மடர் ஊர்ந்து[51]

என்றும்,

அணிநிலைப் பெண்ணை மடல் ஊர்ந்து ஒருத்தி
அணிநலம் பாடி வரற்கு[52]

என்றும்,

பனை ஈன்ற மா ஊர்ந்து அவன் வர[53]

என்று கலித்தொகைப் பாடல்களும் தலைவன் மடலேறுதலுக்குப் பனை மரங்கள் பயன்பட்டதைத் தெளிவுறுத்துகின்றன. இது தலைவனின் காதலுக்கு வெற்றி சேர்க்கும் விதமாக அமைந்திட்டதையும் அறியமுடிகிறது.

சோலைவேய் மருள்சூழ் வளைத்தோளி தன்
வேலை மாக்கடல் வேட்கை மிக கூர்தர

ஓலைதாழ் பெண்ணை மாமடலூர் தலைக்

கால வேற்றடங்கண்ணி கருதினாள்[54]

என்று சீவகசிந்தாமணி மடலேறுதல் பற்றிக் குறிப்பிடுகின்றது. தலைவன் தன் காதலை வெளிப்படுத்த மடலேறுகிறான். அதற்குப் பனையின் பாகங்கள் அடிப்படையாக அமைகிறது.

உள்ளங்கால் முதல் உச்சந்தலை வரை அஃதாவது வேர் முதல் குருத்து வரை எல்லா உறுப்புகளாலும் மாந்தர்க்குப் பயன்படும் ஒன்று[55]

என்று கோவை.இளஞ்சேரன் குறிப்பிடுகின்றார். மேலும்,

அனைத்துப் பாகங்களும் மனிதனுக்குப் பயன்படுபவை. அதனாலேயே பனையைக் கற்பகத்தரு எனக் கூறுவர்[56]

என்று பனைமரத்தின் தனித்துவத்தை ஆர்.கே.பாரதநேசன் கூறுகின்றார்.

பனைமரம் மக்களுக்கு நுங்கு, பழம், கிழங்கு, ஓலை, நார் என அனைத்தையும் கொடுத்துக் கற்பகத்தரு என்று அழைக்கப்படுவதைச் சங்க இலக்கியப் பாடல்களால் உணரமுடிகிறது. மண்ணுக்கும் தலைவனுக்கும் வலுச்சேர்ப்பதாகவும், நாட்டிற்கு வளம் சேர்க்கும் பொருளாகவும் பனை மரங்கள் திகழ்வதை அறியமுடிகிறது. போர்க் காலச் சூழலில் படைவீரர்களுக்கு முதன்மை உணவாக நுங்கு, பனம் பழம், பனங்கிழங்கு போன்றன உணவாக அமைந்து போரில் வெற்றி பெற துணைநிற்கும் சூழலியலை அறியமுடிகிறது. மக்கள் தங்கள் வீட்டைச் சுற்றிப் பாதுகாப்பு அரணாகப் பனையோலையால் ஆன வேலிகளை அமைத்ததையும் அறியமுடிகிறது. எனவே மக்கள் வாழ்வியல் சூழலியலில் அனைத்து நிலைகளிலும் பனை மரங்கள் பிணைந்திருந்ததை அறியமுடிகிறது. இயற்கையோடு இயைந்த வாழ்வியல் சூழலியல் மாசற்ற, வலுவான நல்ல வாழ்க்கையைச் சங்க கால மக்கள் வாழ்ந்திருந்தனர் என்பதை அறியமுடிகிறது.

### 2.1.3. புன்னை மரம்

மரங்கள் மனித வாழ்வாதாரத்தின் உயிர்நாடியாக விளங்குகின்றன. சங்க காலப் புலவர்கள் போற்றிப் பாடிய மரங்களில் புன்னை மரம் தனிச்சிறப்பு வாய்ந்ததாகும். புன்னை மரம் இயல்பாய் வாழுமிடம், புன்னையின் கிளைகள், இலைகள், மொக்குகள், பூக்கள், மகரந்தத் தாது,

காய்கள் ஆகியவற்றைக் கண்டுணர்ந்து சங்கப் புலவர்கள் பாடியுள்ளனர். தமிழ்நாட்டில் பல அரிய மரங்களில் புன்னை மரமும் ஒன்றாகும். இந்த மரம் வண்டல் படிந்த பூமியில் சிறப்பாக வளரக்கூடியதாகும்.

> கடற்கரையோரத்தில் ஒரு சில மரங்களே வளரக்கூடியவை. கடற்கரைக்குச் சிறிது தள்ளிக் காணப்படும் கானலில் (Littoral wood land) வளரும் மரங்களில் மிகவும் எளிதாகவும், பொதுவாகவும் காணப்படுவது புன்னை மரமென்று செடி நூலார் கருதுகின்றனர்[57]

என்று பி.எல்.சாமி. புன்னை மரம் குறித்து விளக்கம் தருகின்றார். மேலும்,

> கடற்கரையை அடுத்த சூழ்நிலையில் கூட்டமாகப் புன்னை மரம் காணப்படுவதாகச் செடி நூலாரும் கூறுவர்[58]

என்றும் உரைக்கின்றார்.

மக்கள் வாழ்வில்,

> தல மர வழிபாடும், பெருந்தெய்வ வழிபாடும், கோயில்களும் பிரபலமடையத் தொடங்கியவுடன் புன்னை மரமும் அதிக முக்கியத்துவம் பெறத் தொடங்கியது. பண்டைய தமிழகத்தின் கிழக்குக் கடற்கரைப் பகுதிகளில்தான் இதற்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டது. இதற்குக் காரணம் புன்னை ஒரு கடற்கரையோரத் தாவரம் என்பது தான். இந்த பகுதியில் அமைக்கப்பட்ட பெருந்தெய்வக் கோயில்கள் பலவற்றோடு தல மரங்களாகப் புன்னை மரம் தொடர்புபடுத்தப்பட்டது[59]

என்று புன்னை மரத்தின் இன்றியமையாமையை இந்து தமிழ் நாளிதழ் கட்டுரைக் குறிப்பிடுகிறது.

### 2.1.3.1. புன்னை மரத்தின் தோற்றப் பொலிவு

புன்னை மரம்,

> இலத்தின் மொழியில் இதன் பெயர் கோலோ ஃபைலம். இதன் பொருள் இலையின் அழகு[60]

என்பதாகும் என ஆர்.எஸ்.நாராயணன் கூறுகின்றார். நெய்தல் திணையில் கடற்கரையோரத்தில் மிகுதியாகக் காட்சித் தரும் மரமாகப் புன்னை மரம் திகழ்கின்றது.

> புன்னை மரத்தின் இலை, விதை, பூ, பட்டை, பிசின் அனைத்தும் பயன்படும்[61]

*என்று ச.வே.சுப்பிரமணியன் புன்னை மரத்தின் பயன்பாடு பற்றி எடுத்துரைக்கின்றார்.*

*புன்னை மரத்தின் தோற்றத்தைப் பற்றி உலோச்சனார்,*

இரும்பின் அன்ன கருங்கோட்டுப் புன்னை
நீலத்து அன்ன பாசிலை அகம் தொறும்
வெள்ளி அன்ன விளங்கு இணர் நாப்பண்
பொன்னின் அன்ன நறுந்தாது உதிர[62]

*என்று நற்றிணை பாடலில் குறிப்பிடுகின்றார். புன்னை மரம் இரும்பைப் போன்ற நிறமுடையதென்றும், இலைகளைக் கொண்டதென்றும் அந்த இலையில் வெள்ளி போன்ற மகரந்தத் தாது இருக்குமென்றும் உரைக்கிறார் உலோச்சனார்.*

*இரா.பஞ்சவர்ணம்,*

புன்னை மரம் பட்டை சாம்பல் பழுப்பு நிறமானது அல்லது கருப்பு பழுப்பு நிறமானது. தடிப்பானவை மற்றும் நீளவாக்கில் பிளவுகளை கொண்டிருக்கும் மரபிசின்கள் துளித்துளியாக ஒளி ஊடுருவும் தன்மைக் கொண்டது[63]

*என்று குறிப்பிடுகின்றார்.*

### 2.1.3.2. புன்னை மரத்தை உறவாக நினைத்தல்

*மக்கள் வாழ்வில் மரங்கள் இரண்டறக் கலந்திருப்பதை,*

உலக இலக்கியங்களில் ஓரறிவுயிரை மகளாக, உடன் பிறந்தவளாகக் கருதும் எண்ணத்தைத் தமிழ் இலக்கியம் தான் முதன் முதலில் குறித்துள்ளதாகக் கூறுவர். தாவரங்களோடு ஒட்டி, உறவாடி வாழ்ந்திருந்தால் இவ்வுணர்வும் எண்ணமும் தமிழர்க்குத் தோன்றியிருக்கலாம்[64]

*என்று ச.வே.சுப்பிரமணியன் குறிப்பிடுகிறார்.*

*புன்னை மரத்தைத் தாய் தன் முதல் மகளாகவும், மகள் தன்னுடன் பிறந்த தமக்கையாகவும் கருதும் வழக்கம் அக்காலத் தமிழ்ச் சமூகத்தில் நிலவியதை,*

விளையாடு ஆயமொடு வெண்மணல் அழுத்தி
மறந்தனம் துறந்த காழ் முளை அகைய
நெய்பெய் தீம்பால் பெய்து இனிது வளர்த்தது
நம்மினும் சிறந்தது நுவ்வையா குமென்று
அன்னை கூறினாள் புன்னையது சிறப்பே
அம்ம நாணுதும் நும்மொடு நகையே
விருந்திற் பாணர் விளரிசை கடுப்ப
வளம்புரி வான்கோடு நரலும் இலங்குநீர்த்
துறைகெழ கொண்க நீ நல்கின்
நிறைபடு நீழல் பிறவுமா ருளவே[65]

*என்றுரைக்கிறது நற்றிணை. புன்னையைத் தன் முதல் மகளாகத் தாய் கருத, அப்புன்னையைத் தன் உடன்பிறந்த தமக்கையாக மகள் கருதுகிறாள். இயற்கையோடு இயைந்து இன்பக் காட்சியாக இக்கருத்து அமைகிறது என்று ச.வே.சுப்பிரமணியன் விளக்கம் அளிக்கிறார். இதன் மூலம் மனித வாழ்வில் புன்னை மரம் நெருங்கிய உறவாகச் சூழலியலோடு ஒன்றிணைந்திருந்ததை அறியமுடிகிறது.*

### 2.1.3.3. புன்னை இலையின் செயல்

*தலைவனின் தேர் திரும்பி வரும் போது புன்னையின் பச்சை இலையைத் தொலைவிலிருந்து கண்ட குதிரை அஞ்சுகிறது. குதிரை அதை மலை என்றும், மரமென்றும், மலரென்றும், இலையென்றும், மகரந்தமென்றும், இன்னப் பிறவென்றும் திட்டமாக வரையறுத்துக் காணமுடியாத நிலையில் மயங்கி நிற்கிறது.*

பொன்னின் அன்ன நறுந்தாது உதிரப்
புலிப்பொறிக் கொண்ட பூநாறு குரூஉச்சுவல்
வரிவண்டு ஊதலின் புலிசெத்து வெரீஇப்
பரியுடை வயங்குதாள் பந்தின் தாவத்
தாங்கவும் தகைவரை நில்லா ஆங்கண்[66]

*என்று நற்றிணை பாடல், புன்னையின் இலைகள் சாலையில் உள்ளபோது தலைவன் போர்ப் புரிந்து விரைவாகத் தலைவியைக் காண வரும் நிலையில் தன் குதிரை குழம்பிய நிலையைக் காட்டுகிறது. இதன் மூலம் தலைவனும்*

தலைவியும் சந்திக்கும் நிகழ்வில் புன்னை மரத்தின் இலையானது இடையூறாக அமைந்து மயக்கத்தை ஏற்படுத்தியதைக் காணமுடிகிறது.

### 2.1.3.4. காவல் மரம்

சங்க காலத்தில் மக்கள் மரங்களைத் தெய்வமாகவும், காவல் மரமாகவும் வைத்துப் போற்றியும் பாதுகாத்தும் உள்ளனர். அவ்வாறு பாதுகாத்தவற்றுள் ஒன்று புன்னை மரம் ஆகும். இதனை,

.... .... .... திதியன்
தொல்நிலை முழுமுதல் துமியப் பண்ணிய
நன்னர் மெல் இணர்ப் புன்னை போல[67]

என்று அகநானூறு பாடல் குறிப்பிடுகிறது. தலைவியை ஒருநாள் கோலால் செவிலித்தாய் அடிக்கும் போது, அன்னி என்னும் மன்னன் தித்தன் என்ற மன்னனின் காவல் மரமாகிய புன்னை மரத்தை வெட்டி சாய்க்கும் போது மரத்திற்கு ஏற்பட்ட துன்பத்தினைப் போல் செவிலித் தாய்க்கும் துன்பத்தைத் தந்தது என்று அகநானூறு விளக்குகின்றது. இதன் மூலம் தித்தன் என்ற மன்னனின் காவல் மரம் புன்னை மரம் என்றும், அதனை மக்கள் வணங்கியுள்ளதையும் அறியமுடிகிறது.

மேலும், நற்றிணையில் புன்னை மரம் காவல் மரமாக இருந்ததை,

அன்னியும் பெரியன் அவனினும் விழுமிய
இருபெரு வேந்தர், பெரு களத்து ஒழித்த
புன்னை விழுமம் போல[68]

என்றுரைக்கிறது. புன்னை மரத்தினைக் காவல் மரங்களில் ஒன்றாக அரசரும், மானத்திற்கு ஈடாக மக்களும் பாதுகாத்து வந்தனர். இதனை அழிப்பது அந்த நாட்டிற்கும், நாட்டு மக்களுக்கும் அவமனாத்தையும் தோல்வியையும் தருவதாகக் கருதிய மக்கள் அதனைத் தங்களுடைய உயிரினும் மேலாகக் கருதி வணங்கியும், பாதுகாத்தும் வந்தனர். அன்னி என்ற மன்னனுக்கும் திதியன் என்ற மன்னவனுக்கும் இடையே ஏற்பட்ட போரில் அன்னியால் திதியனின் காவல் மரமான புன்னை மரம் வெட்டி சாய்க்கப்பட்டது. போரில் அன்னி என்பவன் வெற்றி பெற்றான். எனவே மன்னர்கள் வெற்றி பெற்ற பின்பு அவர்களின் காவல் மரத்தை வெட்டி வீழ்த்தப்பட்டதையும் அறியமுடிகிறது.

### 2.1.3.5. புன்னை மரத்தில் தோணியைக் கட்டுதல்

*ஐவகை திணைகளில் ஒன்றாகத் திகழ்வது நெய்தல் ஆகும். நெய்தல் நிலமான கடற்கரையில் வாழும் மக்கள் தங்கள் தொழிலான மீன் பிடித்தலை முடித்துவிட்டுக் கடற்கரையில் உள்ள புன்னை மரத்தின் அடியில் தாங்கள் கொண்டு வந்த தோணியைக் கட்டுவர் என்பதனை,*

. . . .     . . . . இருள் நிறப் புன்னை
நல்அரை முழுமுதல் அல்வயின் தொடுத்த
தூங்கள் அம்பித் தூவல் சேர்ப்பின்[69]

*என்கிறது நற்றிணை. கடற்கரையில் வாழும் சேரி மக்கள் தங்களது தோணியைப் புன்னை மரத்தில் கட்டி வைப்பதை உலோச்சனார் குறிப்பிடுகிறார். மீனவர்களின் வாழ்வில் புன்னை மரம் தோணி கட்டுவதற்கு மிகவும் பயன்பட்ட பயன்பாட்டுச் சூழலியலை அறியமுடிகிறது.*

### 2.1.3.6. சுற்றத்தாருடன் கள் உண்ணுதல்

*சங்க இலக்கியங்களில் மன்னர்கள், வீரர்கள், மக்கள், புலவர்கள் போன்றோர் வெற்றி களிப்பிலும், அன்பின் காரணமாகவும், உணவு பொருட்களில் ஒன்றான கள்ளைக் குடித்து மகிழ்வோடும் இருந்தனர். இதனை,*

. . . .     . . . .     . . . . வைகறைக்
கடல்மீன் தந்து கானற் குவைஇ
ஓங்கு இரும் புன்னை வரிநிழல் இருந்து
தேம்கமழ் தேறல் இளையோடு மாந்தி[70]

*என்று நற்றிணை பாடல் பதிவு செய்கின்றது. கடற்கரையில் உள்ள பரதவர் மக்கள் மிகுதியான மீன்களை விடியற்காலையில் பிடித்து வந்து கரையோரத்தில் குவியலாக வைத்துவிட்டுத் தன் சுற்றத்தாருடன் மகிழ்வோடு கள்ளைக் குடித்துவிட்டு வீடு திரும்பினர். புன்னை மரம் பரதவர் மக்களின் வாழ்வில் மீன் உலர வைப்பதற்கும், கள் குடிப்பதற்கும் நிழலாக இருந்த சூழலியல் தொடர்பினை அறியமுடிகிறது.*

### 2.1.3.7. தலைவனிடம் சிறு ஊடல்

அகவாழ்வில் தலைவன் தலைவியிடையே கூடலும், ஊடலும் நிகழ்வதுண்டு. இருவரும் சந்திக்கும் இடங்களில் புன்னை மரமும் ஒன்றாகும். இதனை,

.... .... வார்மணற் சேர்ப்பண்
இறைபட வாங்கிய முழவு முதற்புன்னை
மாஅரை மறைகம் வம்மதி[71]

என்று நற்றிணை பாடல் தெரிவிக்கின்றது. தலைவன் தலைவியைக் காணப் புன்னை மரத்தின் நிழலில் நிற்கின்றாள். தலைவன் வருகையின் போது அவனை விளையாட்டாகச் சிறிது துன்பமடைய செய்ய தலைவி புன்னை மரத்தின் பின்புறம் மறைந்து கொண்டு விளையாடி, பின்பு ஒன்று சேர்கின்றனர். தலைவன் தலைவி ஊடல் கொள்ளும் இடங்களில் புன்னை மரமும் காணப்படுகின்ற சூழலியலை அறியமுடிகிறது.

### 2.1.3.8. மீனவர் தங்குமிடம்

நெய்தல் திணையில் வாழும் மக்களின் முதன்மைத் தொழிலாகவும், உயிர் நாடியாகவும் இருப்பது மீன் பிடித்தல் ஆகும். மீன்களைப் பிடிக்க செல்லும் முன்பும், பின்பும் தங்களுடைய வலையைக் கடற்கரையில் காணப்படுகின்ற புன்னை மரங்களின் நிழலில் உலர வைத்து வீட்டிற்கு சென்றனர். இதனை,

கானல் அம்சிறுகுடிக் கடல் மேல் பரதவர்
நீலநிறப் புன்னைக் கொழு நிழல் அகைஇ
தண் பெரும் பரப்பின் ஒண்பதம் நோக்கி[72]

என்று நற்றிணை பாடல் தெரிவிக்கின்றது. நெய்தல் நிலப்பகுதியான கடற்கரையில் மீன் பிடித்தல் தொழில் செய்து வாழும் மக்கள் புன்னை மர நிழலில் தங்கி சிக்குண்ட வலையைப் பிரித்து உலர வைத்தப் பின் மீன்பிடிக்கச் செல்வர். இதன் மூலம் நெய்தல் நில மக்களின் வாழ்வியல் புன்னை மரம் நிழலுக்காகப் பயன்பட்ட சூழலியலை உணரமுடிகிறது.

### 2.1.3.9. மீன்களை உலர்த்துதல்

*நெய்தல் நிலத்தில் வாழும் மக்களான மீனவர்கள் கடலுக்குச் சென்று இறால் மீன்களைப் பிடித்து வந்து கடற்கரையோரத்தில் இருக்கும் புன்னை மரத்தடியில் மீன்களை குவியலாக உலர வைப்பர். இதனை,*

.... .... .... இறவின்
கணம் கொள்குப்பை உணங்கு திறன் நோக்கி
புன்னை அம்கொழு நிழல் முன் உய்த்துப் பரப்பும்[73]

*என்று நற்றிணை பாடல் கூறுகிறது. மீனவர்கள் வாழ்வில் ஓய்வெடுக்கவும், கொண்டு வந்த மீன்களையும் வலைகளையும் உலர வைப்பதற்கும் புன்னை மரம் ஓர் அங்கமாக இருந்ததை அறியமுடிகிறது. மீனவர்களின் வாழ்வாதாரத்தில் புன்னை மரம் ஒன்றிணைந்த சூழலியலைக் காணமுடிகிறது.*

### 2.1.3.10. தலைவி விளையாடுதல்

*கடற்கரையில் தலைவன் தன்னருகில் இல்லாதபோது தலைவி தோழியுடனோ, பறவைகளுடனோ, பிடித்த விலங்குகளுடனோ விளையாடுவது இயல்பாகும். இதனை,*

.... .... .... என்னொடும்
இன்இணர்ப் புன்னைஅம் புகர் நிகழ்
பொன்வரி அலவன் ஆட்டிய ஞான்றே[74]

*என்று குறுந்தொகை பாடல் கூறுகிறது. தலைவி புன்னை மர நிழலில் நண்டைப் பிடித்து விளையாடிய காட்சியைக் காணமுடிகிறது. தலைவி கடற்கரையில் விளையாடுவதற்கு ஓர் அங்கமாகப் புன்னை மரம் காணப்படும் சூழலியலை அறியமுடிகிறது.*

*புன்னை மர நிழலில் தலைவி விளையாடியதை போல் மணிமேகலையில் கிள்ளி வளவன் என்ற மன்னன் கடற்கரையில் புன்னை மரத்தின் நிழலில் உலாவியதைக் காணமுடிகிறது. இதனை,*

உம்பளம் தழீஇய உயர்மணல் நெடுங்கோட்டுப்
பொங்குதிரை உலாவும் புன்னை அம்கானல்
கிளர்மணி நெடுமுடிக் கிள்ளி முன்னா[75]

என்று மணிமேகலை கூறுகிறது. இதன் மூலம் புன்னை மரம் பிற்காலத்திலும் மக்களுக்குப் பயன்பட்டச் சூழலை அறியமுடிகிறது.

### 2.1.3.11. பொழுதுபோக்கில் புன்னை

தலைவன் தலைவி இருவரும் புன்னை மரத்தின் அடியில் இன்புற்றுத் தங்கள் பொழுதினைக் கழித்ததை,

பல்நாள் எவ்வம் தீர பகல் வந்து
புன்னைஅம் பொதும்பின் இன்நிழல் கழிப்பி[76]

என்று அகநானூறு பாடல் கூறுகிறது. தலைவன் தலைவி இன்புறுவதற்கும், பொழுதுபோக்கிற்கும் மகிழ்வோடு வாழ்வதற்கும் புன்னை மரம் இன்றியமையாத இடம்பெற்றிருக்கும் சூழலியலை அறியமுடிகிறது.

### 2.1.3.12. பகற்குறி, இரவுக்குறி

தலைவனும் தலைவியும் சந்திக்கின்ற இடம் குறி என்று அழைக்கப்படும். இது பகற்குறி, இரவுக்குறி என இருவகைப்படும். இருவரும் சந்திக்கும் இடத்தைத் தலைவியும், தோழியும் தேர்வு செய்வார்கள். இத்தகைய குறிகளில் புன்னை மரமும் ஒன்றாகத் திகழ்கிறது. இதனை,

பூவேய் புன்னைஅம் தண் பொழில்
வாவே தெய்ய மணந்தனை செலற்கே[77]

என்றும்,

நான் மலர் நறுவீ தாஅம்
புன்னை நறும் பொழில் செய்த தம் குறியே[78]

என்றும் அகநானூற்றுப் பாடல்கள் தெரிவிக்கின்றன. இதன் மூலம் தலைவன் தலைவி சந்தித்துப் பேசுவதற்கு ஓரிடமாகப் புன்னை மரம் இடம்பெற்றிருக்கும் சூழலியலைக் காணமுடிகிறது.

### 2.1.3.13. தோழியரோடு விளையாடுதல்

தலைவனுக்குத் தலைவி எவ்வாறு உயிரோ அது போல் தலைவிக்கு அவளுடன் இருக்கின்ற தோழியும் உயிராவாள். காலையிலும், மாலையிலும் தலைவி தோழியுடன் சோலையில் நீராடி விளையாடுவாள். தோழி தன் வாழ்வைத் தலைவிக்காக அர்ப்பணிக்கிறாள். இவர்களின் விளையாட்டுகளில்

தாவரங்கள், விலங்குகள், பறவைகள் இடம்பெறுகின்றன. புன்னை மரத்தினடியில் விளையாடும் தலைவியின் விளையாட்டை,

.... .... .... குறுமகள்
விளையாட்டு ஆயமொடு வெண்மணல் உதிர்த்த
புன்னை நுண் தாது பொன்னின் நொண்டு[79]

என்று அகநானூறு தெரிவிக்கின்றது. கடற்கரையில் தலைவியும், தோழியும் பசுமையான புன்னை மரத்தில் உள்ள மகரந்தத் தாதுவைப் பொன் என எண்ணி அதனோடு இருவரும் விளையாடி மகிழ்ந்தனர். நெய்தல் நிலத்தில் வாழும் தலைவி, தோழியர் விளையாட்டுகளில் புன்னை மரத் தாது ஒன்றாகத் திகழ்வதோடு, அவர்கள் இயற்கையோடு விளையாடியச் சூழலியலையும் அறியமுடிகிறது.

### 2.1.3.14. வாழ்விடங்களில் புன்னை

நெய்தல் நில மக்கள் வாழ்வும், வாழ்விடமும் கடற்கரையைச் சுற்றியுள்ள நிலப்பரப்பாகும். இத்தகைய நிலப்பரப்பினைச் சேரி என்று அழைப்பர். சேரியில் வாழும் மக்களின் இருப்பிடத்தைச் சுற்றி புன்னை மரங்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. இதனை,

.... .... .... நம்
பராரைப் புன்னைச் சேரி[80]

என்று நற்றிணை குறிப்பிடுகின்றது. சங்க காலத்தில் நெய்தல் நில மக்கள் தங்கள் இருப்பிடத்தைச் சுற்றியிலும் புன்னை மரத்தை வளர்த்து இயற்கையோடு வாழ்ந்து வந்த சூழலியலை உணரமுடிகிறது.

### 2.1.3.15. காத்திருத்தலும் சந்தித்தலும்

பண்டையத் தமிழ் இலக்கியங்களில் அகவாழ்வில் தலைவியைத் தலைவன் காண யாவரும் அறியாமல் இரவிலும் பகலிலும் சென்று, கண்டு இன்புற்ற நிகழ்வுகள் மிகுதியாக இடம்பெற்றுள்ளன. களவு வாழ்க்கையிலிருந்து விரைவில் கற்பு வாழ்க்கையை மேற்கொள்ள வேண்டும் என்று தலைவி தலைவனிடம் வற்புறுத்துவதுண்டு.

பரா அரைப் புன்னை வாங்குசினைத் தோயும்
கானல்அம் பெருந்துறை நோக்கி[81]

என்று அகநானூற்றுப் பாடலும்,

கருங்கோட்டுப் புன்னை பூம்பொழில் புலம்ப

இன்னும் வாரார்; வரூஉம்,

பலமீன் வேட்டத்து என்னையர் திமிலே[82]

என்று குறுந்தொகை பாடலும் தலைவனுக்காகத் தலைவி புன்னை மரத்தடியில் காத்திருந்த அகவாழ்வின் சூழலியலைப் புலப்படுத்துகின்றன. மேலும் இதனை,

சிறுபல் தொல்குடிப் பெருநீர்ச் சேர்ப்பன்

கழிசேர் புன்னை அழிபூங் கானல்

தலைவா நெஞ்சமொடு தமியன் வந்து[83]

என்று அகநானூறும்,

புன்னை நீழல் புலவுத் திரைவாய்

அன்னம் நடப்ப நடப்பாள் செங்கண்[84]

என்று சிலப்பதிகாரமும் தெரிவிக்கின்றன. கோவலன் மாதவியைச் சந்திக்கும் இடமாகப் புன்னை மரம் காணப்படுகிறது. தலைவன், தலைவியர் வாழ்வியல் தாங்கள் சந்திப்பதற்குப் புன்னை மரம் பயன்படுமாற்றை இலக்கியங்கள் வெளிப்படுத்தி நிற்கின்றன.

கடற்கரையில் வாழும் பரதவ மக்களின் வாழ்விலும், தலைவன் தலைவியர் வாழ்விலும் புன்னை மரம் ஓய்வெடுக்க நிழலாகவும், சந்தித்துப் பேச ஏற்ற இடமாகவும், மீன்களை உலர வைப்பதற்காகவும், உறவாகவும், விளையாடுவதற்காகவும், காவல் மரமாகவும் பயன்பட்ட இயற்கைசார் சூழலியலை அறியமுடிகிறது.

### 2.1.4. வேப்ப மரம்

பழந்தமிழர்கள் தங்களுடைய இருப்பிடத்தைச் சுற்றி வேப்ப மரங்களை நட்டுப் பேணி காத்தனர். நோய் நீக்கும் கிருமி நாசினியாக வேப்ப மரத்தின் இலைகள், காய்கள், பழங்கள், பட்டைகள் செயலாற்றுகின்றன. இந்த மரத்திலிருந்து வெளிவரும் காற்று உடலுக்கு ஆரோக்கியத்தைத் தருகிறது. இதனால்தான் மக்கள் வீட்டைச் சுற்றி வேப்பமரத்தை வளர்த்து வருகின்றனர்.

வேப்ப மரம் மிகுதியான அளவில் இருப்பது தென் மாநிலங்களில்தான். அதனால்தான் இது இந்தியாவின் பொக்கிஷமாகத் திகழ்கிறது. இதன் தாவரவியல் பெயர் "*Azadirachta indica*"[85] ஆகும்.

### 2.1.4.1. வேறு பெயர்கள்

வேப்ப மரத்திற்கு,

அகுனாதி, அசிசு, அகசமுட்டி, சங்கு மரு, சீரிணபன்னன், பிசு, பிசிதம், மாலுகம், சாகாதம், விருந்தம், நலதம்பு, நிம்பம், பூநிம்பம், வச்சரி, வாதாரி, விசுமிகினி, வருட்டம், பூயாதி, அருக்கபாதவம், அருட்டம்[86]

எனப் பல்வேறு பெயர்கள் உண்டு.

### 2.1.4.2. வேப்பின் வகைகள்

வேப்ப மரமானது,

கருஞ்சினை வேம்பு, கருஞ்சின விறல் வேம்பு, கருங்கால் வேம்பு, மன்ற வேம்பு, கோட்டு இணர் வேம்பு, பொரி அரை வேம்பு, குறுஞ்சினை வேம்பு, பராரை வேம்பு, அலர் தார் வேம்பு, வாடா வேம்பு, சினை அலர் வேம்பு, ஒண் பூ வேம்பு, கான வேம்பு[87]

எனப் பல்வேறு வகைகளில் காணப்படுகிறது.

வேப்ப மரம் இந்தியாவில் உத்திரப் பிரதேசத்திற்கு அடுத்தப்படியாகத் தமிழகத்தில்தான் மிகுதியான எண்ணிக்கையில் காணப்படுகிறது. தமிழர் தம் வாழ்வியல் கலாச்சாரத்தின் இன்றியமையாத அங்கமாகவும், ஆன்மிகக் கலாச்சாரத்தோடு ஒன்றிணைந்தும் செயல்படுவதால் பல்லாயிரம் ஆண்டுகள் கடந்தும் இன்றும் வேம்பு நிலைத்து நிற்கிறது. எனவே தான் "எல்லா மரங்களிலும் வேம்பு மருந்தாகித் தப்பாமரம்"[88] என்று ச.வே.சுப்பிரமணியன் குறிப்பிடுகிறார்.

### 2.1.4.3. மன்றமும் மனையும்

ஊரின் நடுபகுதியை மன்றம் என்று அழைப்பர். இந்த மன்றம் பெரிய மரத்தைக் கொண்டதாகக் காணப்படுகிறது. மரத்தின் அடியில் மக்கள்

அனைவரும் ஒன்று சேர்ந்து பேசுவது வழக்கமாகும். இந்த மன்றம் வேப்ப மரத்தினடியில் இடம்பெற்றிருந்ததை,

மன்ற வேம்பின் மாச்சினை ஒண் தளிர்[89]

என்றும்,

.... .... வேம்பின் ஒண் தளிர்
நெடுங் கொடி உழிஞை பலரோடு மினந்து[90]

என்றும்,

மன்ற வேம்பின் ஒண்குழை மலைந்து[91]

என்றும் புறநானூற்றுப் பாடல்கள் தெரிவிக்கின்றன. இதன் வாயிலாக மன்றங்கள் இருந்ததையும் மக்கள் அதனுடைய இலைகளைப் பறித்துச் சூடிக் கொண்டதையும் அறியமுடிகிறது.

வேப்பமரம் கிளைகளைப் பரப்பித் தழைத்திருக்கும். இதன் அடி நிழலில் பலரும் கூடுவதால் மன்றம் ஆயிற்று. இதனால் மன்ற வேம்பு எனப்பட்டது[92]

என்று கோவை.இளஞ்சேரன் குறிப்பிடுகிறார். இதன் மூலம் மக்கள் கூடிப் பேசும் மன்றங்களில் வேப்ப மரம் இருந்த ஆரோக்கியமான சூழலியல் வாழ்வைக் காணமுடிகிறது.

மாதத்தில் ஒருமுறை வேப்பெண்ணெய் தேய்த்துக் குளிக்கலாம். தலையில் உள்ள பேன், பொடுகு போன்றவை நீங்கும்[93]

என்று வேம்பின் மருத்துவக்குணத்தை ச.வே.சுப்பிரமணியன் குறிப்பிடுகிறார்.

மக்கள் தலையில் வேப்பிலை, வேப்பெண்ணெய் போன்றவற்றை பயன்படுத்துவதற்குக் காரணம் அது மிகச் சிறந்த கிருமி நாசினியாகக் காணப்படுவதால்தான். இவ்வழக்கம் இன்றும் பயன்பாட்டில் உள்ளது. விழாக் காலங்களிலும், நோய் பரவும் காலங்களிலும் மக்கள் தங்களுடைய இல்லத்தில் வேப்பிலையைக் கட்டி வைத்தனர். இதன் மூலம் நோய்த் தொற்றுப் பரவாமல் தடுத்தனர். இதனை,

தீம் கனி இரவமொடு வேம்பு மனைச் செரீஇ[94]

என்று புறநானூறு தெரிவிக்கின்றது. இதன் மூலம் மக்கள் தங்களுடைய வீடுகளில் வேப்பிலை கட்டியதை அறியமுடிகிறது.

> அன்றாட வாழ்க்கைக்கு வீட்டைச் சுற்றி இரண்டு, மூன்று வேம்பு மரங்கள் இருந்தால் மிகவும் நல்லது. வேப்பங்காற்று நோய்க் கிருமிகளை அகற்றும் இயல்புடையது[95]

*என்று வேப்ப மரத்தைச் சிறப்பித்துக் கூறுகின்றார் ச.வே.சுப்பிரமணியன். சங்க காலத்தில் மக்கள் வேப்பமரச் சூழலோடு உறவாடியதை அறியமுடிகிறது.*

### **2.1.4.4. காவல் மரம்**

*சங்க கால மன்னர்களின் காவல் மரங்களில் வேப்ப மரமும் ஒன்றாகும். இம்மரம் மோகூர் என்ற மன்னனின் காவல் மரமாகத் திகழ்ந்தது. இதனை,*

மோகூர் மன்னன் முரசம் கொண்டு
நெடுமொழி பணித்து அவன் வேம்பு முதல் தடிந்து[96]

*என்கிறது பதிற்றுப்பத்துப் பாடல். மோகூர் என்ற மன்னனின் காவல் மரமான வேப்பமரத்தை வெட்டி வீழ்த்தி முரசு செய்து சேரனின் வெற்றியை நிலைநாட்டப்பட்டதை இப்பாடல் குறிப்பிடுகிறது. மேலும்,*

கருஞ்சினை விறல் வேம்பு அறுத்த
பெருஞ்சினைக் குட்டுவற் கண்டனம் வரற்கே[97]

*என்னும் பதிற்றுப்பத்துப் பாடலிலும், மோகூர் மன்னனின் காவல் மரத்தை வெட்டி வீழ்த்திய சேரனின் வெற்றிச் சிறப்பினைக் காணமுடிகிறது. போர்க் களத்தில் எதிர் எதிரே நின்று சண்டையிட்டு வென்றாலும் தோற்றவனின் காவல் மரத்தை வெட்டி வீழ்த்துவதையே பெரும் வெற்றியாக நினைத்த அக்கால வீரவுணர்வை அறியமுடிகிறது. காவல் மரம் சார்ந்த மக்களின் வீர வாழ்வியல் சூழலியலை அறிந்து கொள்ளமுடிகிறது.*

### **2.1.4.5. சிறுவர்கள் விளையாடுதல்**

*மக்கள் சமத்துவத்தைத் தெளிவுபடுத்தும் காரணிகளில் ஒன்று விளையாட்டு ஆகும். சிறுவர்கள் மரத்தின் அடியிலும், கடற்கரையிலும் விளையாடி மகிழ்வர்.*

பொரி அரை வேம்பின் புள்ளிநீழல்
கட்டளை அன்ன இட்டு அரங்கு இழைத்து
கல்லா சிறாஅர் நெல்லி வட்டு ஆடும்[98]

என்னும் நற்றிணை பாடல் வழி, சிறுவர்கள் வேப்பமரத்தின் நிழலில் நெல்லிக் காய்களைக் கொண்டு விளையாடியதை அறியமுடிகிறது. மக்கள் வாழுமிடங்களில் வேப்ப மரங்கள் வளர்க்கப்பட்ட வாழ்வியல் சூழலியலைக் காணமுடிகிறது.

### 2.1.4.6. வேப்பங்காயின் இயல்பு

வேப்ப மரத்தின் காய்கள் கசப்புத் தன்மையுடையவை, கனிகள் இனிப்புத் தன்மையுடையதாக இருக்கும். ஆனால் தலைவி தனக்கு வேப்பங்காய் தரும் போது கசப்பான வேப்பங்காயை இனிப்புச் சுவையுடையதென்று தலைவன் கூறுகிறான். இது தலைவன் தலைவியின் காதலை உயர்வுபடுத்துவதாக அமைகிறது. இதனை,

வேம்பின் பைங்காய் என் தோழி தரினே
தேம் பூங்கட்டி என்றனீர்[99]

என்னும் குறுந்தொகை பாடல் தெளிவுறுத்துகின்றது. தலைவி கையால் வேப்பங்காயைக் கொடுக்கும்போது அது இனிப்பாக இருக்கின்றது என்று வேப்பங்காயைக் குறிப்பிடுவதிலிருந்து அக்காலக் காதல் சிறப்பையும், அவர்கள் வாழ்வியலில் வேப்பமரம் ஒன்றிணைந்து இருந்ததையும் அறியமுடிகிறது.

### 2.1.4.7. வழிபாடுகளில் வேப்ப மரம்

சங்க கால மக்கள் மரங்களை இறைவழிபாட்டோடு இணைத்து வணங்கி வந்துள்ளனர். அந்த மரங்களில் தெய்வம் உறைந்திருப்பதாகவும் அதனைக் கோவிலாகவும் கடவுளாகவும் எண்ணி வழிபட்டுள்ளனர். இதனை,

வயவாள் எறிந்து வில்லின் நீக்கி
பயம்நிரை தழீஇய கடுங்கண் மழவர்
அம்புசேண் படுத்து வன்புலத்து உய்த்தென
தெய்வம் சேர்ந்த பராரை வேம்பில்
கொடுப்பு ஆஎறிந்து குறிதி கூஉய்
புலகூப் புழுங்கு உண்ட வாண்கண் அகல்அறை[100]

என்று அகநானூறு பாடல் விவரிக்கின்றது. வெட்சி வீரர்கள் கரந்தை வீரர்களோடு போரிட்டுப் பசுக் கூட்டத்தைக் கவர்ந்து வேப்பமரத்தின்

அடியில் நன்றாகக் கொழுப்பு அதிகம் உடைய பசுவினைக் கொன்று அதன் குருதியை வேப்ப மரத்தில் தெளித்து, வழிபட்டுக் கொன்ற பசுவினைச் சமைத்து உண்டனர்.

> எல்லா கோவில்களிலும் தலவிருட்சமாக ஒரு மரம் இருக்கும். ஆனால் மரமே தெய்வமாக, கோவிலாகப் பூஜிக்கப்படுவது இந்த வேம்பு மட்டும்தான்[101]

என்று ஆர்.கே.பாரதநேசன் குறிப்பிடுகிறார்.

> அரவாய்க் கடிப்பகை ஐயவிக் கடிப்பகை
> விரவிய மகளிர் ஏந்திய தூமத்துப்[102]

என்று மணிமேகலை பாடல், வீரர்களின் வீட்டில் வேப்பிலை கட்டுதல் பழக்கம் இருந்துள்ளதைத் தெரிவிக்கின்றது. இன்றும் போகி பண்டிகையின் போது மக்கள் தங்கள் வீடுகளிலும், வயல்களிலும் வேப்பிலையைக் கட்டுவதுண்டு. பண்டைய தமிழர்கள் "சுவடிகள் வேப்பிலை மேல் அடுக்கி வைக்கப்பட்டுள்ளன"[103] என்று கு.வி.கிருஷ்ணமூர்த்தி குறிப்பிடுகிறார்.

வேப்பிலை ஒரு கிருமி நாசினியாக இன்றும் கருதப்படுகிறது. அம்மை, சின்னம்மை போன்ற நோய்களின்போது வீட்டின் முன் வேப்பிலை செருகி பிறருக்கு அறிவித்துள்ளனர். அம்மை நோயால் பாதிக்கப்பட்டவர்கள் வேப்பிலையின் மீது படுக்க வைக்கப்படுகின்றனர். வேப்ப மரக்காற்று உடல் நலத்திற்கு நன்மை பயக்கும் என்பதை உணர்ந்து வீடுகளில் இன்றும் மக்கள் வேப்ப மரங்களை வளர்த்து வருகின்றனர். மக்களின் வாழ்வியல் சூழலியலோடு இரண்டறக் கலந்த ஓர் உறுப்பாக வேப்ப மரம் காணப்படுவதைச் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறியமுடிகிறது.

வேப்ப மரத்தின் இயல்புகளை சங்ககாலத் தமிழர் தெள்ளிதின் அறிந்து வைத்தனர் என்பதனை அறியமுடிகிறது. வேப்ப மரத்தின் காய், இலை, பூ, மரப்பட்டை என அனைத்தும் மக்கள் வாழ்வியலோடு இணைந்திருந்ததைக் காணமுடிகிறது. மேலும் இதனைக் காவல் மரமாகவும், நிழல் தரும் பொருளாகவும் பயன்படுத்தியுள்ளனர். வேப்ப மரம் கிருமி நாசினி என்பதை அன்றே அறிந்திருந்த மக்கள் தங்கள் வீட்டைச் சுற்றிலும், ஊர்களிலும் வேப்ப மரத்தை நட்டு நோயற்ற வாழ்வினை வாழ்ந்துள்ளனர். சங்க கால மக்களின்

வாழ்வியலில் வேப்ப மரம் பெறும் இன்றியமையாமையையும் அவர்தம் தாவர அறிவையும் சங்க இலக்கியங்கள்வழி அறிந்து கொள்ள முடிகிறது. இன்று உயர்வாகப் பேசப்படும் மூலிகை மருத்துவ அறிவை அன்றே நம் தமிழ் மக்கள் உணர்ந்திருந்தது அவர்தம் உயரிய பண்பட்ட வாழ்வை வெளிப்படுத்துவதாக உள்ளது.

### 2.1.5. மருத மரம்

சங்க காலத் தாவரங்களில் ஒன்று மருத மரமாகும். மருத மரம் நீள சதுர இலைகளையும் சாம்பல் நிற வழுவழுப்பான பட்டைகளையும் உடைய இலையுதிர் மரமாகும். இது தமிழக ஆற்றங்கரைகளில் தானாகவே வளரும் இயல்புடையது. இதில் கரு மருது, கலி மருது, பூ மருது எனப் பல்வேறு வகைகள் உள்ளன. “மருதம் என்பது மருத நிலத்தின் தலைமைத் தாவரமாகும்”[104] என்று கு.வி.கிருஷ்ணமூர்த்தி குறிப்பிடுகிறார். மருத மரத்தின் தாவரவியல் பெயர் “*Terminalia arjuna*”[105] என்பதாகும்.

### 2.1.5.1. வேறு பெயர்கள்

ஊர் பெயரைக் கொண்ட மருத மரத்திற்கு,

மீக்குவம், இந்திரதிரு, பாத்தம், பூலத்தி, வீர தரு, அர்ச்சுனம், கண்ணி[106]

எனப் பல பெயர்கள் உள்ளன.

### 2.1.5.2. உழவர்களின் வாழ்க்கைச் சூழலில் மருத மரம்

இந்தியாவின் முதுகெலும்பாக விவசாயம் காணப்படுகிறது. மனிதர்களின் உணவு தேவையினை இன்றுவரை உழவர்கள் பூர்த்தி செய்து வருகின்றனர். உழவர்களின் வாழ்வியலில் மருத மரம் இயைந்து காணப்படுகிறது. இதனை,

மருத மரநிழல் எருதொரு வதியும்
காமர் வேனில் மன்இது
மாண் நலம் நுகரும் துணை உடையோர்க்கே[107]

*என்று அகநானூறு பாடல் எடுத்துரைக்கின்றது. உழவர்கள் அறுவடை செய்த நெல்லையும், எருதுகளையும் மருத மரத்தின் நிழலில் கட்டி அவர்களும் தங்கினர் என்று அகநானூறு குறிப்பிடுகின்றது. உழவர்கள் வாழ்க்கைச் சூழலியலில் மருதமரம் களைப்பாற உதவிட்டதை அறியமுடிகிறது.*

பைதுஅற விளைந்த பெருஞ்செந் நெல்லின்
தூம்புடைத் திரல் தாள் துமித்த வினைஞர்
பாம்பு உறை மருதின் ஓங்குசினை நிழல்
பலிபெறும் வியன்களம் மலிய ஏற்றி[108]

*என்று பெரும்பாணாற்றுப்படை பாடல் உழவர்கள் முற்றிய பெரிய செந்நெல்லைக் கொண்ட தாளை அறுத்துக் கொண்டு மருத மரத்தின் நிழலிலே களங்கள் நிறையும்படி போராகக் குவித்து வைத்திருந்ததைத் தெரிவிக்கிறது. உழவர்கள் வாழ்வியல் சூழலியலில் மருத மரத்தின் நிழல் அறுவடை செய்த நெற்கதிர்களின் களங்களாகக் காணப்படும் சூழலியலை அறிந்து கொள்ள முடிகிறது.*

*உழவர்கள் வெண்ணெல்லை அறுவடை செய்கின்ற காலத்தில் பல பறவையினங்கள் கதிரைத் தின்னாமலிருக்க முழக்கங்கள் செய்வார்கள். இதனை,*

வெண்ணெல் அரிநர் தண்ணுமை வெரீஇ
பழனப் பல்புள் இளிய, கழனி
வாங்கு சினை மருதத் தூங்குணர் உதிரும்
தேர் வண் விராஅன் இருப்பை அன்ன[109]

*என்று நற்றிணை பாடல் கூறுகிறது.*

*மருத மரத்தின் இயல்பினை "களர் நிலமானாலும் கல் நிலமானாலும் பனியானாலும் வெப்பமானாலும் மருதம் தழைக்கும்"[110] என்று அரிஸ்டாட்டில் குறிப்பிடுகிறார். எல்லா தட்பவெப்ப நிலையையும் தாங்கும் மரமாக இது காணப்படுகிறது. அதனால்தான் அக்கால உழவர் அறுவடை செய்த நெல்லை இம்மரத்தின்கீழ் குவித்து வைத்தனர்.*

### 2.1.5.3. நீர் நிலைகளில் மருத மரம்

*மக்கள் நீர் நிறைந்த ஆற்றில் விளையாடி மகிழ்ந்தனர். அவர்கள் விளையாடும் இடங்களில் மருதமரம் காணப்படுகிறது. இதனை,*

. . . .  . . . .  . . . .  நம்ஊர்
முடம் முதிர் மருதத்துப் பெருந்துறை
உடன் ஆடு ஆயமோடு உற்றசூளே[111]

*என்று ஐங்குறுநூறு பாடல் குறிப்பிடுகிறது. தலைவன், தலைவி மருத மரங்கள் கொண்ட நீர் நிலைகளில் புனலாடியதை ஐங்குறுநூறு குறிப்பிடுகின்றது. மேலும்,*

. . . .  . . . .  . . . .  மகிழ் நன்
மருது உயர்ந்து ஓங்கிய விரியும் பெருந்துறை
பெண்டிரொடு ஆடும் என்ப[112]

*என்றும்,*

கரைசேர் மருதம் ஏறிப்
பண்ணை பாய்வேள் தண் நறுங் கதுப்பே[113]

*என்றும்,*

. . . .  . . . .  . . . .  மலர
தொல் நிலை மருதத்துப் பெருந்துறை
நின்னோடு ஆடினள் தண் புனல் அதுவே[114]

*என்று ஐங்குறுநூற்றுப் பாடல்களும்,*

உயர்சினை மருதத்துறை உறத் தாழ்ந்து
நீர்நணி படி கோடு ஏறி சீர் மிக
கரையவர் மருள திரையகம் பிதிர
நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பெயர்ந்து[115]

*என்று புறநானூற்றுப் பாடலும்,*

கடைகழி மகளிர் காதல் அம் செல்வரொடு
வருபுனல் வையை மருதோங்கு முன்துறை
. . . .  . . . .  . . . .  . . . .
. . . .  . . . .  . . . .  . . . .
பூம்புனை தழீஇப் புனல் ஆட்டு அமர்ந்து[116]

என்று சிலப்பதிகாரப் பாடலும் குறிப்பிடுகின்றன. தலைவன், தலைவி, பரத்தையர், மகளிர் முதலியோர் மருத மரத்தில் ஏறி குதித்து நீர் நிலைகளில் விளையாடியச் சூழலை அறியமுடிகிறது.

> மருத மர அமைப்பாலேயே மருத முன்றுரை எனப்படும் துறைகள் குளத்திலும் ஆற்றிலும் அமையும். இவை நீராடும் துறைகள் வைகையில் மருத முன்றுரை இருந்தது[117]

என்று நீர்நிலைகளில் மருதமரம் இடம்பெற்றச் சூழலை கோவை.இளஞ்சேரன் குறிப்பிடுகிறார். நீர் நிலைகளின் ஓரங்களில் வாழ்ந்து, மருத மரங்களோடு ஒன்றிணைந்து செம்மையான வாழ்க்கை வாழ்ந்த அக்காலத் தமிழர்தம் சூழலியல் போற்றுதற்குரியதாய் உள்ளது.

### 2.1.5.4. விலங்குகளின் கட்டுத்தறிகளில் மருதமரம்

வேடர்களின் தலைவன் அழிசி ஆவான். இவன் யானை வேட்டுவனாகவும், சோழர் படைத் தலைவனாகவும் திகழ்கிறான். இவனுடைய மகன் சேந்தன், சோழர்களுக்காகப் போர்ப் புரிந்து பகைவரின் யானைகளை கொண்டு வந்து காவிரியின் நீர்த்துறைப் பகுதியில் காணப்படுகின்ற மருத மரங்களில் கட்டினான். இதனை,

> .... .... .... காவிரிப்
> பலர் ஆடு பெருந்துறை மருதொடு பிணித்த
> ஏந்து கோட்டு யானைச் சேந்தன் தந்தை[118]

என்று குறுந்தொகை பாடல் தெரிவிக்கின்றது. மருத மரம் வீட்டின் அருகிலும், நீர் நிலைகளிலும் மக்களுக்குப் பயன்படுகின்ற சூழலியலை அறியமுடிகிறது. மருத மரத்தின் மருத்துவக் குணத்தை,

> மருத மரத்தின் பட்டையைக் காயவைத்துக் கஷாயம் செய்து குடித்தால் உடலில் கொழுப்புச் சத்துக் குறையும்[119]

என்று ஆர்.கே.பாரதநேசன் குறிப்பிடுகிறார். இன்றும் இம்மரம் தமிழர் வாழ்வோடு பிணைந்திருப்பதைக் காணமுடிகிறது.

நீர் நிலைகளில் வாழும் மருத மரங்கள், உழவர்கள் களைப்பாறவும், தலைவன் தலைவி விளையாடவும், போர் வீரர்கள் யானைகளைக்

கட்டுவதற்கு கட்டுத்தறியாகவும் அமைந்த சூழலியல் வாழ்க்கையைச் சங்க கால மக்கள் மேற்கொண்டதைத் தெள்ளிதின் அறியமுடிகிறது.

### 2.1.6. தென்னை மரம்

தொல்காப்பியர் புல் வகைகளில் குறிப்பிடும் தாவரங்களில் ஒன்றாகத் தென்னை மரம் காணப்படுகிறது. இது புல் வகையாக இருந்தாலும் மக்கள் வழக்கத்தில் மரமாகவே கருதுகின்றனர். தென்னை மரம் சங்க இலக்கியங்களில் குறைவாகவே இடம்பெறுகின்றன. வாழையைப் போல் அடி முதல் நுனி வரை மரத்தின் அனைத்து உறுப்புகளும் மனிதனுக்குப் பயன்படுகின்றன.

தென்னை மரத்தின் தாவரவியல் பெயர் "*Cocos nucifera*"[120] என்பதாகும். வீடுகளிலும் தோப்புகளிலும் வளர்க்கப்படுகின்ற மரமாகத் தென்னை மரங்கள் தமிழர் வாழ்விடங்களில் சிறப்பிடம் பெற்றுள்ளன.

### 2.1.6.1. வேறு பெயர்கள்

தென்னை மரத்திற்கு,

இரசபலம், உச்சதரு, சுராகரம், தீர்க்கபாதம், நாளிகோலம், கூர்ச்ச சேகரம், நீலமணி, முப்புடைக்கனி, விசுவாமித்திர பிரியம், நாரி கேரம், பலகேசரம், வரலபலம், புடோதகம்[121]

என்று பல பெயர்களுண்டு.

### 2.1.6.2. தென்னை உணவுகள்

தென்னை மருத நிலத்தில் வளர்கின்ற தாவரமாகும். இதனைத் தெங்கு என்று சங்க இலக்கியம் குறிப்பிடுகின்றது. மக்கள் செல்கின்ற வழிகளில் இரு புறங்களிலும் உயர்ந்த தென்னை மரங்கள் காணப்பட்டன. இளநீர், தேங்காய் முதலியவை வழிப்போக்கர்களுக்குத் தாகத்தைத் தீர்க்கும் நீராகவும், பசியைப் போக்கும் உணவாகவும் பயன்பட்டன. இதனை,

.... .... .... பகற்பெயல்
மழைவீழ்ந் தன்ன மாத்தாட் கமுகின்

புடைசூழ் தெங்கின் முப்புடைத் திரன் காய்
ஆறுசெல் வம்பலர் காய்பசி தீரச்
சோறு அடுகுழிசி இளக விழூஉம்[122]

என்று பெரும்பாணாற்றுப்படையின் பாடல் கூறுகின்றது. பகற்பொழுதில் கரிய தண்டினை உடைய கமுக மரத்தின் பக்கத்தில் சூழ்ந்திருக்கும் தென்னை மரங்கள் மிகுதியான காய்களை உடையதாகக் காணப்படுகிறது. அவ்வழியே செல்லும் வழிப்போக்கருக்கு மிகுந்த பசியினைத் தீர்க்கிறது போன்ற வாழ்வியலை அறியமுடிகிறது.

தென்னை மரத்தின் அனைத்து உறுப்புகளும் மனிதனுக்குப் பயன்படுவதாக உள்ளன.

உணவு கலாசாரத்தில் தேங்காய் அப்படியேயும், உலர்ந்த கொப்பரையாகவும் பயன்படுத்தப்படுகின்றது[123]

என்றும்,

சதைப்பற்றான தேங்காயின் மேல் காணப்படும் ஓடுதான் சிரட்டை என்று அழைப்பர். ஆரம்பித்த காலச் சூழ்நிலையில் பெண்களின் மார்பகங்களை மறைக்கவும், பாதுகாக்கவும் இந்த சிரட்டையே உதவியது[124]

என்றும் ஆர்.கே.பாரதநேசன் தேங்காயின் ஓடுகள் மக்களுக்குப் பயன்படுகின்ற நிலையைக் குறிப்பிடுகிறார்.

### 2.1.6.3. முந்நீர்

இலக்கியம் முந்நீர் என்றால் ஆற்றுநீர், ஊற்றுநீர், மழைநீர் போன்றவற்றைக் குறிப்பிடும். ஆனால் புறநானூறு, பெண்கள் அருந்தும் உணவாக இளநீர், கரும்பு சாறு, நொங்கு நீர் போன்றன கலந்த நீர்தான் முந்நீர் என்று வழங்கப்பட்டதைக் குறிப்பிடுகிறது. இதனை,

வண்டுபட மலர்ந்த தண் நறுங்கானல்
முண்டகக் கோதை ஒண் தொடி மகளிர்
இரும் பனையின் குரும்பை நீரும்
பூங்கரும்பின் தீம் சாறும்
ஓங்கு மணற் குவவுத் தாழைத்

தீம் நீரோடு உடன் விராஅய்

முந்நீர் உண்டு முந்நீர்ப் பாயும்[125]

என்று புறநானூற்றுப் பாடல் தெரிவிக்கிறது. கடற்கரைச் சோலையில் மாலை அணிந்த மகளிர்கள் பெரிய பனைக் குரும்பையின் நீரும், பூவினையுடைய கரும்பின் சாறும், தென்னையில் உள்ள இளநீரும் கலந்து முந்நீரைக் குடித்தனர் என்று புறநானூறு காட்சிப்படுத்துகிறது. இம்முந்நீர் உடலில் உள்ள வெப்பத்தைப் போக்கி குளிர்ச்சியை உண்டாக்கும் ஆற்றல் படைத்ததாகும்.

இளநீர் சுத்தமான, சுவையான, சத்தான மற்றும் வெப்பத்தைத் தணிக்கும் குளிர்பானம்[126]

என்று ஆர்.கே.பாரதநேசன் இளநீரின் குணத்தைக் குறிப்பிடுகிறார். மேலும்,

வெங்கள் தொலைச்சியும் அமையார் தெங்கின்

இளநீர் உதிக்கும் வளம் மிகு நல்நாடு[127]

என்று புறநானூற்றுப் பாடலும்,

மீதுயர்ந் திடுந் தெங்கிள நீரை

மிடைந்த பூகம் சுமந்துதன் காயைச்

சூத மொன்றிச் சுமக்கக் கொடுக்கும்[128]

என்று முக்கூடற்பள்ளு பாடலும் மக்களின் வாழ்க்கைச் சூழலில் இளநீர் உணவாகவும், நீராகவும் பயன்பட்ட வாழ்வில் சூழலியலைப் புலப்படுத்துகின்றன.

### 2.1.6.4. சிறுவர்கள் விளையாடுதல்

சங்க காலத்தில் சிறுவர்கள் மரங்களில் காணப்படும் குறிப்பிட்ட காய்களைக் கொண்டு விளையாடுவது மரபாகும். அவற்றில் தென்னை, பனை, நெல்லி, கோரை எனப் பல தாவரங்கள் பெரிதும் பயன்பட்டுள்ளன. இதனை,

வன்கை வினைஞர் புன் தலைச் சிறாஅர்

தெங்கு படுவியன் பழன் முனையின்[129]

என்று புறநானூற்றுப் பாடல் குறிப்பிடுகிறது. இதன் மூலம் சிறுவர்கள் தென்னை மரத்தின் காய்களைப் பறித்து விளையாடியதை அறியமுடிகிறது. தென்னை பல வகைகளில் மனிதனுக்குப் பயன்படுமாற்றை,

வீடுகளில் உருவாகும் கழிவுநீர் தேங்கிய கொசு, சிறு சிறு பூச்சி இனங்கள் மற்றும் நோய் கிருமிகள் உண்டாக்கி ஆரோக்கிய மற்ற

> வாழ்வியல் சூழ்நிலை உருவாகுவதைத் தடுக்க கொல்லைப்புறத்திலும், பக்கவாட்டிலும் தென்னை வளர்க்கப்படுகின்றன[130]

*என்று ஆர்.கே.பாரதநேசன் குறிப்பிடுகின்றார். மேலும்,*

> தென்னை மரத்தின் எல்லா பாகங்களும் மனிதனுக்குப் பயனாகின்றன. கட்டுமானங்களுக்குரிய மரம், கூரை, கயிறு என்று மற்றவற்றையும் குறிப்பிடலாம்[131]

*என்று அரிஸ்டாட்டிலும்,*

> நாக்கு வழிப்பதற்கு இப்போது நாக்கு வழிப்பான் (Tongue cleaner) பயன்படுத்துகின்றோம். முற்காலத்தில் தென்னை ஈர்க்குப் பயன்படுத்தப்பட்டு வந்தது[132]

*என்றும்,*

> தேங்காய்ச் சவரி போன்றவற்றைக் கொண்டு படுக்கைகள் செய்வதுண்டு[133]

*என்றும் ச.வே.சுப்பிரமணியனும் குறிப்பிடுகின்றனர். இவற்றின் மூலம் தென்னை மரம் மனித வாழ்வில் உணவாக, நாராக, கிருமி நாசினியாக, கூரை வேயும் பொருளாகப் பயன்படுகின்ற சூழலியலை அறியமுடிகிறது.*

*தென்னை மரங்கள் நாட்டின் இயற்கை வளங்களைப் பாதுகாப்பதில் இன்றியமையாததாகக் காணப்படுகிறது. இளநீர், தேங்காய் போன்ற உணவுப் பொருளாகவும், மெத்தையின் படுக்கைகளில் நாராகவும், கட்டுமானப் பொருளாகவும், விளையாட்டுப் பொருளாகவும் பயன்பட்டு, தென்னை மக்களுடைய வாழ்வியலில் ஒன்றிணைந்து காணப்படுகின்ற சூழலியலை அறியமுடிகிறது.*

### 2.1.7. மாமரம்

*பண்டையத் தமிழர் வாழ்வில் மாமரமானது பெரும் பங்களிப்பைத் தந்துள்ளது. முக்கனிகளில் ஒன்றாகக் காணப்படும் மாம்பழம் மன்னர்களுக்கும், மக்களுக்கும் உணவுப் பொருளாக இருந்துள்ளது. மாமரத்தின் அறிவியல் பெயர் "Mangifera indica"[134] என்று ஆர்.எஸ்.நாராயணன் குறிப்பிடுகிறார். இம்மரத்திற்கும் பல வேறு பெயர்கள் வழங்கப்படுகின்றன.*

> மதுதூதம், காமவல்லபன், மாந்தி, மரியசம், மாகந்தம், வசந்த தரு, சூதகம், சீழ்மரம், மன்மதாலயம், தீதளம், சேதாரம், கோலிலவாசம், மிருடாகம், தெசவம், ஆமிரம், சேகரம்[135]

எனப் பல்வேறு பெயர்களை சா.அனந்தகுமார் பட்டியலிடுகிறார்.

### 2.1.7.1. மாமரமும் ஊர்களும்

சங்க காலத்தில் மரங்களின் பெயரில் ஊர்களுக்குப் பெயரிட்டு வழங்குவது மரபாகும். “மாம்பாக்கம், மாங்காடு, மாமண்டூர்”[136] என்று மரத்தின் பெயரில் ஊர்களுக்குப் பெயரிடுவது வழக்கமாக இருந்துள்ளது. மேலும், “மாமரமானது நட்சத்திரங்களில் ஒன்றாகப் பூரட்டாதி”[137] என்பதுடன் தொடர்புடையதாக ஆர்.கே.பாரதநேசன் குறிப்பிடுகிறார்.

மாமரம் தன்னுடைய எல்லா உறுப்புகளையும் சமுதாயத்திற்கு உணவாக, நிழலாக, உரமாக, மருந்தாகத் தருகிறது. இதனை ச.வே.சுப்பிரமணியன்,

> மாவில் இலை, பூ, பிஞ்சு, காய், பழம், விதை, மரப்பட்டை, வேர்ப்பட்டை, பிசின் அனைத்தும் மருந்துப் பொருள்களாகப் பயன்படுகின்றன[138]

என்று குறிப்பிடுகிறார். மக்கள் வாழ்வியல் சூழலியலில் மாமரத்தின் அனைத்து உறுப்புகளும் மிக நெருங்கிய தொடர்புடன் இருந்ததை அறியமுடிகிறது.

மாமரம் மன்னர்களின் காவல் மரமாகக் காணப்பட்டு மக்களால் போற்றியும், வணங்கியும் சிறப்புற்றுள்ளது. மாமரமானது “சமவெளிகள், கடற்கரையோரங்களில் பயிராகுபவை”[139] என்று இரா.பஞ்சவர்ணம் கூறுகிறார்.

### 2.1.7.2. மாமர வளமை

நாடும் நாட்டு மக்களும் வளர்ச்சியடையவும், மகிழ்ச்சியாக வாழவும் பெருந்துணை புரிவது இயற்கை வளங்கள் ஆகும். நாட்டை ஆளும் மன்னர்கள், அங்கு வாழும் மக்கள் இயற்கையோடு இயைந்த சூழலியலில்

வாழ்ந்தனர். மரம், செடி, கொடி, காய், கனி போன்ற தாவர இனங்கள் அனைத்தும் வளமான நாட்டிற்குப் பெருமை சேர்த்தன. இதனை,

நெடுங்கால் மாஅத்து ஊழுறு வெண்பழம்
.... .... .... ....
.... .... .... ....
வாணன் சிறுகுடி வடாஅது[140]

என்று அகநானூற்றுப் பாடல் கூறுகிறது. வாணன் என்ற குறுநில மன்னனின் ஊரில் மாமரங்களில் பழங்கள் பழுத்து கீழே விழுந்து கிடக்கின்ற வளமையான இயற்கை வளத்தை அகநானூறு குறிப்பிடுகிறது. மேலும்,

செந்தமிழ்த் தென்புதுவை யென்னுந் திருநகரின்
மேற்கே, சிறு தொலைவில் மேவுமொரு மாஞ்சோலை[141]

என்று குயில் பாட்டு மாஞ்சோலையைக் குறிப்பிடுகிறது. சங்க காலத் தமிழ்ச் சமூகம் இயற்கையோடு இயைந்த வாழ்வியல் சூழலியலோடு வாழ்ந்ததைச் சங்க இலக்கியம் வெளிப்படுத்துகின்றது.

### 2.1.7.3. வீட்டுப்புறங்களில் மாமரம்

சங்க காலம் முதல் இக்காலம் வரை மக்கள் தங்கள் வீட்டைச் சுற்றி தாவரங்களை வளர்த்து இயற்கையோடு இயைந்து வாழ்ந்து வருகின்றனர்.

பாசவல் இடிக்கும் இருங்காழ் உலக்கை
கடிதுஇடி வெரீஇய கமஞ்சூல் வெண்குருகு
தீம்மலை வாழை ஓங்குமலர் இராது
நெடுங்கால் மாஅத்துக் குறும்பறை பயிற்றும்[142]

என்று அகநானூறு பாடல், பெண்கள் தங்களுடைய வயலில் விளைந்த நெல்லை வீட்டிற்கு கொண்டு வந்து உலக்கையால் பச்சை அவலுக்காக இடிக்கும்போது வெண்ணிறப் பறவையானது அந்த உலக்கையின் ஓசையைக் கேட்டு அஞ்சி நிழலுக்காக அருகில் உள்ள மாமரத்தில் சென்று தங்குகிறது என்று கூறுகிறது. மக்கள் தங்கள் வீட்டைச் சுற்றிலும் மாமரங்களை வளர்த்து இயற்கையோடு வாழ்ந்த சூழலியலை அகநானூறு படம்பிடித்துக் காட்டுகிறது. இதனை,

.... .... .... முன்றில்
தேன்தேர் சுவைய திரள் அரை மாஅத்து[143]

என்று அகநானூறும்,

மண்டபப் பளிக்கறை மருங்கொர் மாநிழல்

கொண்டவற்கு அளித்தோர் குளிர்கொள் பொய்கையே[144]

*என்று சீவகசிந்தாமணி பாடலும் குறிப்பிடுகின்றன. மக்கள் தங்கள் வாழும் இடங்களில் மாமரங்களை உணவுக்காகவும், நிழலுக்காவும் வளர்த்து இயற்கைச் சூழலோடு வாழ்ந்திருப்பதை அறிந்து இன்புற முடிகிறது.*

### 2.1.7.4. காவல் மரம்

*சங்க காலத்தில் மன்னர்களின் அடையாளச் சின்னமாக மரங்கள் காணப்பட்டன. அவற்றில் மாமரமும் ஒன்றாகும். மக்கள் இத்தகைய மரத்தை வழிபட்டும் வந்தனர். இதனை,*

. . . .    . . . .    . . . .    நன்னன்

நறுமா கொன்று ஞாட்டில் போக்கிய

ஒன்றுமொழிக் கோசர் போல[145]

*என்று குறுந்தொகை பாடல் குறிப்பிடுகிறது. நன்னன் என்ற குறுநில மன்னனின் காவல் மரம் மாமரமாகும். இம்மரத்தைக் கோசர்கள் போரில் வெட்டி வீழ்த்தி வென்றதை இப்பாடல் தெரிவிக்கின்றது. மன்னர்களின் வெற்றி, தோல்விகளில் மாமரம் ஓர் அங்கமாக இருந்த சூழலியலைக் காணமுடிகிறது.*

### 2.1.7.5. சூரபதுமனும் மாமரமும்

*சங்க இலக்கியத்தில் புராணச் செய்திகள் மிகுதியாக இடம்பெறுகின்றன. அத்தகைய புராணங்களில் தாவரங்களின் பங்கும் மிகுதியாக உள்ளன. மாமரம் குறித்து,*

இருபோர் உருவின் ஒருபேர் யாக்கை

அறுவேறு வகையின் அஞ்சுவர மண்டி

அவுணர் நல்வளம் அடங்க கவிழ் இணர்

மாமுதல் தடிந்த மறுஇல் கொற்றத்து

எய்யா நல்இசை செல்வேற் சேஎய்[146]

*என்று திருமுருகாற்றுப்படையும்,*

மாகடல் கலக்குற மாகொன்ற மடங்காப் போர்[147]

*எனக் கலித்தொகையும்,*

நோயுடை நுடங்குசூர் மா முதல் தடிந்து[148]

என்றும்,

கடுஞ்சூர் மாமுதல் தடிந்து அறுத்தவேல்[149]

என்றும்,

. . . .     . . . .     போர் மலிந்து

சூர் மருங்கு அறுத்த சுடர்ப் படையோயோ[150]

என்றும்,

எவ்வத்து ஒவ்வா மா முதல் தடிந்து[151]

என்றும்,

கொள்ளாத் தெவ்வர் கொள் மாமுதல் தடிந்து[152]

என்றும் பரிபாடல் பாடல்களும் பதிவு செய்கின்றன. சூரபதுமன் மாமரத்தின் தோற்றமாக மாறியதும், முருகபெருமான் அவனை அழித்த செய்திகளும் சங்க இலக்கியத்தில் பரவலாக இடம்பெற்றுள்ளன. இதன் மூலம் புராணங்களிலும் மாமரம் பெறுமிடத்தை அறியமுடிகிறது.

### 2.1.7.6. சாலையோரங்களில் மாமரங்கள்

காதலிக்கும் தலைவன் தலைவியின் திருமணத்திற்குப் பெற்றோர்கள் எதிர்ப்புத் தெரிவித்தால் யாருக்கும் தெரியாமல் அவர்கள் உடன்போக்குச் செல்வது அக்கால மரபாகும். இதனை,

மாநனை கொழுதி மகிழ் குயில் ஆலும்

நறுந்தண் பொழில்[153]

என்றும்,

அம் மா மேனி நிரை தொடிக் குறுமகள்[154]

என்றும் நற்றிணை பாடல்கள் உரைக்கின்றன. தலைவன் தலைவி உடன்போக்குச் செல்லும்போது வழியில் மாமரங்கள் நிறைந்திருந்ததையும், மாமரத்தின் தளிரைப் பெண்களின் அழகிற்கு உவமைபடுத்திக் கூறுவதையும் நற்றிணை பாடல்வழி அறியமுடிகிறது.

சங்க காலம் முதல் தற்காலம் வரை மக்களின் வாழ்வியல் சூழலியலில் மாமரமானது அனைத்து நிலைகளிலும் ஒன்றிணைந்து காணப்படுகிறது. மன்னர்கள் வாழ்வில் மாமரம் காவல் மரமாக இருந்ததை அறியமுடிகிறது.

இயற்கை வளங்களில் மாமரமானது ஓர் அங்கமாக விளங்கிய அக்காலச் சூழலியலைச் சங்கப் பாடல்கள் வழியாகத் தெள்ளிதின் அறியமுடிகிறது.

### 2.1.8. பலா மரம்

சங்க கால மக்கள் தங்களுடைய வாழ்விடத்தில் வளர்க்கப்படும் மரங்களில் ஒன்றாகப் பலா மரம் காணப்படுகிறது. முக்கனிகளில் ஒன்று பலா பழம் ஆகும். பலாச் சுளையினை உணவாகவும், சாறினை மதுவாகவும், விருந்து உபசரிக்கும் உணவு பொருளாகவும் அக்கால மக்கள் பயன்படுத்தியுள்ளனர். மன்னர்களின் நாடுகளிலும் பலா மரங்கள் மிகச் செழிப்பாக வளர்ந்து மக்களின் வாழ்வியலில் ஒன்றிணைந்து காணப்படுகின்றன.

பலா மரத்தின் தாவரவியல் பெயர் "*Artocarpus heterophyllus*"[155] என்று அரிஸ்டாட்டில் குறிப்பிடுகிறார்.

#### 2.1.8.1. வேறு பெயர்கள்

பலா மரத்திற்குப் பல்வேறு பெயர்கள் உண்டு. அவை,

கண்டகபலம், குடக்கனி, முரசபலா, முட்புறக்கனி, முழவுகனி, பசள், கண்டம்[156]

என்று சா.அனந்தகுமார் பட்டியலிடுகிறார்.

#### 2.1.8.2. பாரியின் பறம்பும் பலா மரமும்

சங்க கால மன்னர்கள் மக்களையும் இயற்கையையும் இரு கண்களாகக் கருதினர். மக்களைப் பாதுகாப்பது போல் இயற்கை வளங்களையும் பாதுகாத்து வளமையும், பசுமையும் உடைய நாடாக ஆட்சிப் புரிந்த எழில் சூழலைச் சங்க இலக்கியங்கள் தெரிவிக்கின்றன. பாரி என்பவன் சிறந்த கொடை வள்ளல் ஆவான். இவன் அனைவருக்கும் வாரி வாரி கொடுக்கும் பண்பினை உடையவன். இவனுடைய மலை பறம்பு மலை ஆகும். அந்த மலை முந்நூறு ஊரினை உடையதாகும். பறம்பு மலை இயற்கை வளங்களை மிகுதியாகக் கொண்டு காணப்படுகிறது. இதனை,

மருங்கில் கொண்ட பலவின்

பெருங்கல் நாடே! நீ நயந்தோள் கண்ணே[157]

*என்று குறுந்தொகை பாடல் தெரிவிக்கிறது. பாரி மன்னனின் புகழ்பெற்ற பறம்பு மலையானது பலா மரங்களைக் கொண்டுள்ளது. மக்கள் அதன் பழங்களை உணவாக உண்டு வாழ்ந்த சூழலை அறியமுடிகிறது. மேலும்,*

இரண்டே தீம்சுவைப் பலவின் பழம் ஊழ்க்கும்மே[158]

*என்றுரைக்கிறது புறநானூறு. மேலும் இதனை,*

சூதம் தன்கனி தூக்கும் பலாவில்

ஓது மந்த பலாக் கனி[159]

*என்றுரைக்கிறது முக்கூடற்பள்ளு. பாரியின் பறம்பு மலையில் பலா மரங்கள் செறிந்து காணப்பட்டு, அங்கு மலையில் வாழும் மக்களுக்கு உணவாகப் பயன்பட்ட இயற்கை சூழலை அறியமுடிகிறது. பலா மரத்தைப் பற்றி,*

> பூவாதே காய்க்கும் பலா என்று சொல்வர். பலாப் பூக்கள் பூப்பது வெளியே மிகுதியாகத் தெரிவதில்லை. வேரில் பழுக்கும் பலாமரப் பூக்களும் அத்தகையதே. ஆனால் காய்கள் கொத்துக் கொத்தாகத் தொங்கும். முப்பழங்களுள் ஒன்று பலா. சுவையும் மிகச் சிறந்தது[160]

*என்று ச.வே.சுப்பிரமணியன் குறிப்பிடுகிறார்.*

. . . .    . . . .    . . . .    ஓரி

பல்பழப் பழவின் பயம்கெழு கொல்லிக்[161]

*என்று அகநானூறும்,*

தீம்சுளைப் பலவின் மா மலைக் கிழவன்

ஆஅய் அண்டிரன் . . . .    . . . .[162]

*என்றும்,*

தடவு நினைப் பலவின் நாஞ்சில் பொருநன்

மடவன் மன்ற செந் நாப் புலவீர்[163]

*என்றும்,*

பழம் தூங்கு முதிரத்துக் கிழவன்

திருந்து வேல் குமணன் நல்கிய வளனே[164]

*என்று புறநானூற்றுப் பாடல்களும் தெரிவிக்கின்றன. பாரியின் பறம்பு மலை, ஓரியின் கொல்லி மலை, ஆய் அண்டிரனின் பொதிய மலை, நாஞ்சில் வள்ளுவனின் நாஞ்சில் மலை, குமணனின் முதிரமலை முதலியவற்றில் பலா*

*மரங்கள் செறிந்து காணப்படுவதையும் அங்கு வாழும் மக்களுக்கு உணவாகப் பயன்படுகின்ற நிலையையும் சங்க இலக்கியங்களின்வழி அறியமுடிகிறது.*

### 2.1.8.3. பசியாற்றும் பலாச்சுளை

*முக்கனியில் ஒன்றானப் பலாச்சுளை மிகுந்த சுவையினை உடையது. இது மக்கள் விரும்பி உண்ணக்கூடிய உணவாக இன்றும் திகழ்கிறது.*

அத்தப் பலவின் வெயில் தின்சிறு காய்
அருஞ்சுரம் செல்வோர்; அருந்தினர் கழியும்
காடுபின் ஒழிய வந்தனர்[165]

*என்று ஐங்குறுநூறு பாடல், 'வழிப்போக்கர்கள் வெயிலின் கொடுமையினைத் தாங்க முடியாமல் செல்லும் வழிகளில் உள்ள பலாமரத்தின் சுளையினைத் தின்று பசியையும், களைப்பினையும் போக்கிக் கொண்டனர்' என்று பலாமரத்தின் சிறப்பை எடுத்துரைக்கிறது. மேலும்,*

முன்றில் நீடியமுழவு உறழ் பலவில்
பிழிமகிழ் உவகையன் கிளையொடு கவிசிறந்து[166]

*என்று அகநானூறும்,*

முழவின் அமைந்த பெரும் பழம் மிசைந்து[167]

*என்று பதிற்றுப்பத்தும்,*

.... .... கமழ்நறுந் தீம்கனி
பயிர்ப்புறப் பலவின் எதிர்ச்சுளை அளைஇ[168]

*என்றும்,*

தீம்பலப் பலவின் சுளைவிளை தேறல்[169]

*என்று அகநானூறும்,*

கலை உணக்கிழிந்த முழவு மருள் பெரும்பழம்
சிலை கெழு குறவர்க்கு அல்கு மிசைவு ஆகும்[170]

*என்று புறநானூறும்,*

தாழ்கோட் பலவின் சூழ் சுளைப் பெரும்பழம்[171]

*என்று பெரும்பாணாற்றுப்படை பாடலும் தெரிவிக்கின்றன. பலாப்பழம் குறவர், வீரர்கள், வேட்டுவர்களுக்குப் பசியாறும் உணவாக இருந்த சூழலியலை அறியமுடிகிறது.*

> பலாப்பழத்தைத் தனியாகச் சாப்பிடுவதை விட சிறு சிறு துண்டுகளாக்கித் தேனில் ஊற வைத்து உண்பது பயனாம்[172]

*என்று ச.வே.சுப்பிரமணியனும்,*

> பலாப்பழத்தைப் புளிக்க வைத்துப் பின்னர் வடித்து எடுத்து உருவாக்கும் பலா மது கேரளத்திலும், ஒரிசா, வங்காளத்திலும், ஆதிவாசிகளிடம் கிட்டும்[173]

*என்று அரிஸ்டாட்டிலும் மக்கள் உணவில் பலாச்சுளை பயன்படுகின்ற முறையை வெளிப்படுத்துகின்றனர்.*

> சொன்ன நன் மலரும் அல்லனவும் வீழ் பலவின் சுளைகளும்
> நம்மை நூலின் நயந்தோன்ற நன்பொன் விரல் துதியினால்
> பன் மணியும் முத்தும் பவளமும் பைம் பொன்னும் கோத்தா லொப்ப
> என்ன அமரரும் மருளாத் தொடுத்தான் இனமாணுயே[174]

*என்று சீவகசிந்தாமணி பலாப்பழம் பயன்பாட்டைக் குறிப்பிடுகிறது. பலாச்சுளை உணவாக மட்டும் பயன்படுத்தாமல், மலர்களுடன் மாலையாகவும் கோர்த்து அணிந்த சூழலியலையும் அறியமுடிகிறது.*

### 2.1.8.4. பலாமரப் பரண்

*சங்க காலத்தில் மக்கள் வேளாண்மையை முதன்மைத் தொழிலாகச் செய்து வந்தனர். தங்களுடைய பயிரினைப் பாதுகாக்க பரண் அமைத்து விலங்குகளையும், பறவைகளையும் விரட்டியும், வேட்டையாடியும் வாழ்ந்த சூழலியலைச் சங்க இலக்கியங்கள் காட்சிப்படுத்துகின்றன. இதனை,*

> பிடியொடு மேயும் புன்செய் யானை
> அடி ஒதுங்கு இயக்கம் கேட்ட கானவன்
> நெடுவரை ஆசினிப் பணவை ஏறி
> கடுவிசைக் கவனையில் கல் கை விடுதலின்[175]

*என்று கலித்தொகை பாடல் கூறுகிறது. வேட்டுவன் பலா மரத்தின் மேல் பரண் அமைத்து யானையை விரட்டியதையும், வேளாண்மை செய்த சூழலையும் காணமுடிகிறது. மக்கள் வாழ்வியலில் உணவிற்காக மட்டுமின்றி இருப்பிடமாகவும் பலாமரம் இருந்த வாழ்வியலைக் கலித்தொகை எடுத்துரைக்கின்றது.*

### 2.1.8.5. குடிசை அமைத்தல்

*மக்கள் தங்களுடைய இல்லத்தின் அருகில் மரங்களை நட்டு வளர்த்தனர். மரத்தின் அடியிலும் இல்லங்களை அமைத்துப் பாதுகாப்பாகவும், அமைதியாகவும் இயற்கைச் சூழலோடு வாழ்ந்தனர். இதனை,*

விழுக் கோட் பலவின் பழுப்பயம் கொண்மார்
குறவர் ஊன்றிய குரம்பை புதைய[176]

*என்று அகநானூற்றுப் பாடலில் காணமுடிகிறது. குறவர்கள் பலா மரத்தின் அடியில் குடிசை அமைத்துப் பழங்களை உணவுப் பொருளாகக் பயன்படுத்தி, வளமைமிகு வாழ்வை மேற்கொண்டனர் என்பதை அறியமுடிகிறது.*

*பலா மரம் மன்னர்களின் நாட்டிற்குப் புகழை உண்டாக்கும் இயற்கை வளங்களில் ஒன்றாகத் திகழ்கிறது. மலைப் பகுதியில் வாழும் வேட்டுவர், குறவர் போன்றவர்களின் உணவுப் பொருட்களில் பலாப்பழமும் இன்றியமையாததாகக் காணப்படுகிறது. வேளாண்மைத் தொழிலுக்குப் பாதுகாப்புக் கருதி பரண்களை அமைப்பதற்கும், குடிசை அமைத்து இயற்கையோடு இயைந்து வாழ்வதற்கும் பலா மரங்கள் மக்கள் வாழ்வில் ஒன்றிணைந்து உதவிட்ட சூழலியல் பயன்பாட்டை உணரமுடிகிறது.*

### 2.1.9. வாழை மரம்

*சங்க இலக்கியங்களில் வாழை மரத்தின் தண்டு, இலை, பூ, காய், கனி என அனைத்து உறுப்புகளும் உணவு பொருளாகப் பயன்பட்டதையும் சுப நிகழ்ச்சிகளிலும், கலாச்சாரத்திலும் இன்றியமையாதவையாக இடம்பெற்றிருந்ததையும் காணமுடிகிறது. வாழை மரத்தின் அனைத்து உறுப்புகளும் மக்களுக்கு உணவு பொருளாகப் பயன்படுகின்ற மங்களத் தன்மையுடையதான சூழலியலை அறியமுடிகிறது. வாழை மரத்தின் தாவரவியல் பெயர் "Musaparad isiaca"[177] என்று அரிஸ்டாட்டில் குறிப்பிடுகிறார்.*

### 2.1.9.1. வேறு பெயர்கள்

*வாழை மரத்திற்கு,*

> தீர்க்கபரணி, அரம்பை, சேகிலி, மிருத்தியுபலை, வாரணபுசை, மஞ்சிபலை, கவர், காட்டிலம், காவற்கலி, வீரை, அங்குசம், அம்பணம், வாரபுசை, அரேசிகம், அற்பருத்தம், ரசதாளி, ஓசை, தந்துவிக்கிரியை, திரணபதி, தென்னி, வல்லம், வனலட்சுமி, கதலம், தீர்க்கவில்லை, மாலரம்பை[178]

*எனப் பல்வேறு பெயர்களை பட்டியலிடுகிறார் சா.அனந்தகுமார்.*

### 2.1.9.2. தமிழர் வாழ்வில் வாழை மரம்

*பண்டைத் தமிழர் வாழ்வில் இல்லத்திலும், வயல்களின் ஓரங்களிலும், ஊர் மன்றங்களிலும் வாழை மரம் மக்களுக்குப் பயன்படுகின்ற ஒன்றாய் அமைந்திருந்தது.*

> மனிதனின் இருப்பிடத்தில் கட்டாயமாக இருக்க வேண்டிய மரம் இந்த வாழை. நுனி முதல் அடி வரை அனைத்துப் பாகங்களும் பல வழிமுறைகளில் பயன்தரக் கூடியது[179]

*என்று ஆர்.கே.பாரதநேசன் கூறுகிறார். இதன் மூலம் மக்கள் வாழ்வில் வாழை மரம் முழுமையாகப் பயன்படுகின்ற சூழலியலைக் காணமுடிகிறது.*

> தமிழர்களின் வாழ்வியலில் பிறப்புத் தொடங்கி இறப்புத் தாண்டியுள்ள அனைத்துச் செயல்பாடுகளிலும் இரண்டறக் கலந்திருப்பது இந்த வாழை[180]

*என்று ஆர்.கே.பாரதநேசன் வாழையின் அனைத்துப் பகுதியும் மக்களுக்குப் பயன்படுவதைக் குறிப்பிடுகின்றார்.*

### 2.1.9.3. வாழ்விடத்தில், வழிபாட்டுத் தலத்தில் வாழை

*சங்க கால மக்கள் தங்கள் வீட்டைச் சுற்றி வாழை மரங்களை நட்டுப் பயன்பெற்றுள்ளனர். மகளிர் பச்சை அவலை இடித்துவிட்டு உலக்கையை அருகிலுள்ள வாழை மரத்தில் சார்த்திவிட்டு வள்ளைப் பூவைப் பறிக்கச் செல்வர். இதனை,*

> அவல் எறி உலக்கை வாழைச் சேர்த்தி
> வளைக் கை மகளிர் வள்ளை கொய்யும்[181]

என்று பதிற்றுப்பத்துப் பாடல் தெரிவிக்கிறது. மகளிர் தங்கள் வீட்டில் வாழை மரம் வளர்த்து அதனை உணவாகப் பயன்படுத்தி இயற்கைச் சூழலோடு வாழ்ந்து வந்த வளமான சூழலியலை அறியமுடிகிறது. வாழையின் இயல்பினை,

> வாழையின் புறத்தடை, தண்டு, காய், இலை, பழம் அனைத்தும் பயன்தரும் பொருள்களே. ஆனால் அது தன் வாழ்க்கையில் ஒருமுறைதான் குலைதள்ளும். பின்பு மரம் மடிந்து விடும்[182]

என்று ச.வே.சுப்பிரமணியன் குறிப்பிடுகிறார்.

வாழை மரம் மக்களுக்கு உணவாகப் பயன்படுகின்ற சூழலைப் போல் இக்காலத்தில் இறைவனுக்குத் தலமரமாகக் கோவில்களில் காணப்படுகின்ற சூழலையும் அறியமுடிகிறது.

> வீளைக் குரலும் விளிசங்கொலியும் வீழவின்னொலியோவோ
> மூளைத்தளை கொண்டடியா ரேத்தப் பொடியா மதியென்தார்
> ஈளைப்படுகில் இளையார் தெங்கிற் குலையார் வாழையின்
> பாளைக் கமுகின் பழம்வீழ் சோலைப் பழன நகராரோ[183]

என்று தேவாரப் பாடல் வாழை மரத்தைத் தலமரமாகக் கொண்ட சூழலியலை உணரமுடிகிறது.

### 2.1.9.4. வாழைக் காய்கள்

தமிழர்களின் உணவுகளில் வாழைக் காய் இன்றியமையாத இடம்பெறுகிறது. வாழைக்காயினைச் சமைத்து உண்டு வர உடல் வெப்பம், வயிற்றுளைச்சல், இருமல் நீங்கும் என்கின்றனர். உடலுக்கு வலிமையைத் தருவதாக இயற்கை மருத்துவர்கள் கூறுகின்றனர். இன்றும் தமிழர்களின் உணவு முறைகளில் மிகுதியாகப் பயன்படுத்தக்கூடிய காய்களில் வாழைக்காயும் ஒன்றாகும். இதனை,

> பல்வேறு உருவின் காயும்[184]

என்று மதுரைக்காஞ்சி கூறுகிறது. மக்கள் உணவாக வாழைக்காயினை உண்ணுகின்ற வழக்கத்தைக் காணமுடிகிறது.

> வாழைக்காய் அமாவாசை தினத்தில் அனைவரும் உண்ணுகின்ற காயாக இருப்பதால் அதை அமாவாசை காய் என்று அழைப்பதுண்டு[185]

என்று ஆர்.கே.பாரதநேசன் குறிப்பிடுகின்றார். இதன் மூலம் மக்கள் வாழ்வியலில் வாழைக்காய் மிக இன்றியமையாத உணவுப் பொருளாகப் பயன்பட்ட சூழலியலைக் காணமுடிகிறது.

### 2.1.9.5. வாழைப் பழங்கள்

நாவிற்கு இனிமையும் உடலுக்கு வலுவையும் கொடுப்பது வாழைப்பழம் ஆகும். வாழைப் பழங்கள் மிகுதியான இரும்புச் சத்துக்களை கொண்டுள்ளன. மலிவான விலையில் எங்கும், எப்போதும் கிடைக்கக் கூடியதான இவை உடலுக்கு ஆரோக்கியத்தையும், செரிமானத்தையும் மலச்சிக்கலையும் போக்கும் இயல்பினை உடையன.

குலைமுதிர் வாழைக் கூனி வெண்பழம்[186]

என்று பெரும்பாணாற்றுப்படை வாழைப் பழத்தைச் சிறப்பிக்கிறது. முதிர்ந்த வாழைப் பழத்தை விருந்து உபசரிப்பிற்கு மக்கள் பயன்படுத்தும் சூழலைக் காணமுடிகிறது. வாழைப்பழம் உணவாகவும், இறைவழிபாட்டுப் பொருளாகவும் மக்கள் வாழ்வியலில் இரண்டறக் கலந்திருக்கிறது.

உலகளவில் அதிக மக்களால் சாப்பிடப்படும் பழங்களில் வாழைப்பழமும் ஒன்று[187]

என்று ஆர்.கே.பாரதநேசன் வாழைப்பழத்தின் இன்றியமையாமையைக் குறிப்பிடுகின்றார். தமிழர்தம் வாழ்வில் மங்கல நிகழ்வில் வாழைப்பழம் தவறாது இடம்பெறுகிறது.

### 2.1.9.6. வாழை இலை

தமிழ்ச் சமூகத்தில் உணவு உண்ணும் முறை இலைகளில்தான் முதன் முதலில் தொடங்கியுள்ளது. வாழை இலை என்று சொன்னாலே நினைவில் வருவது அறுசுவை உணவுதான். நம் பாரம்பரியமாக உணவுண்ணும் வழக்கத்தில் வாழை இலை தலையாயது ஆகும். வாழை இலையில் உணவு உண்டால் நல்வாழ்க்கை அமையும் என்பது தமிழர்களின் நம்பிக்கை ஆகும். வாழை இலையில் சூடான உணவு உண்ணும் போது துவர்ப்புச் சுவை மறைமுகமாக உணவில் சேர்ந்து மனிதனுக்கு நன்மையினைத் தருகிறதென்று நம்புகின்றனர்.

மரை ஆன் கறந்த நுரை கொள் தீம்பால்
மான்தடி புழுக்கிய புலவு நாறு குழிசி
வான்கேழ், இரும்புடை கழாஅது ஏற்றி
சாந்த விறகின் உலித்த புன்கம்
கூதளம் கவினிய குளவி முறையில்
செழுங்கோள் வாழை அகல் அழைப்பகுக்கும்
ஊராக் குதிரைக் கிழவ[188]

*என்னும் புறநானூற்றுப் பாடல்வழி மரை என்ற பசுவின் பாலில் தினையைச் சமைத்து வாழை இலையில் அனைவரும் பகுத்துண்ணும் வாழ்வியல் சூழலியலை அறியமுடிகிறது.*

> உணவுக் கலாச்சாரத்தில் வாழைக்கு முக்கியப் பங்கு உண்டு. உலகளாவிய மானுட இனங்களில் உணவு உபசரிப்பில் தமிழர்களுக்கு நிகர் யாரும் இல்லை என்பதை நிரூபிப்பது தலை வாழை விருந்து. கொடுக்கப்படுகின்ற உணவு தூய்மையான பாத்திரத்தில் கொடுக்கப்பட வேண்டும். அதற்காகவே தலை வாழையில் உணவு பரிமாறப்படுகின்றது. கடவுளுக்கும் படையல் படைப்பதும் இந்த தலை வாழையில் தான். தமிழர்கள் அறுசுவை விருந்து படைக்கும் பழக்கம் உடையவர்கள். துவர்ப்புச் சுவை சமைக்கின்ற உணவில் இராது. எனவே தலை வாழை இலையில் சூடான சாதம் பரிமாறி துவர்ப்புச் சுவை மறைமுகமாகக் கிடைக்கச் செய்தனர்[189]

*என்று வாழை இலையின் மருத்துவக் குணத்தையும் இன்றியமையாமையும் ஆர்.கே.பாரதநேசன் குறிப்பிடுகிறார்.*

### 2.1.9.7. வாழைத்தண்டு

*வாழை மரம் நீரில் மிதக்கும் தன்மை கொண்டது. இதைப் பிடித்துக் கொண்டு ஆண்கள், சிறுவர்கள் நீர்நிலையில் விளையாடி மகிழ்வார்கள். இதனை,*

தண்டித் தண்டின் தாய்ச் செல்வாரும்[190]

*என்று பரிபாடல் பாடல் கூறுகிறது. நீராடலில் களைப்படையாத மைந்தர்களில் சிலர் மேலும் நீராட விரும்பி வாழைத் தண்டினைத் தழுவிக் கொண்டு நீரின் மேல் தாவித்தாவிச் சென்று விளையாடி தங்களுடைய உடலை*

வலுபடுத்தியதையும் உள்ளத்தை அமைதிப்படுத்தியச் சூழலையும் அறியமுடிகிறது.

"வாழ் என்னும் அடியை உடையது வாழை"[191] என்பார் கோவை.இளஞ்சேரன். அதனால் தான் மக்கள் வாழ்க்கையில் மிகவும் பயன்படும் மரங்களில் வாழை மரமும் இடம்பெற்றது. "வாழை மருந்தாகவும் உணவாகவும் இருந்த காரணத்தால் தான் இதை வனலட்சுமி என்கின்றனர்"[192] என்று அரிஸ்டாட்டில் குறிப்பிடுகிறார். வாழை மரம் மக்கள் வாழ்வில் காயாகவும், கனியாகவும், இலையாகவும், தண்டாகவும் பயன்பட்டு அவர்களின் வாழ்வியலில் ஒன்றிப் போன மிக இன்றியமையாத மரமாக இருந்த சூழலியலை அறியமுடிகிறது.

### 2.1.10. வேங்கை மரம்

சங்க இலக்கியத்தில் மிகுதியாகக் காணப்படுகின்ற மரங்களில் ஒன்றாக வேங்கை மரம் திகழ்கிறது. வேங்கை என்னும் சொல் புலியையும், மரத்தையும் குறிக்கிறது. வேங்கை மரம் ஓர் இலையுதிர் தாவரமாகும். பொருளாதார அடிப்படையில் விலையுயர்ந்த மரங்களில் வேங்கை மரமும் ஒன்றாகக் காணப்படுகிறது. விவசாய நிலங்களின் வரப்பு ஓரங்களில் நடுவதன் மூலம் மண் வளமும் நீர் வளமும் மேம்படுத்தி வருவாயை ஈட்டுவதாக அமைகிறது. வேங்கை மரத்தின் தாவரவியல் பெயர் "*Pterocarpus marsupium* fabaccae"[193] என்பதாகும்.

#### 2.1.10.1. வேறு பெயர்கள்

வேங்கை மரத்திற்கு,

அசனம், பிரியகம், பெயாதனம், சந்தநாதி, தன்னினி, திமிசம், வஞ்சுளம்,

பீதகாரகம், வீசகரி[194]

என்று பலப் பெயர்களை சா.அனந்தகுமார் பட்டியலிடுகிறார்.

### 2.1.10.2. நாட்டு வளங்களில் வேங்கை

*தலைவனுக்குப் புகழை உண்டாக்குவதில் இயற்கை வளமும் ஒன்றாகும். இத்தகைய வளங்களை உடைய தலைவன் நாட்டில் வேங்கை மரங்கள் மிகுதியாக வளர்ந்துள்ளன. இதனை,*

அருவி வேங்கைப் பெருமலை நாடற்கு[195]

*என்று குறுந்தொகை கூறுகிறது. தலைவன் நாட்டில் வேங்கை மரங்கள் மிகுதியாகக் காணப்பட்டுப் பசுமையான சூழலியல் நிலவியதை அறியமுடிகிறது. இதனை,*

படப்பை வேங்கைக்கு மறந்தனர் கொல்லோ[196]

*என்று குறுந்தொகைப் பாடலும் குறிப்பிடுகிறது. தலைவி தன் வீட்டில் வேங்கை மரங்களை நட்டு வளர்க்கின்றாள். இப்பாடல் வாயிலாக மண் வளர்த்திற்காக நடப்பட்ட மக்கள் வாழ்வியலின் சிறப்பினை அறியமுடிகிறது. "தமிழ்நாட்டுக் குறிஞ்சி நிலப் பண்பாட்டின் சின்னம் வேங்கை தான்"[197] என்று வேங்கை மரத்தின் சிறப்பினை அரிஸ்டாட்டில் குறிப்பிடுகிறார்.*

### 2.1.10.3. ஊர் மன்றங்களில் வேங்கை

*சங்க காலத்தில் வேங்கை மரம் மன்றங்களில் ஒன்றாகக் காணப்படுகிறது. இதனை,*

மன்ற வேங்கை மலர் பதம் நோக்கி[198]

*என்று குறுந்தொகையும்,*

குன்றக் குறவன் காதல் மடமகள்
மன்ற வேங்கை மலர் சில கொண்டு
மலை உறை கடவுள் குலமுதல் வழுத்தி[199]

*என்று ஐங்குறுநூறும் தெரிவிக்கின்றன. ஊர் மன்றங்களில் வேங்கை மரம் காணப்படுகிறது. அம்மரத்தில் குறவனின் இளைய மகள் பூக்களைப் பறித்து விளையாடுகிறாள் என்னும் அழகிய இயற்கை சார்ந்த சூழலியலை அறியமுடிகிறது.*

குன்றக் குறவர் ஒருங்குடன் கூடி
பொலம்பூ வேங்கை நலங்கிளர் கொழுநிழல்
ஒருமுலை இழந்தாள் ஓர் திருமா பத்தினிக்கு
அமரர்க்கு அரசன் தமர் வந்து ஈண்டி[200]

என்று சிலப்பதிகாரம், கண்ணகி வேங்கை மரத்தடியில் தெய்வமாகிய சூழலைத் தெரிவிக்கிறது. நிறைந்த நிழலைத் தருகின்ற, மக்கள் இளைப்பாறுகிற இடமாக வேங்கை மரங்கள் காணப்படுகின்றன.

### 2.1.10.4. குறவரும் கோவலரும்

சங்க காலத்தில் மக்கள், வீரர்கள் மதுவைக் குடித்துவிட்டுக் கூத்தாடுவது மரபாக இருந்துள்ளது. இதனை,

குறிஇறைக் குரம்பைக் குறவர் மாக்கள்
வாங்குஅமைப் பழுனிய தேறல் மகிழ்ந்து
வேங்கை முன்றில் குரவை அயரும்[201]

என்றும்,

பூவாட் கோவலர் பூவுடன் உதிரக்
கொய்து கட்டுஅழித்த வேங்கையின்[202]

என்றும் புறநானூற்றுப் பாடல்கள் குறிப்பிடுகின்றன. குறவர்கள் வேங்கை மரத்தடியில் மதுவினைக் குடித்துவிட்டுக் கூத்தாடிய சூழலையும், கோவலர்கள் தங்களுடைய வீட்டில் வளர்க்கின்ற ஆநிரைக்கு வேங்கையின் இலைகளை உணவாக வெட்டிச் சென்ற சூழலையும் புறநானூற்றின்வழி அறியமுடிகிறது. "வேங்கையைப் போல் உறுதி எம்மரத்திற்கும் இல்லை"[203] என்று அரிஸ்டாட்டில் வேங்கை மரத்தின் உறுதித் தன்மையினைக் குறிப்பிடுகிறார்.

வேங்கை மரம்,

சங்க இலக்கியங்களில் மர வேங்கைக்கு மிகுதியான ஆட்சி உள்ளது. பொதுவில் இச்சொல் சங்க இலக்கிய அளவில் 158 இடங்களில் ஆளப்பட்டுள்ளது. இவற்றில் 141 இடங்களில் மர வேங்கைகளைக் குறிக்க வந்துள்ளது. 17 இடங்களில் விலங்குகளைக் குறிக்கின்றது[204]

என்று கோவை.இளஞ்சேரன் குறிப்பிடுகிறார்.

வேங்கை மரங்கள் வீரத்திலும், மண் வளத்திலும் அக்கால மக்கள் வாழ்வியல் சூழலியலோடு ஒன்றிணைந்ததை அறியமுடிகிறது. தலைவனின் நாட்டில் வேங்கை மரங்கள் சூழ்ந்த இயற்கை வளமும் சிறந்த வளங்களில் ஒன்றாகத் திகழ்வதால் மண் வளம், நீர் வளம் போன்றவற்றைப் பேணிப்

*பாதுகாத்தச் சூழலியலைக் காணமுடிகிறது. மன்றங்களில் ஓர் அங்கமாகவும், கோவலர்கள் வீட்டில் வளர்க்கும் விலங்குகளுக்கு உணவாகவும், குறவர்கள் கூத்தாடுகின்ற இடமாகவும் அமைந்து அக்கால மக்கள் வாழ்வியலில் வேங்கை மரம் இரண்டறக் கலந்திருந்ததை உணரமுடிகிறது.*

### 2.1.11. நெல்லி மரம்

*சங்க இலக்கியங்களில் காணலாகும் பசுமையான தாவரங்களில் நெல்லி மரமும் ஒன்றாகும். மக்கள் நெல்லி மரத்தில் விளைந்த நெல்லிக் காய்களை மிகுதியாகப் பயன்படுத்தியமையை அறியமுடிகிறது. நெல்லிக் காய்களில் வைட்டமின் 'சி' சத்துகள் நிறைந்திருப்பதை மருத்துவ உலகம் தெரிவிக்கிறது. நெல்லி மரத்தின் தாவரவியல் பெயர் "Phyllanthus emblica"*[205] *என்பதாகும்.*

#### 2.1.11.1. வேறு பெயர்கள்

*நெல்லி மரத்திற்கு,*

கந்தாத்திரி, மிருதுபாலா, ஆலகம், இந்துளி, கோங்கம், அந்தகோலம்,
யஸ்கோரம், அமலகம்[206]

*என்று பல்வேறு பெயர்களுண்டு.*

#### 2.1.11.2. போர்ச் சூழலில் நெல்லி மரம்

*சங்க கால மக்கள் காதலையும் வீரத்தையும் இரு கண்களாகக் கருதினர். மன்னர்கள் நேருக்கு நேர் போர்ப் புரிந்து வெற்றியும் வீரமரணமும் அடைந்தனர்.*

மரம் புல்லென்ற முரம்பு உயர் நனந்தலை
அரம் போழ் நுதிய வாளி அம்பின்
நிரம்பா நோக்கின் நிரயம் கொண்மார்
நெல்லி நீளிடை எல்லி மண்டி
நல் அமர்க் கடந்த நாணுடை மறவர்[207]

*என்று அகநானூறு பாடல், நெல்லி மரங்கள் காணப்படுகின்ற இடங்களில் கரந்தை வீரர்களும் வெட்சி வீரர்களும் போரிட்டச் சூழலைக் காட்டுகிறது.*

*வீரர்கள் போரிடும் சூழலில் உணவாகவும், உறைவிடமாகவும் நெல்லிமரங்கள் இடம்பெற்றிருந்ததை அறியமுடிகிறது.*

**2.1.11.3. நட்புறவுகளில் நெல்லிக்காய்கள்**

*சங்க காலத்தில் மன்னர்கள், புலவர்கள் மற்றும் மக்கள் போற்றுதலுக்குரிய நட்புறவுடன் வாழ்ந்து வந்துள்ளனர். இதனை,*

மன்னுக பெரும நீயே தொல் நிலைப்
பெருமலை விடரகத்து அருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியாது
ஆதன் நின் அகத்து அடக்கி
சாதல் நீங்க எமக்கு ஈத்தனையே[208]

*என்று புறநானூறும்,*

கரந் தலைப்பட்ட நெல்லிஅம் பசுங்காய்
மறப்புலிக் குருளை கோள்இடம் கரக்கும்
இறப்பு அருள்குன்றம் இறந்த யாமே[209]

*என்று குறுந்தொகையும்,*

உதிர்ந்த வெள்ளில் ஒடுங்கு நெல்லி[210]

*என்று கலிங்கத்துப் பரணி பாடலும் புலப்படுத்துகின்றன. கிடைப்பதற்கரிய நெல்லிக்கனியை அதியமான் என்ற மன்னன் தான் உண்ணாது தமிழை வளர்த்த ஒளவைக்குக் கொடுத்ததையும், தலைவன் தலைவி நீர் வேட்கையினைத் தணிக்க உண்டதையும் அறியமுடிகிறது.*

திருநெல்லிக்காய், திருநெல் வாயில், திருப்பாழை பாறை கோவில்களில் நெல்லியே தல விருட்சம்[211]

*என்று நெல்லி மரம் பிற்காலத்தில் மக்களுக்குத் தலமரமாகக் காணப்பட்டச் சூழலை அரிஸ்டாட்டில் குறிப்பிடுகிறார்.*

நெல்லி மரத்தைத் தோட்டத்திலும் வீட்டு முற்றத்திலும் வேலியிலும் வளர்த்து வந்ததையும் சங்க இலக்கியங்கள் கூறுகின்றன[212]

*என்று பி.எல்.சாமி குறிப்பிடுகிறார்.*

*நெல்லி மரம் பாலைநிலத் தாவரமாகும். வீரர்கள் போர்ப் புரியும் இடங்களில் நெல்லி மரங்கள் காணப்பட்டன. நெல்லிக்காய்கள் தலைவன்,*

தலைவி, வழிப்போக்கர்களின் உணவாக இருந்துள்ளதைக் காணமுடிகிறது. தமிழுக்கும் நட்பின் இலக்கணத்திற்கும் நெல்லிக்கனிகள் அடிப்படையாக அமைந்திருந்த சூழலியலைக் காணமுடிகிறது. நெல்லிக்காய்கள் இன்றும் மக்கள் வாழ்வியலில் வழக்கத்தில் ஊறுகாயாகவும், பதப்படுத்தப்பட்ட இலேகியமாகவும் இடம்பெற்று வரும் சூழலை அறியமுடிகிறது.

### 2.1.12. காஞ்சி மரம்

மக்கள் வாழ்விலும் பரிணாம வளர்ச்சியிலும் பல்வேறு உயிரினங்கள், பலதரப்பட்டப் பொருள்கள் இன்றியமையாத பங்காற்றினாலும் மரங்கள்தான் முதன்மையான இடத்தைப் பெறுகின்றன. காஞ்சி மரம் உழவர்களின் வாழ்வியலோடு உறவு கொண்டிருப்பதைச் சங்க இலக்கியங்களில் காணமுடிகிறது. காஞ்சி மரத்தின் தாவரவியல் பெயர் "*Mallotus nudiflorus*"[213] என்பதாகும்.

### 2.1.12.1. வேறு பெயர்கள்

காஞ்சி மரத்திற்கு, "அரசன் விரோதி, பூளம், புற்போதி, பூ பருத்தி, மண்ணரசு"[214] என்று பல்வேறு பெயர்கள் வழங்கப்படுகின்றன.

### 2.1.12.2. ஊர் வளங்களில் காஞ்சி

சங்க கால மக்கள் வாழும் மருத நிலப்பரப்பில் மிகுதியாகக் காணப்படும் மரங்களில் காஞ்சி மரம் ஒன்றாகும். மக்களின் வாழ்விடத்தைச் சுற்றியும், மலைப் பகுதிகளிலும் இம்மரங்கள் பசுமையாகக் காணப்படுகின்றன. இதனை,

> கழனிஅம் படப்பைக் காஞ்சி ஊர[215]

என்று அகநானூறு பாடல் தெரிவிக்கின்றது. காஞ்சி மரங்கள் மிகுதியாக உடைய ஊரின் தலைவன் என்று இப்பாடல் காஞ்சி மரங்கள் நிறைந்த நிலப்பரப்பைக் குறிப்பிடுகின்றது. மேலும்,

> கொய்குழை அகைகாஞ்சித் துறை அணிநல் ஊரே[216]

என்று கலித்தொகையும்,

ஒருதனி ஓங்கிய திருமணிக் காஞ்சி

பாடல்சால் சிறப்பின் பரதத்து ஓங்கிய[217]

என்று மணிமேகலையும் காஞ்சி மர வளங்களைக் குறிப்பிடுகின்றன. இதன் மூலம் தலைவனுக்குப் பெருமை சேர்க்கும் வகையில் காஞ்சி மரங்கள் பசுமையாகக் காணப்பட்டன என்பதையும், மரங்கள் சூழ்ந்த இயற்கைச் சூழலியலோடு மக்கள் வாழ்ந்தனர் என்பதையும் உணரமுடிகிறது.

### 2.1.12.3. உழவர்கள் வாழ்வில் காஞ்சி

உழவர்கள் வயலில் உள்ள நெல்லையும், தினைப் பயிர்களையும் அறுவடை செய்துவிட்டுக் காஞ்சி மரத்தடியில் ஓய்வெடுத்தும், நெல்லைக் குவியலாகப் போட்டுப் பண்டங்களாகப் பெற்றும் தங்கள் வாழ்க்கைச் சூழலைப் பொருளாதாரத்தோடு மேம்படுத்தினர். இதனை,

பணிந்து திறைதருப நின் பகைவர் ஆயின்

புல்லுடை வியன்புலன் பல்ஆ பரப்பி

வளனுடையச் செறுவின் விளைந்தவை உதிர்ந்த

களன் ஆறு குப்பை காஞ்சிச் சேர்த்தி[218]

என்று பதிற்றுப்பத்துப் பாடல் தெரிவிக்கின்றது. உழவர்கள் நெல்லை அறுவடை செய்து காஞ்சி மரத்தின் நிழலில் நெற்குவியலாகக் கொட்டி, அந்த நெல்லை விலைக்கு வாங்கும் மக்களிடம் கள்ளை விலையாகப் பெற்றுப் பண்ட மாற்றம் செய்து வாழ்ந்தனர். காஞ்சி மர நிழலில் இத்தகைய பண்டமாற்று முறை நிகழ்ந்த சூழலியலைக் காணமுடிகிறது.

செழுஞ்செய் நெல்லின் சேயரிப் புனிற்றுக்கதிர்

மூதா தின்றல் அஞ்சி காவலர்

பாகல் ஆய்கொடிப் பகன்றையொடு பரீஇ

காஞ்சியின் அகத்து கரும்பு அருந்தியாக்கும்

தீம்புனல் ஊர . . . .     . . . .[219]

என்று அகநானூறு பாடல், வயலில் இளங்கதிரைத் தின்ற முதிய பசுவினைக் காவல் செய்பவர்கள் காஞ்சி மரத்தில் கட்டியத்தைக் குறிப்பிடுகின்றது. காஞ்சி மரம் உழவர்களின் வாழ்விடத்திலும், வயல்வெளிகளிலும் காணப்படும் வாழ்வியல் முறையை நன்கு உணரமுடிகிறது.

### 2.1.12.4. நீர் நிலைகளில் காஞ்சி

*சங்க கால உழவுத் தொழில் செய்யும் மக்கள், தங்கள் வயலுக்கு அருகிலுள்ள நீர் நிலைகளில் வருகின்ற நீரை உழவுத் தொழில் செய்வதற்காகத் தேக்கி வைத்துப் பயிர்களுக்குப் பாய்ச்சினர். இதனை,*

கள்ஆர் உவகைக் கலிமகிழ் உழவர்
காஞ்சிஅம் குறுந்தரி குத்தி, தீம்சுவை
மென் கழைக் கரும்பின் நன்பல மிடைந்து
பெருஞ்செய் நெல்லின் பாசவல பொத்தி[220]

*என்று அகநானூற்றுப் பாடல் தெரிவிக்கின்றது. கள்ளுண்ட மகிழ்ச்சியால் மிக்க செருக்கினைக் கொண்ட உழவர்கள் நெற்பயிரையுடைய தம் வயல்களில் காஞ்சி மரத்தின் சிறு துண்டுகளை நட்டு, இனிய சுவைமிக்க கரும்பின் சிறந்த பல கழிகளைக் குறுக்கே நெருக்கமாக வைத்து அடைத்து அணையாகக் கோலி அப்பள்ளங்களில் நீரைத் தேக்கினர். உழவுத் தொழில் புரிவோர் வாழ்வில் காஞ்சி மரம் அணைக் கட்டுவதற்கு பயன்பட்டு, நீர்ப் பாசனத்தோடு வாழ உதவிட்ட சூழலியலைத் தெள்ளிதின் உணரமுடிகிறது.*

### 2.1.12.5. இரவு குறிகளில் காஞ்சி

*தலைவன் தலைவி இருவரும் பிறர் அறியாமல் சந்திக்குமிடம் குறியாகும். அத்தகைய குறிகளில் இரவு குறியும் ஒன்றாகும். இதில் காஞ்சி மரங்களும் இடம்பெற்றுள்ளன. இதனை,*

.... .... எம் படைப்பைக்
காஞ்சிக் கீழ் செய்தேம் குறி[221]

*என்று கலித்தொகை பாடல் தெரிவிக்கின்றது. தலைவன் தலைவி சந்திப்பில் இரவு குறிகளில் காஞ்சி மரம் இடம்பெற்றுள்ளது. இதன் மூலம் தலைவன் தலைவியின் அக வாழ்வில் இரவில் சந்தித்துப் பேசுவதற்கான அடையாள இடமாகக் காஞ்சி மரம் இருந்துள்ளதை உணரமுடிகிறது. அகச் சூழலியலிலும் காஞ்சிமரம் மக்கள் வாழ்வில் நெருங்கிய உறவுடன் இருந்ததை அறியமுடிகிறது.*

### 2.1.12.6. புனலாடுதலிலும் விளையாடுதலிலும் காஞ்சி

நீர் நிலைகளில் மக்கள் விளையாடுதலும், புனலாடுதலும் மரபாகும். அருகில் காணப்படும் மரங்களில் ஏறி விளையாடியும், நீரில் குதித்தும் பொழுதைப் போக்கினர். இதில் காஞ்சி மரமும் இடம்பெறுகிறது. இதனை,

போதுஆர் கூந்தல் நீவெய் யோளொடு
தாதுஆர் காஞ்சித் தண்பொழில் அகல்யாது
ஆடினை என்ப . . . .      . . . .[222]

என்றுரைக்கிறது அகநானூற்றுப் பாடல். தலைவன் புதிய மலரணிந்த பரத்தையோடு குளிர்ச்சி பொருந்திய காஞ்சி மரங்கள் செறிந்த சோலைகள் சூழ்ந்த அகன்ற ஆற்றில் புனலாடியதை அறியமுடிகிறது. மேலும்,

காஞ்சி நீழல் தமர் வளம் பாடி
ஊர்க்குறு மகளிர் குறுவழி[223]

என்றும்,

காஞ்சி நீழல் குரவை அயரும்
தீம்பெரும் பொய்கைத் துறைகேழ் ஊரன்[224]

என்றுமுரைக்கின்றன அகநானூற்றுப் பாடல்கள். காஞ்சி மரத்தின் கீழ் மகளிர் தம் சுற்றத்தாரின் அருமை, பெருமைகளைப் புகழ்ந்து பாடுவதையும், குரவைக் கூத்தாடுவதையும் இப்பாடல் தெரிவிக்கின்றது. இதன் மூலம் காஞ்சி மரம் பெண்கள் புனலாடுவதற்கும், ஒன்று கூடிப் பேசுவதற்கும், குரவைக் கூத்தாடுவதற்கும் மிகவும் துணைபுரிந்த இயற்கையோடு இயைந்த சூழலியலை உணரமுடிகிறது.

காஞ்சி மரம் மக்களின் வாழ்க்கையோடு இயைந்து வாழ்ந்த சூழலைக் காணமுடிகிறது. தலைவன் தலைவியைச் சந்திக்கும் இடமாகவும், மகளிர் நீர் நிலைகளில் புனலாடுவதற்கும், விளையாடுவதற்கும், இரவுக் குறியில் ஒன்று கூடிப் பேசுவதற்கும், இம்மரம் பெருந்துணை புரிகின்றது. அணைகள் கட்டி தண்ணீரைத் தடுக்கவும், பண்டமாற்று இடங்களில் ஒன்றாகவும் காஞ்சி மரம் காணப்பட்டு மக்கள் வாழ்க்கையின் அகப்புறச் சூழலியலோடு இருந்ததைச் சங்க இலக்கியங்கள் படம்பிடித்துக் காட்டுகின்றன.

### 2.1.13. ஆல மரம்

ஆல மரத்திற்கும் தமிழர்க்கும் மிக நெருங்கியத் தொடர்புண்டு. மக்கள் இம்மரத்தைக் கடவுளாகவும், வணிகம் செய்கின்ற இடமாகவும், ஆல மரத்தின் நிழலில் தங்கி இளைப்பாறுகின்ற இடமாகவும், மருத்துவத்திற்காகவும் பயன்படுத்தி வாழ்ந்தனர். சங்க இலக்கியத்தில் காணலாகும் மிகப் பெரிய மரமாகத் திகழ்வது ஆலமரமாகும்.

#### 2.1.13.1. வேறு பெயர்கள்

ஆல மரத்தின் தாவரவியல் பெயர் "*Ficus bengalensis*"[225] என்பதாகும். ஆல மரத்திற்கு, "அன்பைம், இரத்த பாலம், காதவம், கான் மரம், நெக்குரோதயம், பூதவிருட்சம், வட பத்திரியம், வடமரம், வடம்"[226] என்று பல்வேறு பெயர்களுண்டு. ஆல மரம் பூவாமல் காய்க்கும் மரமாகும். இது பல விழுதுகளை உடைய மரம். மரங்களில் மிகவும் அகலமான மரமிது. மனிதர்களுக்குக் குளிர்ந்த நிழலைத் தருகின்ற மரமாகத் திகழ்கிறது. ஆல மரம் இந்தியாவின் தேசிய மரமாகும். தமிழ்நாட்டுக் கோயில்களில் தலவிருட்சமாகவும் காணப்படுகிறது.

#### 2.1.13.2. வழிபாட்டுக்களில் ஆலமரம்

மக்கள் தங்கள் ஊரில் காணப்படுகின்ற ஆலமரத்தைப் புனிதமான மரமாக, கடவுளாக எண்ணி வணங்கினர். இதனை,

.... .... அம்குடிச் சீறூர்த்
தாது எரு மறுகின் ஆபுறம் தீண்டும்
நெடுவீழ் இட்ட கடவுள் ஆலத்து
உகுபலி அருந்திய தொகுவிரற் காக்கை
புன்கண் அந்திக் கிளைவயின் செறிய[227]

என்று நற்றிணை கூறுகிறது. சிற்றூரில் வாழும் மக்கள் ஆலமரத்தைக் கடவுள் உறைகின்ற இடமாக எண்ணி வழிபட்டனர்.

துறையும் ஆலமும் தொல்வரி மராஅமும்
முறையுளி பராஅய் பாய்ந்தனர் தொழுஉ[228]

என்றும்,

சீர்மிகு சிறப்பினோன் மரமுதல் கை சேர்த்த[229]

என்று கலித்தொகையும்,

அழல் புரை குழை கொழுநிழல் தரும் பலசினை
ஆலமும் கடம்பும் நல்யாற்று நடுவும்
கால் வழக்கு அறுநிலைக் குன்றமும் பிறவும்
அவ்வவை மேவிய வேறு வேறு பெயரோய்[230]

என்று பரிபாடலும் ஆலமரத்தைக் குறிப்பிடுகின்றன. சிவன், திருமால் ஆகிய இரண்டு தெய்வங்கள் ஆலமரத்தில் இருப்பதாகக் கருதி மக்கள் வழிபட்டதைக் காணமுடிகிறது. இதனை,

தமமிழ்நாட்டுக் கோவில் தல விருட்ச மரம் ஆல மரம் ஆகும். ஆலங்காடு, திருஆலம் பொழில், திருஅன்பிலாந்துறை, திருமெய்யம், திருப்பழவுர், திருவில்லிப்புத்தூர்[231]

என்று விக்கிபீடியா குறிப்பிடுகின்றது. கோடைக் காலத்தில் நிழல் தரும சிறந்த மரமாக ஆலமரம் விளங்குகிறது.

### 2.1.13.3. பொது மன்றங்களில் ஆலமரம்

மக்கள் ஊர் நடுவில் ஒன்றுகூடி வணிகம் செய்வதற்கும், கூட்டம் கூடுவதற்கும் ஆலமரத்தைத் தேர்ந்தெடுத்தனர். இது பொதுமன்றம் என்று அழைக்கப்பட்டது. இதனை,

தொல் மூதாலத்துப் பொதியில் தோன்றி
நால்ஊர்க் கோசர் நல்மொழி போல[232]

என்று குறுந்தொகை தெரிவிக்கிறது. கோசர் இன மக்கள் வாழ்கின்ற ஊர்களில் தொன்மையான ஆலமரத்தின் அடியில் ஒன்று கூடும் பொது மன்றம் இருந்துள்ளது. ஆலமரம் மக்களின் வாழ்வியல் சூழலில் தெய்வமாகவும், ஊர் மன்றமாகவும் காணப்படும் சூழலியலை அறியமுடிகிறது.

தெள்ளிய ஆலின் சிறுபழத்து ஒருவிதை
தெண்ணீர் கயத்துச் சிறுமீன் சினையினும்
நுண்ணியதே ஆயினும் அண்ணல் யானை
அணிதேர் புரலி ஆள்பெரும் படையொடு
மன்னர்க்கு இருக்க நிழலா கும்மே[233]

*என்று வெற்றி வேட்கை பாடல், அரசன் தனது நால்வகைப் படைகளும் தங்கி களைப்பாற ஆலமரம் நிழல் மிகப் பெரிய மரமாகக் காணப்படுகின்ற சூழலைத் தெரிவிக்கின்றது.*

வருமழை கரந்த வால் நிற விசும்பின்
நுண்துளி மாறிய உலவை அம்காட்டு
ஆலநீழல் அசைஇ நீக்கி
அஞ்சுவழி அஞ்சாது அசைவழி அசைஇ[234]

*என்று நற்றிணை பாடல், தலைவன் தலைவி உடன்போக்குச் செல்லும் போது கடற்கரைச் சோலையில் காணப்படுகின்ற ஆலமரத்தின் நிழலில் தங்கி களைப்பினைப் போக்கிக் கொண்ட சூழலைப் புலப்படுத்துகின்றது.*

*மன்னர்கள் வேற்று நாட்டு மன்னர்களிடம் போர்ப் புரிவதற்கு முன்பு மக்களுக்கு முரசடித்துத் தெரியப்படுத்துவர். இதனை,*

.... .... வெல்கொடித்
துனைகால் அன்ன புனைத்தேர்க் கோசர்
தொல்மூ தாலத்து அரும்பணைப் பொதியில்
இன்இசை முரசம் கடிப்பு இகுத்து இரங்க[235]

*என்று அகநானூற்றுப் பாடல் தெரிவிக்கின்றது. கோசர்கள் மோகூர் மன்னனான பழையன் என்பவனிடம் போர் புரிய ஆலமரத்தின் அடியில் முரசினை அடித்துப் போருக்கு அழைத்ததை அகநானூறு குறிப்பிடுகிறது. போர்க் களச் சூழலிலும் ஆலமரம் மக்கள் கூடுமிடமாக இருந்த சூழலை அறியமுடிகிறது.*

இங்கிலாந்து மன்னர் ஜேம்ஸ் காலத்தில் இந்தியாவுக்கு வந்த பிரிட்டிஷ் வர்த்தகர்கள் ஆலமரத்தடியில் சந்தைகள் கூடுவதைப் பார்த்தார். இந்தியாவில் எல்லா மாநிலங்களிலும் மொழி இன வேற்றுமைக்கு அப்பால் ஆல மரத்தடியில் தான் வியாபாரங்கள் நிகழ்ந்து வந்தன[236]

*என்று ஆலமரத்தின் சிறப்பினை அரிஸ்டாட்டில் குறிப்பிடுகிறார்.*

*ஆலமரம் இன்று வரையிலும் நமது நாட்டில் பெரிய அளவில் காணப்படுகிறது.*

உலகிலேயே மிகவும் விரிந்து இருக்கும் மரம் ஒன்று கொல்கத்தா தாவரவியல் பூங்காவில் உள்ளது. இது ஆலமரம் ஆகும்[237]

என்றும்,

ஆலமரம் 91 சதவீதம் வெப்பத்தை உறிஞ்சி 9 சதவீதத்தை மட்டும் பிரதிபலிக்கின்றது[238]

*என்றும் ஏற்காடு இளங்கோ ஆலமரத்தின் சிறப்பினைக் குறிப்பிடுகிறார்.*

*ஆலமரம் இன்றும் சமவெளிகள், கடலோரப் பகுதிகள், சாலையோரங்கள் போன்ற பகுதிகளில் வெகுவாக வளர்கிறது. கோவில்களிலும் மிகுதியாகக் காணப்படுகிறது. இதனை,*

ஆலமரம் எங்குமே வளரும். கிராமங்கள் பொது இடங்கள், சாலைகள், இடுகாடு, சுடுகாடுகளில் கிராமந்தோறும் சோலைகள் அமைக்க ஆல் அவசியம். ஆல மரங்கள் மிகுந்துள்ள ஊர்களில் மழைப் பொழிவு இருக்கும்[239]

*என்றும்,*

மனித வாழ்வின் நற்பயனுக்கு ஆலைப் போல் வேறு மரம் உண்டோ[240]

*என்றும் மனிதனுக்கும் ஆல மரத்திற்கும் இடையே இருக்கும் சூழலியல் தொடர்பை அரிஸ்டாட்டில் குறிப்பிடுகிறார். ஆலமரத்தின் கனியானது மண்பாண்டம் போல் காணப்படும். இதன் வடிவத்தை,*

மர அளவில் ஆல் மிகப் பெரியது. அது விடும் விழுதுகளால் பரப்பளவிலும் பெரியது[241]

*என்று கோவை.இளஞ்சேரன் குறிப்பிடுகிறார். மேலும்,*

ஆலம் விதை மிகச் சிறியதாக எள் போன்றிருக்கிறது. அச்சிறு விதையுள் மிகப் பெரிய மரம் இருக்கிறது. அது வளர்ந்து காய்த்துப் பழுத்த போது பறவைகள் அனைத்தும் பழுமரம் தேடிச் செல்கின்றன. எல்லா பறவைகளுக்கும் உணவாக ஆலம் பழம் அமைகின்றன. ஆயிரக் கணக்கான மக்களுக்கு நிழல் தருகிறது. விறகாகவும் பயன்படும். ஆடுகளுக்கு உணவாக ஆல இலைகள் பயன்படும்[242]

*என்று ச.வே.சுப்பிரமணியன் ஆலமரத்திற்கும் மனிதனுக்கும் இடையேக் காணப்படுகின்ற பயன்பாட்டுச் சூழலை எடுத்துரைக்கின்றார்.*

ஆலமரத்தைக் கடவுள் உறையும் மரமாக எண்ணி வழிப்பட்ட சூழலை அறியமுடிகிறது. பெரிய வடிவமாகக் காணப்படுவதால் ஊர் மன்றங்களில் அனைவரும் ஒன்று கூடும் இடமாகவும், மன்னர்கள் போர்ச் செய்யும் முன்பு அறிவிப்புச் செய்யுமிடமாகவும், வணிகம் செய்யவும் களமாகவும் காணப்படுகின்ற சூழலியல் தொடர்பினைச் சங்க இலக்கியங்கள் மூலம் அறியமுடிகிறது.

### 2.1.14. சந்தன மரம்

நறுமணமிக்க மரங்களில் சந்தன மரமும் ஒன்றாகும். இம்மரத்தை ஆரம் என்றும் குறிப்பிடுவர். மக்களும், மன்னர்களும் மார்பில் பூசிக் கொள்ளக்கூடிய பொருளாகச் சந்தனம் காணப்படுகிறது. இதனால் வெப்பத்தைத் தணித்து உடலைக் குளிர்ச்சியாக மாற்றும் பொருளாகச் சந்தனம் அமைகிறது. அன்று முதல் இன்று வரை சந்தன மரம் விலைமிகுந்த பொருளாதார மரங்களாகத் திகழ்கிறது.

### 2.1.14.1. தாவரவியல் பெயர்

சந்தன மரத்திற்கு தாவரவியல் பெயர் “*Santalum album*”[243] என்பதாகும்.

### 2.1.14.2. வேறு பெயர்கள்

சந்தன மரத்திற்கு,

மங்கல்லியம், போகிவாசம், மலையிசம், மலையரசன், ஆரக்கம், ஈகம், ஈங்கம், உலோசிதம், பாதிரம், கந்த சாரம், கோரவாரம், சந்தினி, சந்தம், வனசை, சந்து, சாலேகம், சிசுரம், சேலேகம், வனவசம், வண்ணகம், மாலயம், பத்திராசிரயம், பராகம், தீததந்து, படிரம், பாடீகம், போகி வல்லபம், தேஞ்சந்து, மலயசம், மலைவெட்டி, மோசாடம், சாத்த மரம், மலயோத் பலம், ஆரம், கிழான் பச்சை, குலவுரி[244]

எனப் பல்வேறு பெயர்களுண்டு.

### 2.1.14.3. விறகுகளில் சந்தன மரம்

*இந்தியாவில் விலையுயர்ந்த மரங்களில் சந்தன மரமும் ஒன்றாகும். இந்தியா சந்தன மரத்தின் தாயகமாக விளங்குகிறது. வழிபாட்டிற்கு உகந்தப் பொருட்களில் சந்தனமும் ஒன்றாகக் காணப்படுகிறது. சந்தனக் கட்டைகளை எரிப்பதால் அந்தப் பகுதியே மணக்கும் தன்மையுடையதாக மாறுகிறது.*

குன்றக் குறவன் சாந்த நறும்புகை
தேம்கமழ் சிலம்பின் வரையகம் கமழும்
கானக நாடன் வரையின்
மன்றலும் உடையள் கொள்[245]

*என்னும் ஐங்குறுநூறு பாடல், குறவர்கள் சந்தன மரத்தை விறகாக எரிப்பதால் அவர்கள் வாழும் மலைப் பகுதியே நறுமணம் பரவிக் காணப்படுகின்றது என்றுரைக்கின்றது.*

குறத்தி மாட்டிய வறல் கடைக் கொள்ளி
ஆரம் ஆதலின் அம்புகை அயலது
சாரல் வேங்கைப் பூஞ்சினைத் தவழும்[246]

*என்று புறநானூறும்,*

சிறுகோல் இணர பெருந்தன் சாந்தம்
வகைசேர் ஐம்பால் தகைபெற வாரி
புலர்விடத்து உதிர்த்த துகள் படுகூழைப்
பெருங்கண் ஆயம் உவப்ப[247]

*என்றும்,*

ஆரம் கமழும் மார்பினை
சாரற் சிறுகுடி ஈங்கு நீ வரலே[248]

*என்று நற்றிணை பாடல்களும் சந்தனம் நறுமணப் பொருளாய் பயன்பட்டதைக் குறிப்பிடுகின்றன. தலைவன் சந்தனத்தை அரைத்து மார்பிலும், தலைவி கூந்தலிலும் நறுமணப் பொருளாகப் பூசிக் கொண்டு உடலில் ஏற்பட்ட வெப்பத்தைப் போக்கினர் என்பதைக் காணமுடிகிறது.*

இந்தியாவிலேயே அதிக அளவில் சந்தன மரங்கள் காவிரி உற்பத்தியாகும் குடகு மலைப் பகுதிகளில் தான் நிறைந்துள்ளன[249]

*என்று அரிஸ்டாட்டில் குறிப்பிடுகிறார்.*

தாங்கு சந்தனம் தளரத் தழுவி வீழ்வன தகைசால்[250]

என்று சீவகசிந்தாமணி சீவகன் பயணிக்கும் காடுகள் நிறைந்த வழியில் சந்தன மரங்கள் நிறைந்திருந்ததை எடுத்துரைக்கின்றது.

### 2.1.14.4. உரலும் உலக்கையும் செய்தல்

சங்க கால மக்கள் தங்கள் வீட்டில் நெல், தினை, வரகு, அவல் முதலியவற்றை இடித்துச் சமைக்க உரலையும், உலக்கையும் பயன்படுத்தினர். இத்தகைய அரிசிக்கு 'குத்தலரிசி' என்று பெயர். இதனை,

முகைவளர் சாந்து உரல் முத்துஆர் மருப்பின்[251]

என்றும்,

சாந்த மரத்தின் இயன்ற உலக்கையால்
ஐவன வெண்நெல் அறை உரலுள் பெய்து இருவாம்[252]

என்று கலித்தொகைப் பாடல் தெரிவிக்கின்றன. மகளிர் நெல்லைக் குற்றுவதற்கு சந்தன மரத்தாலான உரலும் உலக்கையும் பயன்படுத்தியமையைக் கலித்தொகை நமக்குத் தெரிவிக்கின்றது.

சந்தன மரம் பிற மரஞ்செடி கொடிகளிலிருந்து உணவை உறிஞ்சியே வைரம் பாய்கிறது. தனித்திருக்கும் சந்தன மரம் வளர முடியுமே தவிர வைரம் பாய முடியாது. அவ்வாறு வைரம் பாயாத போது அது மிகுந்த வாசனையைப் பெறுவதில்லை[253]

என்று சந்தன மரத்தின் உறுதித்தன்மையும் நறுமணத்தையும் பி.எல்.சாமி குறிப்பிடுகிறார்.

சந்தன மரம் மக்கள் வாழ்வில் நறுமணப் பொருளாகவும், உடம்பில் பூசிக் கொள்ளும் பொருளாகவும், குறவர்களின் வீட்டில் விறகாகவும், உலக்கையாகவும், உரலாகவும் பயன்படுத்தப்பட்டு அவர்களின் வாழ்வியலோடு நெருங்கிய தொடர்பினையுடையதாய் இருந்துள்ள இயற்கை சார்ந்த சூழலியலை அறியமுடிகிறது.

### 2.1.15. நாவல் மரம்

சங்க இலக்கியத்தில் குறைவாகக் காணப்படுகின்ற மரங்களில் நாவல் மரமும் ஒன்றாகும். சிறுவர்கள் முதல் பெரியவர்கள் வரை அனைவரும் விரும்பி உண்ணும் உணவாக நாவற் பழம் காணப்படுகின்றது. இன்றும்

*சாலையோரங்களிலும், காடுகளிலும் வளர்கின்ற தாவரமாக உள்ளது. நாவற் பழம் கருநீல நிறத்தை உடையதாகும். உண்பவர்களுக்கு நீர் வேட்கையினை ஏற்படுத்தக் கூடியதும் ஆகும். நாவல் மரத்தின் அறிவியல் பெயர் "Syzygium cuminis"*[254] *என்பதாகும்.*

### 2.1.15.1. வேறு பெயர்கள்

*நாவல் மரத்திற்கு, "சம்பு, ஆருகதம், தூறவம், சாதகம், நேட்டம், வீரிடம், கருங்கனி, நேரேடு"*[255] *எனப் பல பெயர்களை சா.அனந்தகுமார் பட்டியலிடுகிறார். மேலும்,*

> நாவல் மரத்தின் அனைத்து உறுப்புகளும் பயனுடையவை. இதில் பெண் நாவல், கொடி நாவல், குழி நாவல், கரு நாவல், சம்பு நாவல் எனப் பலவகைகள் உள்ளன[256]

*என்று பல்வேறு பெயர்களைச் ச.வே.சுப்பிரமணியன் குறிப்பிடுகிறார்.*

### 2.1.15.2. நாவற்பழமும் வண்டும்

*நாவற் பழங்களை சங்க இலக்கியத்தில் புலவர்கள் வண்டிற்கு உவமையாகக் கூறுவர். ஆண், பெண் என இருபாலரும் உணவாக நாவற் பழத்தை உண்பர். இதனை,*

> மட்டு அறல்நல் யாற்று எக்கர் ஏறி
> கருங்கனி நாவல் இருந்து கொய்து உண்ணும்[257]

*என்று புறநானூற்றுப் பாடல் தெரிவிக்கின்றன. மல்லிகிழான் காரியாதியின் மலைப்பகுதியில் காணப்படும் நாவல் மரத்தில் உள்ள பழங்களை ஆடவர் பறித்து உண்பார்கள். இந்த பழம் சுவையாகவும், பசியைப் போக்கக்கூடியதாகவும் காணப்படுவதைப் புறநானூறு காட்டுகிறது. மேலும்,*

> மரவுரி உடையன் விருச்சிகன் என்போன்
> பெருங்குலைப் பெண்ணைக் கருங்கனி அணையது ஓர்
> இருங்கனி நாவல் பழம் ஒன்று ஏந்தித்[258]

*என்று மணிமேகலையும்,*

> தேன்நுகர் வண்டு மதுதனை உண்டு
> தியங்கியே கிடந்ததைக் கண்டு
> தான் அதைச் சம்பு வின்கனி என்று

தடங்கையில் எடுத்துமுன் பார்த்தாள்
வான்உறு மதியம் வந்தென்று எண்ணி
மலர்க்கரம் குவியுமென்று அஞ்சிப்
போனது வண்டோ பறந்ததோ பழந்தான்
புதுமையோ இதுஎனப் புகன்றாள்[259]

என்று விவேக சிந்தாமணி பாடலும் தெரிவிக்கின்றன. விருச்சிகன் என்னும் முனிவன் நாவற் பழத்தைப் பறித்துண்டச் சூழலையும், தலைவி வண்டினை நாவற்பழம் என்று நினைத்துப் பிடித்த அகவாழ்வியல் சூழலையும் காணமுடிகிறது.

நாவல் மரம் மக்கள் வாழ்வியல் சூழலில் உணவாகவும், ஊர் மன்றமாகவும் அமைத்து, தலைவியின் அக வாழ்வோடு ஒன்றியிருந்த சூழலியல் தொடர்பினைச் சங்க இலக்கியங்கள் தெள்ளிதின் வெளிப்படுத்துகின்றன.

### 2.1.16. தில்லை மரம்

சங்க இலக்கியத்தில் சிற்சில காணப்படுகின்ற மரங்களில் தில்லை மரம் ஒன்றாகும். இப்போது இது அரியதாகவே உள்ளது. தில்லை மரங்கள் பூக்கும் தாவரங்களாக அமைந்துள்ளன. இது ஓர் இருவித்திலைத் தாவரமாகும். தில்லை என்பது ஒரு மரமாகக் கருதினாலும் அதற்கு சிதம்பரம் என்ற சிறப்புப் பெயரும் உண்டு. தில்லை மரங்கள் மிகுதியாக உள்ளதால் தில்லை எனப் பெயர் பெற்றுள்ளது.

தில்லை மரத்தின் தாவரவியல் பெயர் “*Excoecaria agollocha*”[260] என்பதாகும். இம்மரம் பாலுணர்வைத் தூண்டும் மரமாகத் திகழ்கிறது.

இம்மரத்தின் அடிப்பாகம் அல்லது வேரிலிருந்து எடுக்கப்படும் ஒரு விதமான சிவப்பு மொழுக்கு தேஜபலம். அந்தத் தேஜபலம் பாலுணர்வைத் தூண்டும் வயாக்ரா[261]

என்று அரிஸ்டாட்டில் விளக்கமளிக்கிறார். இம்மரம் முழுவதும் மருத்துவக் குணம் கொண்டதாகக் காணப்படுகிறது.

### 2.1.16.1. வேலியும் வழிபாடும்

*தலைவன் வாழ்கின்ற ஊரில் வேலியாகத் தில்லை மரம் காணப்படுகின்றது. இதனை,*

தில்லை வேலி இவ்ஊர்க்

கல்லென் கௌவை எழாஅக்காலே[262]

*என்று ஐங்குறுநூறு பாடல் தெரிவிக்கின்றது. நெய்தல் நிலத்தில் வாழ்கின்ற தலைவனின் ஊரானது, பாதுகாப்பு வேலியாகத் தில்லை மரங்கள் நிறைந்திருந்தது. மக்களின் பாதுகாப்பில் உதவிட்ட சூழலியல் தொடர்பினை ஐங்குறுநூறு தெரிவிக்கின்றது.*

சிறைவான் புனல்தில்லைச் சிற்றம்பலத்தும் என் சிந்தையுள்ளும்

உறைவான் உயர்மதிர் கூடலின் ஆய்ந்த ஒண் டீந்தமிழின்[263]

*என்று திருக்கோவையார் தில்லை மரத்தைக் கூறுகின்றது. சிதம்பரத்தில் தலமரமாகத் தில்லை மரம் காணப்படுகிறது. மக்கள் வழிபடும் மரங்களில் ஒன்றாகத் தில்லையும் இடம்பெற்றிருப்பதை அறியமுடிகிறது.*

*தில்லை மரம் உப்பங்கழியில் வளர்கின்ற தாவரமாகும். இதனுடைய காய்கள் முனிவரின் சடைமுடியைப் போல் காணப்படுகிறது. மக்கள் மருத்துவத்திற்காகவும் இதனைப் பயன்படுத்தி உள்ளனர். பாதுகாப்பு அரணாகவும், தெய்வ வழிபாட்டு முறைகளில் தலமரமாகவும் இடம்பெற்றுத் தில்லை மரம் தொடர்புடைய சூழலியலோடு மக்கள் வாழ்க்கையை மேற்கொண்டதை அறியமுடிகிறது.*

### 2.1.17. வாகை மரம்

*சங்க இலக்கியத்தில் காணப்படுகின்ற மரங்களில் வாகை மரமும் ஒன்றாகும். வாகை மரத்தை வெற்றியில் குறியீடாகக் கருதுவர். வாகை மரம் மன்னர்களின் காவல் மரமாகவும் திகழ்ந்தது. இது பாலை நிலத்தில் வளர்கின்ற மரமாக அமைந்துள்ளது.*

### 2.1.17.1. தாவரவியல் பெயர்

*வாகை மரத்தின் தாவரவியல் பெயர் "Albizia odoratissima"*[264] *என்பதாகும்.*

### 2.1.17.2. வேறு பெயர்கள்

*வாகை மரத்திற்கு "சீரிடம், பில்லிக்குராயனி, மிறுதிபுட்சம், கிண்கிணி, சிற்றிலை, கபீதனம், பாண்டில்"*[265] *எனப் பல்வேறு பெயர்களுண்டு.*

### 2.1.17.3. வாகை மரத்தின் இயல்புகள்

*வாகை மரம் வறட்சியான பகுதிகளில் வளரும் தாவரமாகும். வாகை மரத்தின் இயல்புகளை,*

மென்பூ வாகைப் புன்புறக் கவட்டிலை[266]

*என்று அகநானூறும்,*

வற்றல் வாகை வறந்த கூகை[267]

*என்று கலிங்கத்துப்பரணியும் கூறுகின்றன. மெல்லிய பூவையும், புல்லிய புறத்தினையும், சுவடு பொருந்திய இலைகளையுமுடையது வாகை மரத்தின் பண்புகளாகும்.*

### 2.1.17.4. காவல் மரத்தைச் சிதைத்தல்

*சங்க காலத்தில் மன்னர்களுக்கு இடையே போர் நிகழும் போது வெற்றி பெற்ற மன்னன் தோல்வி அடைந்த மன்னனின் காவல் மரத்தை வெட்டி வீழ்த்தி அழிக்கப்படுவது மரபாக இருந்தது. இதனை,*

பொன்அம் கண்ணி பொலந்தேர் நன்னன்
சுடர்வீ வாகைக் கடி முதல் தடிந்த
தார்மிகு மைந்தன் நார்முடிச் சேரல்[268]

*என்றும்,*

சுடர்வீ வாகை நன்னன் தேய்த்து[269]

*என்று பதிற்றுப்பத்தும்,*

இரும்பொன் வாகைப் பெருந்துறைச் செருவில்
பொலம்பூண் நன்னன் பொருது களத்து ஒழிய[270]

என்று அகநானூற்றுப் பாடலும் கூறுகின்றன. நன்னன் என்ற மன்னன் வாகை மரத்தைக் காவல் மரமாகக் கொண்டு ஆட்சிச் செய்து வந்தான். நன்னனுக்கும் நார்முடிச் சேரனுக்கும் போர் நடைபெற்றது. போரின் முடிவில் நன்னன் கொல்லப்பட்டான். நார்முடிச் சேரன் வெற்றி பெற்று நன்னனின் காவல் மரமான வாகை மரத்தை வெட்டிச் சாய்த்தான். இதன் மூலம் வாகை மரம் நன்னனின் காவல் மரமாகவும், அதை மக்கள் வணங்கியதையும், போரில் சிதைத்ததையும் அறியமுடிகிறது.

வாகை மரம் மன்னர்களுக்குக் காவல் மரமாக இருந்து, போர்க்களத்தில் தலையாய சிறப்புடையதாக இருந்தச் சூழலியலைச் சங்க இலக்கியங்கள் தெளிவுறுத்துகின்றன.

### 2.1.18. மரா மரம்

இலக்கியங்களில் குறைவாக இடம்பெற்று மறைந்துப் போன மரங்களில் மரா மரமும் ஒன்றாகத் திகழ்கிறது. இதனைப் பழந்தமிழர்கள் மராஅம் என்று அழைத்தனர். இந்த மரம் பாலை நிலத்தில் வளர்கின்ற தாவரமாகும். இது குறைந்த இலைகளை உடையதாகக் காணப்படுகிறது.

> செங்கடம்பு, வெண் கடம்பு இரண்டிற்கும் பொதுப் பெயர் மராஅம் என்பர். மராஅம் என்றாலும் மரவம் என்றாலும் ஒன்றே. மராஅம் என்பது இரண்டிற்கும் பொதுப் பெயராயினும் சங்க இலக்கியங்களில் பெரும்பாலான இடங்களில் வெண்கடம்பைக் குறிக்கவே வந்துள்ளது[271]

என்று கோவை.இளஞ்சேரன் மராமரத்திற்கு விளக்கம் தருகின்றார்.

#### 2.1.18.1. வீரர்கள் ஓய்வெடுக்கும் இடம்

சங்க காலத்தில் வீரர்கள் போர் நிறைவுற்று, வெற்றிப் பெற்ற பின்பு மரத்தடியில் மகிழ்ச்சியாக ஓய்வெடுப்பர். இதனை,

> செங்கால் மராஅத்து அம் புடைப்பொருந்தி
> வாங்குசிலை மறவர் வீங்குநிலை அஞ்சாது[272]

என்கிறது நற்றிணை பாடல். வீரர்கள் மரா மரத்தின் அடியில் தங்கி ஓய்வெடுக்க மராஅம் மரம் பயன்பட்டச் சூழலியலை அறியமுடிகிறது. இதனை,

தோய்ந்ததும் சுடர் வாளினால்

நீடுமாமரம் செற்றதும் நிரை[273]

என்று பெருமாள் திருமொழிப் பாடல் குறிப்பிடுகிறது. இராமன் தன் வீரத்தை நிரூபிக்க ஒரே அம்பில் ஏழு மரா மரங்களை வீழ்த்தியிருப்பதை இப்பாடல் கூறுகிறது. இதன் மூலம் மராமரம் வீரத்திற்கு இணையாகவும், உறுதியாகவும் மக்கள் வாழ்வியலோடு தொடர்புடையச் சூழலியலை அறியமுடிகிறது.

### 2.1.18.2. காவல் மரத்தை முரசாகச் செய்தல்

பண்டையத் தமிழ்ச் சமூகத்தில் மன்னர்களுக்கிடையே போர் நிகழும் போது காவல் மரத்தை வெற்றி பெற்ற மன்னன் அழிப்பது மரபாகும். இதனை,

கடம்பு அறுத்து இயற்றிய வலம்படு வியன்பனை[274]

என்று பதிற்றுப்பத்துப் பாடல் தெரிவிக்கின்றது. கடம்பர்களின் காவல் மரமான மராமரத்தைச் சேரலாதன் வெட்டி வீழ்த்தி முரசு செய்ததைக் குறிப்பிடுகிறது. சேரலாதனின் வீரத்தை இப்பாடல் மூலம் அறியமுடிகிறது.

### 2.1.18.3. தலைவன் தலைவி சந்தித்தல்

சங்க இலக்கியத்தில் தலைவன் தலைவி இருவரும் சந்திக்கும் போது தாவரங்களின் பங்களிப்பு மிகுதியாக உள்ளதைக் காணமுடிகிறது. இதனை,

பைங்காய் நெல்லி பலஉடன் மிசைந்து

செங்கால் மராஅத்த வரிநிழல் இருந்தோர்[275]

என்று ஐங்குறுநூறு பாடல் குறிப்பிடுகிறது. தலைவன், தலைவி மரா மரத்தடியில் சந்தித்து நெல்லிக்காயை உண்டதை ஐங்குறுநூறு குறிப்பிடுகிறது.

### 2.1.18.4. வேட்டையாடுதலும் நம்பிக்கைகளும்

பழந்தமிழர் வீரத்திலும் வேட்டையாடுவதிலும் சிறந்து விளங்கினர். விலங்குகளைக் குறிப்பார்த்து அம்பினை எய்துவதற்கு மரத்திலோ, பரணிலோ ஏறி வேட்டையாடி, உணவாக உட்கொள்வார்கள். இதனை,

இரும்புவடித் தன்ன கருங்கைக் கானவன்

விரிமலர் மராஅம் பொருந்தி கோல்தெரிந்து

வரிநுதல் யானை அருநிரத்து அழுத்தி[276]

என்று அகநானூற்று பாடல் தெரிவிக்கின்றது. வலிமை மிக்க வேட்டுவன் யானையை, மரா மரத்தின் மீது ஏறி கூர்மையான அம்பினால் வீழ்த்தியதை அகநானூறு குறிப்பிடுகிறது. வேட்டுவன் மரா மரத்தில் ஏறி பாதுகாப்பாக வேட்டையாடுதல் மேற்கண்ட சூழலியலைக் காணமுடிகிறது. மேலும் இதனை,

மரா அஞ்சீறூர் மருங்கில் தூங்கும்[277]

என்று அகநானூறும்,

கல் எறிந்து எழுதிய நல்அரை மராஅத்த
கடவுள் ஓங்கிய காடு ரசு கவலை[278]

என்று மலைபடுகடாம் பாடலும் குறிப்பிடுகின்றன. மரா மரங்கள் மிகுதியாக உள்ள ஊர் இருந்ததையும், அதில் தெய்வம் உறைந்திருந்த நம்பிக்கையுடையோர் வாழ்ந்திருந்த சூழலியலையும் அறியமுடிகிறது.

வீரர்கள் ஓய்வெடுக்கின்ற இடமாகவும், தலைவன் தலைவி சந்திக்கும் இடமாகவும், வேட்டுவன் பாதுகாப்பாக வேட்டையாட பரணாகவும், தெய்வம் உறையும் மரமாகவும் மரா மரம் அக்கால மக்கள் வாழ்வியலோடு இயைந்த சூழலியலைச் சங்கப் பாடல்களின் வழியாக உணரமுடிகிறது.

### 2.1.19. யா மரம்

சங்க இலக்கியத்தில் ஓரெழுத்து ஒரு மொழியால் பெயர் பெற்ற மரம் யா மரமாகும். இத்தகைய மரம் சங்க இலக்கியத்தில் மிக அரிதாகவே காணப்படுகிறது. இந்த மரம் பாலைநிலத் தாவரமாகும்.

#### 2.1.19.1. சுள்ளியாகப் பயன்படுத்துதல்

யா மரமானது யானைகளின் உணவாகக் காணப்படுகிறது. இதனுடைய பட்டையை விலங்குகள் உண்டு வாழ்கின்றன. பாலை நிலத்தில் செல்லும் வழிப்போக்கர்கள், உமணர்கள் இந்த மரத்தின் அடியில் அமர்ந்து ஓய்வெடுப்பார்கள். இதனை,

மிசைமரம் சேர்த்திய கவைமுறி யாஅத்து
நார்அரை மருங்கின் நீர்வரப் பொளித்து

களிறு சுவைத் தீட்ட கோதுடைத் ததரல்

கல்லா உமணர்க்குத் தீமூட்டு ஆகும்[279]

என்று அகநானூற்றுப் பாடல் கூறுகிறது. வழிப்போக்கர்கள் செல்லும் வழியில் அடையாளமாக யா மரத்தின் மீது ஏணியைப் சார்த்தி விட்டுச் செல்வார்கள். உமணர்கள் யாமரத்தின் பட்டையைத் தீமூட்டும் சுள்ளியாகப் பயன்படுத்தியச் சூழலியலைக் காணமுடிகிறது.

உமணர்கள், வழிப்போக்கர்கள் வாழ்வியலில் யா மரம் விறகாகவும், ஓய்வெடுக்கவும், வழிப்போக்கர்களுக்கு அடையாளமாகவும் வாழ்ந்திருந்த இயற்கைசார் சூழலியலைச் சங்கப் பாடல்களின் வழியாக அறியமுடிகிறது.

### 2.1.20. சிலை மரம்

சங்க இலக்கியங்களில் மிக மிக அரியதாகக் காணப்படுகின்ற மரங்களில் ஒன்று சிலை மரம் ஆகும். இன்று காணமுடியாத மரமாக இது உள்ளது. இந்த மரம் வாகை மரத்தின் குடும்பத்தைச் சார்ந்ததாகும். இதனை,

சிலைவிற் பகழிச் செந்துவர் ஆடைக்

கொலைவில் எயினர் தங்கை[280]

என்கிறது ஐங்குறுநூறு. சிலை மரம் பாலை நிலத்தில் வளர்கின்ற தாவரமாகும். இந்த மரத்தைக் கொலைத்தொழில் புரிவோரான எயினர் நில மக்கள் வில்லையும், அம்மையும் செய்தவற்கு பயன்படுத்தியமையை அறியமுடிகிறது.

எயினர் மக்கள் வேட்டையாடுவதற்கும், வழிப்பறி செய்வதற்கும் சிலை மரத்தைக் கொண்டு வில்லையும் அம்பையும் செய்து பயன்படுத்திய வாழ்க்கைச் சூழலியலைக் காணமுடிகிறது. மேலும் வில், அம்புகளை செய்வதற்குறியதாய் இத்தகைய மரங்கள் உறுதியாக இருந்தன என்பனவற்றையும் அறியமுடிகிறது.

## 2.2. மலர்கள்

மக்கள் வாழ்வில் மங்கல மற்றும் அமங்கல நிகழ்வுகளில் மலர்கள் முதன்மையான இடத்தைப் பெறுகின்றன. அகச் சூழலிலும் புறச்சூழலிலும் அடையாளங்களாகவும், பரிசுப் பொருளாகவும், இறைவழிபாட்டிற்கு

உகந்ததாகவும் மலர்கள் சிறப்பிடம் பெற்றுள்ளன. சங்க கால இலக்கியங்கள் மலர்கள் மீது மக்களுக்கு இருந்த மதிப்பையும், ஈடுபாட்டையும் செவ்வனே வெளிப்படுத்தி நிற்கின்றன. புறத்திணையியல் போர்க் களநிகழ்வுகளிலும் அகத்திணையியல் குறியிடம் சுட்டும் அடையாளப் பொருட்களிலும் மலர்கள் இடம்பெற்றிருக்கும் சூழலியலைச் சங்க இலக்கியங்கள் வெகுவாகப் பதிவு செய்கின்றன.

### 2.2.1. கடவுளாருக்குச் சூடும் மலர்கள்

பண்டைத் தமிழ்ச் சமுதாயத்தில் மன்னர்கள் முதல் மக்கள் வரை அனைவரும் இயற்கையோடு இயைந்த சூழலில் வாழ்ந்தனர். அவர்களின் வாழ்வியலில் பூக்களும் இடம்பெற்றன. மக்களின் வழிபாட்டு முறைகளில் பூக்கள் சிறப்பிடம் பெற்று விளங்கின. மக்கள் அவர்கள் வணங்கும் தெய்வத்திற்கு மலர்களைத் தூவியோ, சூடியோ வழிபட்டனர்.

#### 2.2.1.1. சிவனும் கொன்றை மலரும்

சிவபெருமான் அடியும், முடியும் காணமுடியாதவராக இலக்கியங்கள் காட்டுகின்றன. சைவ சமயத்தின் இறைவனான சிவபெருமானைக் கொன்றை மலர்கள் தூவி வழிபட்டமையை,

கண்ணி நார் நறுங் கொன்றை; காமர்
வண்ண மார்பின் தாரும் கொன்றை
ஊர்தி வால் வெள் ஏறே[281]

என்று புறநானூற்றுப் பாடல் தெரிவிக்கின்றது. கொன்றை மலர் சிவனுக்கு உரிய மலர்களில் ஒன்றாகக் கருதப்பட்ட சூழலியலைக் காணமுடிகிறது. மேலும் புன்னை, வெள்ளெருக்கு, செண்பகம், பாதிரி, செந்தாமரை போன்ற மலர்களும் சிவனுக்குப் பூசை செய்யப் பயன்படுத்தப்படுகின்ற மலர்களாக விளங்கின.

#### 2.2.1.2. முருகனும் கடம்ப மலரும்

தமிழ்க் கடவுள் என அழைக்கப்படுகிற கடவுளாக முருக பெருமாள் விளங்குகிறார். இவருக்கு வழிபாடு செய்கின்ற மலர்களாக சாமந்தி, முல்லை, கடம்பு, காந்தள் போன்றவை இடம்பெறுகின்றன. இதனை,

இருள் படப் பொதுளிய பராரை மராஅத்து

உருள் பூந் தண்தார் புரளும் மார்பினன்[282]

என்று திருமுருகாற்றுப்படை பாடல் குறிப்பிடுகிறது. இதன் மூலம் முருகன் வழிபாட்டு முறைகளில் கடம்பு மலர்கள் இடம்பெற்றச் சூழலியலை அறியமுடிகிறது.

காரலர் கடம்பன் அல்லன் என்பதை

ஆரங் கண்ணியிற் சாற்றினன் வருவோன்[283]

என்று மணிமேகலை முருகனுக்குக் கடம்பு மலர் அணிவித்ததைத் தெரிவிக்கின்றது.

### 2.2.1.3. திருமாலும் துழாய் மலரும்

வைணவ சமயத்தின் கடவுள் திருமால் ஆவார். இவரைத் தமிழ் இலக்கியங்கள் மாயோன் என்று குறிப்பிடுகின்றன. இவருக்கு அணிகின்ற மாலையில் துழாய் மலர்கள் இடம்பெறுகின்றன. இதனை,

கண் பொரு திகிரி, கமழ் குரல் துழாஅய்

அலங்கல் செல்வன் சேவடி பரவி[284]

என்று பதிற்றுப்பத்துப் பாடல் தெரிவிக்கிறது. திருமாலுக்குத் துழாய் மலரை அணிவித்து வழிபட்டதை அறியமுடிகிறது.

மக்கள் வழிபாட்டு முறைகளில் ஒவ்வொரு கடவுளுக்கும் ஒவ்வொரு மலர்கள் சூடப்பட்டுள்ளன.

சிவபெருமானுக்குக் கொன்றை, திருமாலுக்குத் துளசி, முருகனுக்குக் கடம்பு, பிள்ளையாருக்கு அறுகு, அருகனுக்கு அசோகு, புத்தனுக்குத் தாமரை, உமைக்குக் குவளை, திருமகட்கு ஆம்பல், கலைமகட்கு வெண்டாமரை, காளிக்குச் செவ்வலரி, இந்திரனுக்கு மந்தாரம், கதிரவனுக்குத் தாமரை[285]

என்று கோவை.இளஞ்சேரன் ஒவ்வொரு கடவுளுக்குரிய மலர்களைப் பட்டியலிடுகின்றார்.

கடவுள் வழிபாட்டு முறைகளில் மலர்கள் இன்றியமையாத இடம்பெற்றுள்ளன. சிவன், முருகன், திருமால் போன்ற கடவுள்களுக்கு மக்கள்

மலர் சூடி வழிபட்டனர். மக்கள் வாழ்வியலில் ஓர் அங்கமாக உள்ள வழிபாட்டு முறைகளில் மலர்கள் இன்றியமையாத இடம் பெற்ற சூழலியலைக் காணமுடிகிறது.

### 2.2.2. மன்னர்கள் சூடும் மலர்கள்

சங்க கால ஆட்சிமுறை மன்னராட்சி முறையாகும். சேர, சோழ, பாண்டியர் என மூவேந்தர்கள் தமிழகத்தை ஆட்சி செய்தனர். அவர்களுடைய ஆட்சி முறையில் மலர்களைத் தங்களுக்கு ஓர் அடையாளமாகச் சூடிக் கொண்டனர். போர்க் களச்சூழலிலும் மன்னர்கள் தங்களுக்கான அடையாளச் சின்னமாக மலர்களைச் சூடிப் போர்ப் புரிந்தனர். இதனை,

> தாரும் முடியும் நேர்வன பிறவும்
> தெரிவுகொள் செங்கோல் அரசர்க்குரிய[286]

என்று தொல்காப்பியம் குறிப்பிடுகிறது.

#### 2.2.2.1. மூவேந்தர்கள்

தமிழகத்தை ஆட்சி செய்தவர்களில் குறிப்பிடத்தக்கவர்கள் சேர, சோழ, பாண்டியர் என்ற மூவேந்தர்கள் ஆவார். இதனை,

> வேந்து இடை தெரிதல் வேண்டி ஏந்துபுகழ்
> போந்தை, வேம்பே, ஆர் என வருஉம்
> மாபெருந் தானையர் மலைந்த பூவும்[287]

என்று தொல்காப்பியம் கூறுகிறது. சேரனுக்குப் பனம் பூ, சோழனுக்கு அத்திப் பூ, பாண்டியனுக்கு வேப்பம் பூ என்னும் அடையாளங்களோடு போர்ப் புரிவர் என்று சங்க இலக்கியங்களால் அறியமுடிகிறது. இதனை,

> இரும்பனை வெண்தோடு மலைந்தோன் அல்லன்
> கருஞ்சினை வேம்பின் தெரியலோன் அல்லன்
> நின்ன கண்ணியும் ஆர் மிடைந்தன்றே[288]

என்று புறநானூற்றுப் பாடல் தெரிவிக்கிறது. சேர, சோழ, பாண்டியருக்கு பனை, ஆத்தி, வேம்பு மலர்களை அடையாளமாக இருந்ததை அறியமுடிகிறது. மேலும்,

> போந்தைக் கண்ணிப் பொறைய[289]

என்றும்,

ஆரங்க கண்ணிச் சோழர்[290]

என்றும்,

சினையலர் வேம்பன் தேறா னாகி[291]

*என்று சிலப்பதிகாரம் கூறுகிறது. மன்னர்கள் தங்களுக்குரிய அடையாளமாக மலர்களைச் சூடிய சூழலைக் காணமுடிகிறது.*

தமிழக மூவேந்தர்க்கும் அடையாள மலர்களாக அத்திப்பூ சோழனுக்கும், வேப்பம் பூ பாண்டியனுக்கும், பனம் பூ சேரனுக்கும் அமைந்தன. இம்மலர்களால் தொடுத்த மாலையை இவர்கள் அணிந்தனர்[292]

*என்று ச.வே.சுப்பிரமணியன் மூவேந்தர்களின் மலர்களைக் குறிப்பிடுகிறார். இதனை,*

வேங்கை மார்பன் இரங்க வைகலும்
ஆடு கொளக் குழைந்த தும்பை, புலவர்
பாடுதுறை முற்றிய கொற்ற வேந்தே[293]

*என்றும்,*

வழைப் பூங்கண்ணி வாய் வாள்அண்டிரன்[294]

*என்றும்,*

கோடற் கண்ணி குறவர் பெருமகன்[295]

*என்றும்,*

கூவிளங் கண்ணி கொடும் பூண் எழினியும்[296]

*என்று புறநானூறும்,*

நுண் கொடி உழிஞை வெல் போர் அறுகை[297]

*என்று பதிற்றுப்பத்துப் பாடல்களும் கூறுகின்றன. உக்கிர பெருவழுதி என்ற குறுநில மன்னன் தும்மை மலரையும், ஆய் அண்டிரன் சுரபுன்னை மலரையும், ஏறைக்கோன் காந்தள் மலரையும், எழினி அதியமான் கூவிளம் மலரையும், மோகூர் உழிஞை மலரையும் அடையாளமாகச் சூடிப் போர்ப் புரிந்த புறச்சூழலியலை உணரமுடிகிறது.*

*சங்க கால மன்னர்கள் வாழ்வியலில் மலர்கள் அடையாளச் சின்னங்களாகக் காணப்பட்டன. சேரன் பனை மலரையும், சோழன் ஆத்தி மலரையும், பாண்டியன் வேப்ப மலரையும் தலையில் சூடிப் போர்ப் புரிந்த சூழலை அறியமுடிகிறது. மன்னர்களுக்குக் கீழ் ஆட்சி புரிகின்ற குறுநில*

மன்னர்கள் தும்பை, சுரபுன்னை, காந்தள், வெட்சி, வேங்கை, கூவிளம், உழிஞை போன்ற மலர்களைச் சூடிக் கொண்டு போர்ப் புரிந்த வாழ்வியல் சூழலியலையும் சங்க இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன.

### 2.2.3. வீரர்கள் சூடும் மலர்கள்

சங்க காலச் சமுதாய வாழ்க்கை அகம், புறம் எனப் பிரிக்கப்பட்டிருந்தது. காதல் வாழ்வை அகமாகவும், வீர வாழ்வைப் புறமாகவும் கருதினர். அக வாழ்வில் மலர்கள் எவ்வாறு இன்றியமையாததாகக் காணப்பட்டதோ அதே போல் புற வாழ்விலும் சிறப்பிடம் பெற்றன. வீரர்கள் போர்ப் புரியும் போது மரம், செடி, கொடிகளில் பூக்கின்ற மலர்களை அடையாளமாகத் தலையில் சூடிப் போரிட்டனர். இதனை, "வன்மையான போருக்கு மென்மையான மலரின் பெயரைச் சூட்டி அதனைச் சின்னமாக்கினர்"[298] என்று கோவை.இளஞ்சேரன் குறிப்பிடுகிறார். இதனை,

> போர்ச் சின்னமாகப் பூ விளங்கியது. போர் வீரர்களுக்கு அவ்வப் போர்க்குரியப் பூ சூட்டப்பட்டது. இதனை மன்னன் போர் வீரர்களுக்கு வழங்கினான். இது பூக்கோள் நிலை எனப்பட்டது[299]

என்று கு.வி.கிருஷ்ணமூர்த்தி கூறுகிறார்.

#### 2.2.3.1. வெட்சிப் பூ

வெட்சி வீரர்கள் பகை நாட்டினது பசுவினைக் கவர்ந்து வருவது வெட்சி ஆகும். அவ்வாறு பசுவினைக் கவரச் செல்லும்போது வெட்சிப் பூவைச் சூடிச் செல்வர். இதனை,

> வேந்து விடுமுனைஞர் வேற்றுப்புலக் களவின்
> ஆதந்து ஓம்பல் மேவற்றாகும்[300]

என்று தொல்காப்பியரும்,

> நெடிபடு கானத்து நீள்வேன் மறவர்
> அடிபடுத் தாரதர் செல்வான் - துடிபடுத்து
> வெட்சி மலைய விரவார் மணிநிரைக்
> கட்சியுட் காரி கலுழ்ம்[301]

என்று புறப்பொருள் வெண்பாமாலையும் குறிப்பிடுகின்றன. வெட்சி வீரர்கள் பசுவினைக் கவர வெட்சிப் பூவைச் சூடிச் செல்வதை இளம்பூரணாரும் விளக்கம் தருகிறார். இதனை,

வெட்சிக் கானத்து வேட்டுவர் சூட்ட[302]

என்று புறநானூறும்,

வெட்சி தாழை கட்கமழ் ஆம்பல்
நெய்தல் புன்னை மருதம்
கூட முடிந்த சென்னியன்[303]

என்று சிலப்பதிகாரமும் குறிப்பிடுகின்றன. வெட்சி வீரர்கள் பகைவரது நாட்டின் பசுவினைக் கவர வெட்சிப் பூவினைச் சூடிச் சென்ற வீர வாழ்வு தொடர்புடைய சூழலியலைக் காணமுடிகிறது.

> ஆவினங்களைக் கவர்ந்து வந்து காக்கும் நோக்கில் வருகின்றோம் என்பதன் அறிகுறியாகச் சின்னமாக ஒரு மலரைத் தேர்ந்தெடுத்தனர். வெட்சி என்றொரு மரம். அதன் பூ சிறியது. சிவப்பு நிறம் கொண்டது. சிவப்பு எச்சரிக்கைக்குரிய நிறமும் ஆயிற்று. வேந்தன் இப்பூச் சின்னத்தை வழங்குவான்[304]

என்று வெட்சிப் பூச் சூடுவதன் காரணத்தை கோவை.இளஞ்சேரன் குறிப்பிடுகிறார்.

### 2.2.3.2. கரந்தைப் பூ

வெட்சி வீரர்கள் கவரப்பட்ட ஆவினை மீட்பதற்கு கரந்தை வீரர்கள் கரந்தைப் பூவினைச் சூடிச் சென்று போர்ப் புரிவர். இதனை,

மலைத்து எழுந்தேர் மறம் சாயத்
தலைக்கொண்ட நிரை பெயர்த்தன்று[305]

என்று புறப்பொருள் வெண்பாமாலை தெரிவிக்கிறது. இதனை,

நாகுமுலை அன்ன நறும் பூங் கரந்தை
விரகறியாளர் மரபின் சூட்ட[306]

என்று புறநானூற்றுப் பாடலும் கூறுகிறது. தங்களுடைய பசுவினைக் கவர்ந்து சென்ற வெட்சி வீரருடன் கரந்தை வீரர்கள் கரந்தைப் பூவினைச் சூடிப் போரிட்ட சூழலைக் காணமுடிகிறது.

கவரப்பட்ட ஆநிரைகளை மீட்டுக் கொண்டு செல்லப் பகைவர் கரந்தை

என்னும் ஒரு வகைக் கொடியின் பூவைச் சூடிச் சினங் கொண்டெழுவர்.

சிவந்த நிறமுடைய இப்பூ சினத்தின் குறியாகவும் அமைந்தது[307]

என்று கரந்தைப் பூவினைச் சூடுவதற்கானக் காரணத்தை கோவை.இளஞ்சேரன் குறிப்பிடுகிறார்.

### 2.2.3.3. வஞ்சிப் பூ

சங்க காலத்தில் ஒரு நாட்டினர் மற்றொரு நாட்டின் மீது போர்த் தொடுத்து அவர்களின் நிலத்தைக் கைப்பற்றுவர். இத்தகைய போருக்குச் செல்லும் வீரர்கள் வஞ்சிப் பூவைச் சூடிச் செல்வர். இதற்கு,

எஞ்சா மண்நசை வேந்தனை வேந்தன்

அஞ்சுதகத் தலைச்சென்று அடல் குறித்தன்றே[308]

என்று தொல்காப்பியரும்,

வாடா வஞ்சி தலை மலைந்து

கூடார் மண் கொளல் குறித்தன்று[309]

என்று புறப்பொருள் வெண்பாமாலையும் விளக்கம் தருகின்றன. இதனையே,

பனகவர்ச் சுட்டிய படைகொள் நோன்விரல்

நகைதாழ் கண்ணி நல்வலம் திருத்தி[310]

என்று முல்லைப்பாட்டும்,

பூத்த வஞ்சி பூவா வஞ்சியிற்

போர்த் தொழில் தாண குஞ்சியிற் புனைய[311]

என்று மணிமேகலை எடுத்தியம்புகின்றன. பகைநாட்டின் நிலத்தைக் கைப்பற்ற வீரர்கள் வஞ்சிப் பூவைச் சூடிப் போர்ப் புரிந்த சூழலை அறியமுடிகிறது.

### 2.2.3.4. காஞ்சிப் பூ

பகைநாட்டு வீரர்கள் தங்களின் நிலத்தைக் கைப்பற்ற வருபவருடன் போரிடும் வீரர்கள் காஞ்சிப் பூவைச் சூடிப் போர்ப் புரிவர். இதற்கு,

பாங்கருஞ் சிறப்பிற் பன்னெறி யானும்

நில்லா உலகம் புல்லிய நெறித்தே[312]

என்று தொல்காப்பியமும்,

வேஞ்சின மாற்றான் விடுதர வேந்தன்

காஞ்சி சூடிக் கடிமனை கருதின்று[313]

என்று புறப்பொருள் வெண்பாமாலையும் இலக்கணம் கூறுகின்றன. இதனை,

காஞ்சி சான்ற செருப் பல பெய்து[314]

என்று பதிற்றுப்பத்தும்,

தண்கயம் நண்ணிய பொழில் தொறும் காஞ்சிப்

பைந்தாது அணிந்த போதுமலி எக்கர்[315]

என்று அகநானூற்றுப் பாடலும் குறிப்பிடுகின்றன. காஞ்சிப் பூவின் இயல்பையும், தன் நிலத்தைக் கைப்பற்ற வரும் வஞ்சி வீரர்களுடன் காஞ்சி வீரர்கள் நிலத்தைக் காப்பாற்ற காஞ்சிப் பூவைச் சூடிப் போரிடும் சூழலையும் உணரமுடிகிறது.

### 2.2.3.5. உழிஞைப் பூ

ஒரு மன்னன் பகைநாட்டு மன்னனின் அரணை அழித்து அந்த நாட்டைக் கைப்பற்றுவதற்கு உழிஞைப் பூவைச் சூடிக் கொண்டு போர்ப் புரியச் செல்வார்கள். இதற்கு,

முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும்

அனைநெறி மரபிற்றாகும் என்ப[316]

என்று தொல்காப்பியமும்,

முடிமிசை உழிஞை சூடி ஒன்னார்

கொடி நுடங்கா ரெயில் கொளக் கருதின்று[317]

என்று புறப்பொருள் வெண்பா மாலையும் இலக்கணம் கூறுகின்றன. இதனை,

நெடுங்கொடி உழிஞைப் பவரொடு மிடைந்து

செறியத் தொடுத்த தேம் பாய் கண்ணி[318]

என்று புறநானூற்றுப் பாடலும் குறிப்பிடுகின்றது. மதிலை அழித்து எதிர்நாட்டை கைப்பற்றுவதற்கு உழிஞைப் பூவைச் சூடிப் போர்ப் புரிந்தச் சூழலை அறியமுடிகிறது.

### 2.2.3.6. நொச்சிப் பூ

தன் நாட்டு மதிலை அழிக்க வருகின்ற எதிரி நாட்டை அழித்து மதிலைக் காக்க நொச்சிப் பூவைச் சூடிப் போர்ப் புரிவர். இதற்கு,

ஏப்புழை ஞாயில் ஏந்துநிலை அரணம்

காப்போர் சூடிய பூப்புகழ்ந் தன்று[319]

என்று புறப்பொருள் வெண்பாமாலை இலக்கணம் கூறுகிறது. இதனை,

கருங்குரல் நொச்சிக் கண் ஆர் குரூஉத் தழை[320]

என்று புறநானூற்றுப் பாடலும் தெரிவிக்கிறது. மதிலை அழிக்க வருகின்ற உழிஞை வீரரை நொச்சிப் பூ சூடிக் கொண்டு போர்ப் புரிகின்ற சூழலைக் காணமுடிகிறது.

### 2.2.3.7. தும்பைப் பூ

எதிரெதிர் நாட்டு மன்னர்கள் மறைமுகமாகப் போர்ப் புரிகின்ற சூழலில் நேருக்கு நேர் நின்று இரண்டு மன்னர்களும் நேர்மையாகப் போர்ப் புரிவது தும்பைத் திணையாகும். அவ்வாறு போர்ப் புரியும் போது தும்பைப் பூவைச் சூடிப் போர்ப் புரிவார்கள். இதற்கு,

மைந்து பொருளாக வந்து வேந்தனைச்

சென்று தலைஅழிக்குஞ் சிறப்பிற் றென்ப[321]

என்று தொல்காப்பியரும்,

செங்களத்து மறங்கருதிப்

பைந்தும்பை தலைமலைந்தன்று[322]

என்று புறப்பொருள் வெண்பாமாலையும் இலக்கணம் வகுக்கின்றன. மேலும் இதனை,

அமர் கடந்து மலைந்த தும்பைப் பகைவர்

போர்பீடு அழித்த செருப்புகல் முன்பே[323]

என்று பதிற்றுப்பத்துப் பாடலும் தெரிவிக்கிறது. இரு மன்னர்களும் எதிரெதிரே நின்று போர் புரிவதற்கு தும்பைப் பூவைச் சூடிய சூழலை அறியமுடிகிறது.

> களத்தில் நேருக்கு நேர் நின்று கைகலக்கும் போரில் போர்க்குரிய நெறியுடன் தூய்மையாக ஒழுகுதலைக் கவனத்திற் கொண்டனர். அத்தூய்மையின் அறிகுறியாகத் தூய வெண்மை நிறம் வாய்ந்த தும்பைப் பூவைக் கொண்டமை குறிப்பிடத்தக்கது[324]

என்று தும்பைப் பூவைச் சூடுவதற்குரிய காரணத்தை கோவை.இளஞ்சேரன் குறிப்பிடுகிறார்.

### 2.2.3.8. வாகைப் பூ

*போரில் வெற்றிப் பெற்ற மன்னர்கள், வீரர்கள் வாகைப் பூவைச் சூடி வெற்றியைக் கொண்டாடி மகிழ்வார்கள். இதற்கு,*

தாவில் கொள்கைத் தத்தம் கூற்றைப்
பாடுபட மிகுதிப் படுத்தல் என்ப[325]

*என்று தொல்காப்பியமும்,*

இலைபுனை வாகை சூடி இகன் மலைந்து
அலைகடல் தானை அரசட் டார்த்தன்று[326]

*என்று புறப்பொருள் வெண்பாமாலையும் இலக்கணம் தருகின்றன. இதனை,*

போர் படு மள்ளர் போந்தோடு தொடுத்த
கடவுள் வாகைத் துய்வீ ஏய்ப்ப[327]

*என்று பதிற்றுப்பத்தும்,*

. . . .     . . . .     போர் வாள் மறவர்
வருக தாமென வாகைப் பொலந்தோடு
பெருநா ளமையம் பிறக்கிடக் கொடுத்து[328]

*என்று சிலம்பும் காட்சிப்படுத்துகின்றன. இருநாட்டு மன்னர்கள் எதிரெதிரே போர்ப் புரிந்து, வெற்றி பெற்ற மன்னர், வீரர்கள் வாகைப் பூவைச் சூடிக் கொண்டு வெற்றியை மது உண்டு களித்தனர் என்பதனை அறியமுடிகிறது.*

*சங்க காலத் தமிழர்களின் போர்ச் சூழலியலில்,*

> வெட்சிப் பூவை அணிந்திருந்தால் ஆநிரை கவரச் செல்கிறான் என்று பொருள். கரந்தைப் பூ ஆநிரையை மீட்க அணியும் பூ; பகை மேற்செல்ல அணியும் பூ வஞ்சிப் பூ; அதை எதிர்ப்பவன் அணியும் பூ காஞ்சிப் பூ; கோட்டை முற்றுகையில் அணியும் பூ உழிஞைப் பூ; முற்றுகையை எதிர்ப்பது நொச்சிப்பூ; கள இரு கலப்பில் அணிவது தும்பைப் பூ; வெற்றி வாகைச் சூடும் போது வாகைப்பூ.[329]

*என்று ஒவ்வொரு முறைப் போர்ப் புரியும் வீரர்கள் அணியும் பூவை ச.வே.சுப்பிரமணியன் குறிப்பிடுகிறார். போர்ச் சூழலில் ஒவ்வொரு திணைக்கும் ஒவ்வொரு பூவைச் சூடிக் கொண்டு போர்ப் புரிந்த சூழலியலைக் காணமுடிகிறது. இவற்றில் ஆநிரையானது பாதுகாக்கப்பட வேண்டிய விலங்காக அமைந்துள்ளது. மறைமுகப் போர்களிலும், நேர்மையான*

போர்களிலும் பூக்களை அடையாளமாகக் சூடிக் கொண்டதை அறியமுடிகிறது. இவற்றின் மூலம் போர்ச் சூழலில் மலர்கள் குறியீடாகப் பொருள் உணர்த்தி நின்ற சூழலியலை அறியமுடிகிறது.

### 2.2.4. தலைவன் சூடும் மலர்கள்

சங்க காலத்தில் வாழ்ந்த மக்கள் அனைவரும் அழகுணர்வு மிகுந்தவர்களாகக் காணப்பட்டனர். தலைவன் தன்னை அழகுபடுத்திக் கொள்ள தலையிலும், காதுகளிலும், மார்பிலும் மலர்களைச் சூடிக் கொண்டான். மலர்களைச் சூடிக் கொள்வதால் உடல் நிலையானது குளிர்ச்சியடைந்து, சீரான இரத்த ஓட்டத்தைப் பெற்று வளமுடன் வாழ முடியுமென்று நம்பினர். இன்ப வாழ்வில் மலர்களின் பங்களிப்புடன் அமைந்திட்ட இயற்கை இணை சூழலியல் சார் வாழ்வைச் சங்க கால மக்கள் வாழ்ந்துள்ளனர். தலைவன்,

1. காட்டு மல்லிகை
2. கூதளம்
3. குல்லை
4. கூதாளி
5. குவளை
6. தேற்றா
7. வேப்பம் பூ
8. வேங்கை
9. கோங்கம்
10. தாமரை
11. முல்லை
12. பூளை
13. உழிஞை
14. எருக்கம்

போன்ற பல்வேறு வகையான மலர்களைத் தலையில் சூடியும், மார்பில் அணிந்தும் கொண்டான். இதனை,

> பூக்களையும், பூமாலைகளையும் போரில்லாத போதும் அணியும் பழக்கம்
> பண்டைய தமிழர்களிடையே இருந்து வந்தது[330]

என்று கு.வி.கிருஷ்ணமூர்த்தி கூறுகிறார்.

குல்லை குளுவி கூதளம் குவளை

இல்லமொடு மிடைந்த ஈர்ந்தண் கண்ணியன்[331]

என்று நற்றிணையும்,

அத்த வேம்பின் அமலை வான்பூச்

கரிஆர் உளைத்தலை பொலியச்சூடி[332]

என்று குறுந்தொகையும்,

தாமரைக் கண்ணிய தண்நறுஞ் சாந்தினை[333]

என்றும்,

புல்லினத்து ஆயர்மகன் சூடி வந்தது ஓர்

முல்லை ஒரு காமும் கண்ணியும் மெல்லிபால்[334]

என்று கலித்தொகையும்,

பன்னிறச் சுரும்பு சூழும் முல்லைச் சூட்டு வேய்ந்தார்[335]

என்று சீவகசிந்தாமணியும் மலர் சூடியத் தலைவனைப் படம்பிடித்துக் காட்டுகின்றன. குல்லை, குளவி, கூதளம், குவளை, வேம்பு, தாமரை, எருக்கம், முல்லை போன்ற மலர்களைத் தலைவன் அணிந்தச் சூழலியலைக் காணமுடிகிறது. மேலும்,

கார் கால மலரை விரும்பிச் சூடுவர். ஆடவரும் தன் குறிஞ்சியில் கண்ணியாகச் சூடிக் கொள்வர். தாராகவும் அணிவர்[336]

என்று தலைவன் குறிஞ்சி மலரை மாலையாகவும், தலையிலும் சூடியதை கோவை.இளஞ்சேரன் குறிப்பிடுகிறார்.

பண்டைய தமிழர் வாழ்வில் மலர்கள் இன்றியமையாத இடம்பெற்றிருந்தன. தலைவன் சூடுகின்ற மலர்களில் பல்வேறு மலர்கள் கலைநயத்துடனும், உடல் மற்றும் உள்ளம் சார்ந்த நலத்துடனும் அமைந்திருந்தன. மலர் சூடும் வழக்கம், நலம் பயக்கும் உயர் மதிப்புடையப் பொருளாக அக்காலத்தில் இருந்திருந்த சூழலியலை உணரமுடிகிறது.

### 2.2.5. தலைவி சூடும் மலர்கள்

சங்க இலக்கியத்தில் பெண்கள் தங்களின் உடலிலும் தலையிலும் மலர்களை அணிந்து வாழ்ந்தனர். அவர்கள் தங்களை ஒப்பனை செய்து கொள்ள மலர்களை மாலையாகவும், தனி மலராகவும், இலைகளை

ஆடையில் கலந்ததாகவும் பயன்படுத்தினர். தலைவி அகவாழ்வில் மரம், செடி, கொடிகளில் பூக்கின்ற மலர்களைச் சூடிக் கொண்டாள் என்பதை சங்க இலக்கியங்கள் உணர்த்துகின்றன.

சங்க காலத்தில் தலைவி பல்வேறு வகையான மலர்களைச் சூடிக் கொண்டாள். தலைவி,

1. காட்டு மல்லிகை
2. ஆம்பல்
3. நெய்தல்
4. காந்தள்
5. ஞாழல்
6. செருந்தி
7. குவளை
8. முல்லை
9. தாழை
10. பாதிரி
11. வெண்கடம்பு
12. வேங்கை
13. மல்லிகை
14. அரும்பு
15. ஆவிரை
16. இலவம் பூ

போன்ற மலர்களைச் சூடிக் கொண்டாள். உடல் நிலையினைத் தன்மையாக வைத்துக் கொள்ள இத்தகைய மலர்கள் பெருந்துணைப் புரிந்தன.

பெண்களின் பருவங்களை ஏழு வகையாகப் பிரிப்பதைப் போல் மலர்களை “நனை, அரும்பு, முகை, போது, மலர், அலர், வீ”[337] என்று ஏழு வகையாகவும் பிரிப்பர் என்கிறார் ச.வே.சுப்பிரமணியன். இதனை,

துஞ்சுதியோ மெல் அஞ்சி ஓதி எனப்

பன்மாண் அகட்டில் குவளை ஏற்றி

உள்ளினன் .... .... ....[338]

என்கிறது நற்றிணை பாடல். குவளை மலரைக் கர்ப்பமாக உள்ள மனைவியின் அடி வயிற்றில் வெப்பத்தைக் குறைப்பதற்காக ஒற்றி வைத்தனர்.

தேம்பாய் முல்லையொடு ஞாங்கர்ப் போக்கி[339]

என்று அகநானூறும்,

தேமென் கூந்தலில் சின்மலர் பெய்[340]

என்று சிலப்பதிகாரமும்,

பெருந்தண் கொல்லிச் சிறு பசுங்குளவி

கடி பதம் கமழுங் கூந்தல்[341]

என்று நற்றிணையும் முல்லை மலர்ச் சூடியதைத் தெரிவிக்கின்றன. முல்லை மலர்கள் பெண்ணின் கற்புத் தன்மைக்குவமையாக கையாளப்படுகிறது. அவர்களின் உடல் உறுப்புகளுக்கு உவமையாகவும் புலவர்கள் குறிப்பிட்டுள்ளனர்.

மலர்ந்த மலர்கள் மணம் வீசுவது இயற்கை. வாழ்க்கையோடு மலரை இணைத்த காரணத்தால் தான் பூப்பெய்தலும், திருமணமும் தோன்றின. இதற்காகச் சடங்குகளிலும் பூக்கள் சிறப்பிடம் பெறுகின்றன[342]

என்று மலர்கள் மனித வாழ்க்கைச் சூழலியலோடு இயைந்திருந்ததை ச.வே.சுப்பிரமணியன் குறிப்பிடுகின்றார். இதனை,

மன்ற வேங்கை மணநாட் பூத்த

மணிஏர் அரும்பின் பொன்வீ தாஅய்[343]

என்று அகநானூற்றுப் பாடல் தெரிவிக்கிறது. வேங்கை மலர்கள் மலர்வதால் தலைவன் தலைவியும் திருமணம் செய்வதாக அறிவித்த காலச் சூழலை அறியமுடிகிறது. மேலும், திருமணத்தை அறிவுறுத்தும் கருவியாகவும் மலர்கள் பயன்பட்டச் சூழலியலைக் காணமுடிகிறது.

மலர்கள் தலைவியின் வாழ்வியலில் தலையில் சூடுவதற்காகவும், தாதினை மார்பில் பூசிக் கொள்வதற்காகவும் இருந்த சூழலியலைக் காணமுடிகிறது. மலர்களைப் பறித்து விளையாடிய, ஊஞ்சல் கட்டி ஆடிய, மலர் படுக்கையாகப் பயன்படுத்திய வாழ்வியல் சூழலியலை அறியமுடிகிறது.

தலைவனின் வருகையினை அறிவிப்பதற்காகவும், திருமண நாளை அறிவிப்பதற்காகவும் மலர்கள் பயன்பட்ட சூழலியலையும் சங்க இலக்கியங்கள் வழி உணரமுடிகிறது.

### 2.2.6. பொதுமக்கள் சூடும் மலர்கள்

சங்க காலச் சமுதாயத்தில் மக்கள் ஒரு தலைவனின் கீழ் வாழ்ந்தனர். அத்தலைவனைத் தவிர மற்ற அனைவரும் குடிமக்களாகவே கருதப்பட்டனர். மன்னர்களைப் போல் குடிமக்களும் வாழ்வின் பல்வேறு கூறுகளில் மலர் சூடி வாழ்ந்தனர். அன்றாட மங்கல மற்றும் அமங்கல நிகழ்வுகளில் மலர்கள் நீக்கமற நிறைந்திருந்தன.

> தமிழர்களின் வாழ்வியலில் மணமாலை, நீர் மாலை, பிண மாலை எனப் பூக்கள் கோர்த்த மாலை இடம்பெறுகின்றன[344]

என்று கா.கார்த்திக் மக்கள் வாழ்வில் இடம்பெற்ற மலர்களின் வகைகளைச் சுட்டுகிறார்.

> தமிழரின் நிலப்பகுப்புக்கு அடிப்படையே பூக்கள் தாம் என்று கூறுவர். குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை என்பன நிலப் பகுப்பு. இது தமிழகத்திற்கு மட்டுமன்று. உலகப் பொதுமையாகவும் அமைகிறது[345]

என்று மலரோடு இயைந்த மனித வாழ்வியலை ச.வே.சுப்பிரமணியன் குறிப்பிடுகிறார்.

தமிழர்கள் தம் வாழ்வின் ஒவ்வொரு நிகழ்வுகளையும் தாவரத்தோடு இணைந்தேப் பயணித்தனர்.

| | | |
|---|---|---|
| விதை | - | நல்ல பண்பு மற்றும் நற்செயல்கள் |
| முளை | - | உள்ளத்தில் ஊன்றுதல், தொடக்கம் |
| தளிர் | - | மழலைகள் |
| மலர் | - | பெண், குழந்தைகள் |
| மலர்தல் | - | பெண்மை முதிர்வு |
| காய் | - | குழந்தைகள் |
| கனி | - | பலன், முதிர்ச்சி |
| முள் | - | குறைகள், வேண்டத்தகாதன |
| கொடி | - | பெண் |
| மரம் | - | நல்லுணர்வற்றவர்[346] |

என்று தாவரங்களின் உறுப்புகளோடு மனித வாழ்வியலை ஒப்பிட்டுப் பார்க்கும் வழக்கத்தை ச.வே.சுப்பிரமணியன் தெரிவிக்கிறார்.

குறவர்கள் வேங்கை, நெய்தல் மலர்களையும், குயவன் நொச்சி மலர்களையும், பார்ப்பன மகளிர் முல்லை மலர்களையும், கோவலர் முல்லை, காந்தள் மலர்களையும், விறலியர் பாதிரி மலர்களையும், பரதவர்கள் கூதாளி, தாழை, புலிநகக் கொன்றை, அடம்பு, ஆம்பல் போன்ற மலர்களையும், இடையர்கள் குரா, பகன்றை, குருந்தம், செங்காந்தள் மலர்களையும், வேட்டுவர் காந்தள் மலரையும், பாணர் தாமரை மலரையும், உழவர் கொன்றை, நெய்தல் மலர்களையும், உப்பு வணிகர் பாதிரி, அலரி, தாழம் மலர்களையும், கோசர்கள் கொன்றை, குவளை, முல்லை மலர்களையும், மழவர்கள் வெண்கடம்பு மலர்களையும், வடுகர்கள் குல்லை மலரையும், வலையர் மக்கள் பகன்றை மலர்களையும், பரத்தையர் செங்கழுநீர், முண்டகம், தும்பை மலர்களையும் சூடிக் கொண்டனர். இதனை,

ஒண் குரல் நொச்சித் தெரியல் சூடி[347]

என்று நற்றிணையும்,

மடலை மாண் நிழல் அசைவிட கோவலர்
வீததை முல்லைப் பூப்பறிக்குந்து[348]

என்றும்,

பாதிரி கமழும் ஓதி ஒள் நுதல்
இன்நகை விறலியொடு மென்மெல இயலிச்[349]

என்று புறநானூறும்,

வறள் அடும்பின் மலர் மலைந்தும்
புனல் ஆம்பற் பூச் சூடியும்[350]

என்று பட்டினப்பாலையும்,

களைஞர் தந்த கணைக்கால் நெய்தற்
கள்கமழ் புதுப்பூ முனையின்[351]

என்று பெரும்பாணாற்றுப்படையும் கூறுகின்றன. சங்க காலத்தில் அனைத்து மக்களும் மலர்களைச் சூடிக் கொண்டு இயற்கையான சூழலில் வாழ்ந்ததைச் சங்க இலக்கியங்கள் எடுத்துரைக்கின்றன.

காந்தள் அம்கடிமலர்க் கண்ணி நெற்றிய[352]

என்று சீவகசிந்தாமணி பாடல் கோவலர் காந்தள் மலரைச் சூடுகின்ற சூழலைக் குறிப்பிடுகின்றது. மலர்களோடு வாழ்வியல் நிகழ்வுகளை இணைத்துப் பொருள்பட வாழ்ந்த அக்கால மக்களின் சூழலியலில் போற்றுதற்குரியதாய் உள்ளது.

மனித வாழ்வியலின், இன்ப, துன்ப நிகழ்வுகளில் மலர்களைச் சூடியும், மாலை அணிந்தும் வாழ்ந்த சூழலியலைச் சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. மலர்கள் அணிவதால் உடல்நிலை குளிர்ச்சித் தன்மையைப் பெற்று, உள்ளமும் மலர்களால் மலர்ச்சியுடன் காணப்பட்டிருக்கிறது. இத்தகைய அறிவியல் உண்மைகளை அக்கால மக்கள் அறிந்திருந்த சூழலியலைக் காணமுடிகிறது.

### 2.2.7. சடங்குகள் - நற்சொல் கேட்டலில் மலர்கள்

மனித வாழ்வியலில் அன்று முதல் இன்று வரை வாழ்வியலில் சடங்குகளும், நற்சொல் கேட்டல் நம்பிக்கையும் காணப்படுகின்றன. மக்கள் நீராடலிலும், நற்சொல் கேட்டல் நிகழ்விலும் மலர்கள் குறிப்பிடத்தக்க இடத்தைப் பெறுகின்றன.

சங்க இலக்கியத்தில் குளரி, மல்லிகை, நெய்தல், இலவ மலர், முல்லை மற்றும் பல்வேறு மலர்கள் சடங்குகளிலும், நற்சொல் கேட்டலிலும் இடம்பெற்றுள்ளன. இவற்றை,

நீரோடு சொரிந்த ஈர்இதழ் அலரி
பல் இருங்கதுப்பின் நெல்லோடு தயங்க[353]

என்று அகநானூறும்,

யாழ் இசை இனவண்டு ஆர்ப்ப நெல்லோடு
நாழி கொண்ட நறுவீ முல்லை
அரும்பு அவிழ் அலரி தூஉய் கைதொழுது
பெருமுது பெண்டிர் விரிச்சி நிற்ப[354]

என்று முல்லைப்பாட்டும் குறிப்பிடுகின்றன. நீரில் மலர்களைச் சேர்த்து நற்சொல் கேட்டலும், பூக்களைத் திருமணத்தில் தூவுதலும் அக்கால மங்கள நிகழ்வில் மிக இன்றியமையாததாகும்.

அகனகர் எல்லாம் அரும்பவிழ் முல்லை
நிகர் மலர் நெல்லொடு தூஉய்ப் பகல் மாய்ந்த
மாலை மணிவிளக்கம் காட்டி[355]

*என்று சிலப்பதிகாரம் மாலைநேர மலர்த் தூவலைத் தெரிவிக்கின்றது.*

குமரனையும் குமரியையும் பிணைத்து மணமகன் மணமகளாக்கும் வாழ்வியற் சின்னமாகும் முல்லைப்பூ[356]

*என்று திருமணச் சடங்குகளில் முல்லை மலர் பயன்படுத்தப்பட்டச் சூழலை கோவை.இளஞ்சேரன் குறிப்பிடுகிறார்.*

*மலர்கள் மக்கள் வாழ்க்கைச் சூழலில் திருமண நிகழ்வுகளிலும், நிமித்தங்களிலும், மாலைநேர வழிபாடுகளிலும், அன்றாட நம்பிக்கைகளிலும், மலர்கள் நீக்கமற நிறைந்த அக்கால மக்களின் சூழலியல் தொடர்புகளைச் சங்க இலக்கியங்கள் நுண்ணிதின் வெளிப்படுத்தியுள்ளன.*

## 2.3. இலைகள்

*சங்க காலத் தமிழர் வாழ்வில் தாவரங்களின் இலைகள் மிக இன்றியமையாததாகக் காணப்படுகின்றன. இவை உணவாகவும், மருந்தாகவும், கைவினைப் பொருளாகவும் பயன்பட்டக் காட்சிகளை சங்க இலக்கியங்கள் வழி அறியமுடிகிறது.*

தளிர்த்துக் கொண்டிருப்பதால் தளிர் என்று பெயர். தளிர் முற்றி மரத்தில் இருக்கிறபொழுது இலை என்று பெயர்[357]

*என்று ல.சண்முகசுந்தரம் இலைக்கு வரையறை தருகின்றார்.*

வேல், வாள் முதலிய போர்க் கருவிகள் இலையின் வடிவமாகவே செய்யப்பட்டன[358]

*என்றும் ல.சண்முகசுந்தரம் குறிப்பிடுகிறார்.*

*மக்களின் வாழ்க்கைச் சூழலியலில் இலைகள் உணவு உண்பதற்காகவும், தலைவன் தலைவி உடுத்துகின்ற தழையாடையாகவும், தலைவன் தலைவிக்குக் கொடுக்கின்ற கையுறையாகவும் பயன்படுத்தப் பெற்றுள்ளன.*

இலைகள் குழை, தளை போன்ற சொற்களால் குறிக்கப் பெறுகின்றன. பல இலைகள் உணவாகவும், மருந்தாகவும் உரமாகவும் பயன்படுத்துகின்றன[359]

என்று ச.வே.சுப்பிரமணியன் தெரிவிக்கின்றார். இதனை,

தெய்வ மடையின் தேக்கிலைக் குவைஇ நும்
பைதீர் கடும்பொடு பாதம் மிகப் பொறுகுவீர்[360]

என்று பெரும்பாணாற்றுப்படையும்,

ஆம்பல் அகல் இலை அமலை வெஞ்சோறு[361]

என்று அகநானூறும்,

செழுங்கோள் வாழை அகல் இலைப் பகுக்கும்[362]

என்று புறநானூறும்,

. . . .   . . . .   குறுந்தொடி நெகிழினும்
காழ் பெயல் அல்குல் காசுமுறை திரியினும்[363]

என்று நற்றிணையும் கூறுகின்றன. இலைகள் உணவு உண்ணும் கலனாகவும், தழையாடையாகவும், கையுறையாகவும் அமைந்திருந்த வாழ்வியல் சூழலை உணரமுடிகிறது. மேலும் இதனை,

இருங்கனி நாவல் பழம் ஒன்று ஏந்தித்
தேக்கு இலை வைத்து சேண் நாறு பரப்பின்[364]

என்று மணிமேகலையும் குறிப்பிடுகிறது. விருச்சிகன் என்னும் முனிவன் நாவற் பழத்தைத் தேக்கு இலையில் வைத்து உண்ட வாழ்வியல் முறையை மணிமேகலை விவரிக்கின்றது.

இலைகள் மனிதனுக்கு உணவு உண்ணும் கலங்களாகவும் பயன் தந்துள்ளன. இதனை,

தாமரை இலை, வாழை இலை, பனை ஓலை, தேக்கு இலை, சேம்பு இலை, ஆல இலை போன்றவை உண்கலங்களாகப் பயன்பட்டன[365]

என்று ச.வே.சுப்பிரமணியனும்,

வாழை இலை பன்னெடுங்காலமாக உணவு பரிமாறப்படும் தட்டுப்போன்று பயன்படுத்தப்பட்டு வந்துள்ளது[366]

என்று கு.வி.கிருஷ்ணமூர்த்தியும் குறிப்பிடுகின்றார்.

மனிதனின் அடிப்படைத் தேவைகளில் முதன்மையானதாகி உணவு என்பதோடு நெருங்கிய உறவுடையதாக இலைகள் அமைந்துள்ளன. இயற்கை

*சார்ந்த, கெடுதலில்லாத, மருத்துவக் குணம் நிறைந்த இலைகளை உணவு உண்ணும் கொள்கலனாகப் பயன்படுத்தி வாழ்ந்த சங்ககால மக்கள் தம் சூழலியல் வாழ்வு பெருநிறைவை ஏற்படுத்துகிறது.*

## 2.4. கீரைகளும் கிழங்குகளும்

*மனித உணவு முறைகளில் சரிவிகித உணவாகக் கீரைகளும், கிழங்குகளும் காணப்படுகின்றன. கீரைகளில் இரும்புச் சத்து, பாஸ்பரஸ், கால்சியம், வைட்டமின் ஏ, பி, சி போன்ற பல்வேறு சத்துகள் நிறைந்தள்ளன. கிழங்கு வகைகளில் மாவுச் சத்துகள் மிகுதியாக உள்ளன. மேலும் உடல் வெப்பத்தைக் குறைக்கவும், மலச்சிக்கலைப் போக்குவதுமான மருத்துவக் குணங்களையும் பெற்றுள்ளன. இதனை,*

குப்பை வேலை உப்பு இலி வெந்ததை
மடவோர் காட்சி நாணி கடைஅடைத்து[367]

*என்று சிறுபாணாற்றுப்படையும்,*

செறுவின் வள்ளை சிறுகொடிப் பாகல்[368]

*என்று புறநானூற்றுப் பாடலும் தெரிவிக்கின்றன. அக்கால மக்கள் தங்கள் வீட்டில் வேளைக் கீரை, குப்பைக் கீரை, முன்னைக் கீரை, வள்ளைக் கீரை போன்றவற்றைச் சமைத்து உண்ட சூழலியல் தொடர்பை அறியமுடிகிறது.*

.... .... .... கானவர்
கிழங்கு அகழ் நெடுங்குடி மல்க வேங்கை[369]

*என்று ஐங்குறுநூறும்,*

சேம்பும் மஞ்சளும் ஓம்பினர் காப்போர்[370]

*என்று மலைபடுகடாமும்,*

வள்ளி வாரிய குழியின் வளர் பொன்னும் வயிரமும் இமைக்கும்[371]

*என்று சீவகசிந்தாமணியும் மக்கள் கிழங்குகளை உண்டதையும், பாதுகாத்து அறுவடைச் செய்ததையும் தெரிவிக்கின்றன.*

*சங்க கால மக்களின் உணவுமுறையில் வேளைக்கீரை, குப்பைக்கீரை, முன்னைக் கீரை, வள்ளைக் கீரை போன்றவைகளை சமைத்துண்டு வாழ்ந்ததைச் சங்க இலக்கியம் மூலம் அறியமுடிகிறது. மேலும் கருணை (நற்.367), வள்ளி (ஐங்.208), கவலை (குறந்.233), ஆம்பல் (புறம்.176), சேம்பை*

*(மலைபடு.343), மஞ்சள் (மலைபடு.343) போன்ற கிழங்கு வகைகளை வயல்களில் பாதுகாத்தும், அறுவடை செய்தும், உணவாகப் பயன்படுத்தியும் இயற்கையோடு இயைந்து வாழ்ந்த சூழலியல் தொடர்புகளைச் சங்க இலக்கியங்கள்வழி அறியமுடிகிறது.*

## 2.5. பயிரினங்கள்

*மனித வாழ்வியலுக்கு முதன்மையானதாகத் திகழ்வது உணவாகும். உணவுகளின் இன்றியமையாமையை உணர்ந்த அக்காலத் தமிழர்கள் உழவுத் தொழிலை மேற்கொண்டனர். பல்வேறு வகையான பயிரினங்களைப் பயிரிட்டு வேளாண்மைச் செம்மையுறச் செய்து வந்தனர். உழவுத் தொழில் உயிர் காக்கும் தொழிலாகக் கருதப்பட்டது. மண் வளமும் நீர் வளமும் நிறைந்த பகுதியான மருதமும் நெய்தலும் மென்புலம் எனப்பட்டன. குறைவான பகுதியினைக் கொண்ட முல்லை, குறிஞ்சி வன்புலமாக அழைக்கப்பட்டன. நில வளமும், நீர் வளமும் மக்கள் வாழ்வை வளமையடையச் செய்தன.*

சுழன்றும்ஏர்ப் பின்னது உலகம் அதனால்
உழந்தும் உழவே தலை[372]

*என்று திருவள்ளுவர் உழவுத் தொழிலின் சிறப்பினை எடுத்துரைக்கிறார்.*

### 2.5.1. நெல் வகைகள்

*பண்டைத் தமிழர்கள் பல்வேறு வகையான நெல் வகைகளைப் பயிரிட்டனர். இதனை,*

அருவிப் பரப்பின் ஐவனம் வித்திப்[373]

*என்று குறுந்தொகையும்,*

புல் இலை வெதிர நெல் விளை காடே[374]

*என்று அகநானூறும்,*

இல்அடு கள்இன் தோப்பி பருகி[375]

*என்று பெரும்பாணாற்றுப்படையும்,*

நறுங்காழ் கொன்று கோட்டின் வித்திய

குறுங்கதிர்த் தோரை[376]

*என்று மதுரைக்காஞ்சியும்,*

சாலிநெல்லின் சிறைகொள் வேலி[377]

*என்று பொருநராற்றுப்படையும்,*

முடந்தை நெல்லின் கழை அமல் கழனி[378]

*என்று பதிற்றுப்பத்தும்,*

குளக்கீழ் விளைந்த களக் கொள் வெண்ணெல்[379]

*என்று புறநானூறும்,*

செந்நெல்அம் செறுவில் கதிர்கொண்டு[380]

*என்று ஐங்குறுநூறும் தெரிவிக்கின்றன. ஐவனம், மூங்கில் நெல், தோப்பி, தோரை, சாலி, முடந்தை, வெண்ணெல், செந்நெல் போன்ற நெல் வகைகளைப் பயிரிட்டு வேளாண்மையை மேற்கொண்ட அக்கால மக்களின் வளமையான வாழ்வியல் சூழலியலை அறியமுடிகிறது.*

சித்திரக் காலிவாலான் சிறைமீட்டான் மணல்வாரி

செஞ்சம்பா கருஞ்சூரை சீரகச் சம்பா

முத்து விளங்கிமலை முண்டன்பொற் பாளைநெடு

மூக்கன் அரிக்கிராவி மூங்கிற் சம்பா

கத்தூரி வாணன் காடைக் கழுத்தன் இரங்கல் மீட்டான்

கல்லுண்டை பூம்பாளையாற் கடுக்கன் வெள்ளை

புத்தன் கருங்குறுவை புனுகுச்சம் யாவும் இரு

பூவுக்கும் விதை சேரிற் போட்டே னாண்டே[381]

*என்று முக்கூடற்பள்ளு பல்வேறு வகையான நெல் வகைகளை வயலில் விதைத்த வளமையான வேளாண் வாழ்வைச் சித்தரிக்கிறது. உணவு உற்பத்தியில் தன்னிறைவு பெற்றவர்களாக, நிலம் மற்றும் நீரின் அருமை பெருமைகளை அறிந்தவர்களாக, உடல் ஆரோக்கியத்தின் இன்றியமையாமையை உணர்ந்தவர்களாக வாழ்ந்த அக்கால மக்களின் வாழ்வியல் சூழல் வியப்போடு நோக்கத்தக்கதாகும்.*

### 2.5.2. உழுந்து

*அக்கால மக்கள் வாழ்வியலில் சிறுதானியங்களும் இடம்பெறுகின்றன. அவர்களின் வேளாண்மைத் தொழிலில் விதைக்கும் பயிரினங்ளில் 'உழுந்து' ஒன்றாகும். இதனை,*

இரும்பனிப் பருவத்த மயிர்க்காய் உழுந்தின்
அகலிலை அகல வீசி[382]

*என்று நற்றிணை பாடல் குறிப்பிடுகிறது. நன்கு மழை பெய்த கார்பருவத்தின் இறுதியில் விதைக்கும் விதையாக உழுந்து காணப்படுகிறது. உழுந்து பயிரிட்ட வேளாண் நிகழ்வை நற்றிணை படம்பிடித்துக் காட்டுகிறது. இத்தகைய தானியத்தைப் பொங்கல் (அகம்.86) உணவாக இருந்தச் சூழலை அறியமுடிகிறது.*

### 2.5.3. வரகு மற்றும் தினை

*நெல் வகைகளைப் போல் தினையும், வரகும் அக்கால மக்களால் பயிரிடப்பட்டன. இவை சத்துக்கள் மிகுந்த உணவாகும். இதனை,*

கவைக்கதிர் வரகின் கால் தொரு பொங்கழி
கவட்டிப் பொருத பல்சினை உதிர்வை[383]

*என்றும்,*

கொய்யா முன்னுங் குரல்வார்பு தினையே
அருவியான்ற பைங்கால் தோறும்
இருவி தோன்றிய பலவே[384]

*என்றும் அகநானூற்றுப் பாடல்கள் எடுத்துரைக்கின்றன. சங்க காலத் தமிழர்கள் வரகு, தினை போன்ற பயிர்களை விதைத்து, அறுவடைச் செய்த வேளாண் தொடர்பான சூழலியலை அகநானூறு நுட்பமாய்த் தெரிவிக்கின்றது.*

*சங்க இலக்கியத்தில் மக்கள் தாங்கள் வாழும் நிலத்தின் தன்மைக்கேற்ப வேளாண்மை செய்தனர். அத்தகைய வேளாண்மையில் நெல் வகைகள், உழுந்து, வரகு, தினை போன்ற தானியங்களையும் பயிரிட்டு அறுவடைச் செய்து வளமான வாழ்க்கையை வாழ்ந்த உயர் வாழ்வியலை அறியமுடிகிறது.*

**2.6. தொகுப்புரை**

*மூங்கில் மரங்கள் பாதுகாப்பிற்கும், உணவிற்கும் பயன்பட்டதை அகநானூறு, புறநானூறு, நற்றிணை பாடல்கள் தெளிவுறுத்துகின்றன. பனை மரம் நாட்டின் இயற்கை அரணாகவும், மிக உயர்ந்த உணவுப் பொருளாகவும் சங்க கால மக்கள் வாழ்வியல் சூழலியலோடு அமைந்துள்ளது. புன்னை மரங்கள் தலைவன் தலைவி ஓய்வெடுக்கும் நிழலாகவும், சந்தித்துப் பேசும் இடமாகவும், மீன்களை உலர வைக்கும் நிலமாகவும் மக்கள் வாழ்வியலில் இணைந்துள்ளன.*

*வேப்ப மரம் கிருமி நாசினி என்பதை அன்றைய தமிழ் மக்கள் அறிந்திருந்தனர். வேப்ப மரத்தின் காய், இலை, பூ, மரப்பட்டை என அனைத்தும் மக்கள் வாழ்வியலோடு இணைந்திருந்தது. மருத மரம் உழவர்கள் களைப்பாறவும், தலைவன் தலைவி விளையாடவும், போர் வீரர்கள் யானைகளைக் கட்டுவதற்கு கட்டுத்தறியாகவும் அமைந்த சூழலியலை அறியமுடிகிறது. தென்னை மரம் இளநீர், தேங்காய் போன்ற உணவுப் பொருளாகவும், மெத்தையின் படுக்கைகளில் நாராகவும், கட்டுமானப் பொருளாகவும், விளையாட்டுப் பொருளாகவும் பயன்பட்ட சூழலியல் வாழ்வினை உணரமுடிகிறது.*

*மாமரம் மன்னர்களின் காவல் மரமாகவும், இயற்கை வளங்களில் ஓர் அங்கமாகவும் திகழ்கிறது. பலா மரம் மலைப்பகுதியில் வாழும் வேட்டுவர், குறவர் போன்றவர்களின் உணவுப் பொருளாகவும், பரண் அமைப்பதற்காகவும் ஒன்றிணைந்திருந்த சூழலியல் வாழ்வை அறியமுடிகிறது. வாழை மரம் மக்கள் வாழ்வில் காய், கனி, இலை, தண்டு ஆகிய உணவுப் பொருள்களோடு இயைந்ததாகக் காணப்படுகிறது.*

*வேங்கை மரம் மன்றங்களில் ஓர் அங்கமாகவும், கோவலர்கள் வீட்டில் வளர்க்கும் விலங்குகளுக்கு உணவாகவும், குறவர்கள் கூத்தாடுகின்ற இடமாகவும் இரண்டறக் கலந்திருந்ததை உணரமுடிகிறது. தலைவன் தலைவி, வழிப்போக்கர்கள் செல்லும் வழியில் உணவாக நெல்லிக் காய்கள் பயன்பட்ட சூழலியலை உணரமுடிகிறது. காஞ்சி மரம் தலைவன் தலைவி சந்திக்கும் இடமாகவும், மகளிர் நீர் நிலைகளில் புனலாடுவதற்காகவும்,*

விளையாடுவதற்காகவும் இரவுக் குறிகளில் ஒன்றுக்கூடிப் பேசுவதற்காகவும் பெருந்துணை புரிகின்றது.

ஆலமரம் ஊர் மன்றமாகவும், மன்னர்கள் போர்ச் செய்யும் முன்பு அறிவிப்புச் செய்யும் இடமாகவும், வணிகம் செய்யும் களமாகவும் காணப்படுகின்ற சூழலியலை அறியமுடிகிறது. சந்தனமரம் நறுமணப் பொருளாகவும், விறகாகவும், உலக்கை உரலாகவும் பயன்பட்டு இயற்கை சார்ந்த சூழலியல் வாழ்வோடு இணைந்திருந்ததை அறியமுடிகிறது. நாவல் மரம் ஊர் மன்றமாகவும், உணவாகவும் பயன்பட்ட சூழலியலை உணரமுடிகிறது.

தில்லை மரம் பாதுகாப்பு வேலியாக அமைந்த சூழலியலைக் காணமுடிகிறது. வாகை மரம் மன்னர்களின் காவல் மரமாக இடம்பெற்ற சூழலியலை உணரமுடிகிறது. மரா மரம் வீரர்கள் ஓய்வெடுக்கின்ற இடமாகவும், தலைவன் தலைவி சந்திக்கும் இடமாகவும், வேட்டுவன் பாதுகாப்பாக வேட்டையாட பரணாகவும், தெய்வம் உறையும் மரமாகவும் காணப்படுகிறது. யா மரம் உழவர்களுக்கு விறகாகவும், சிலை மரம் எயினர் வேட்டையாட வில், அம்பு செய்வதற்காகவும் அமைந்துள்ள சூழலியலை உணரமுடிகிறது.

கடவுளுக்குச் சூடும் மலர்களில் சிவனுக்குக் கொன்றை மலரும், முருகனுக்குக் கடம்ப மலரும், திருமாலுக்கு துழாய் மலரும் மாலையாகவும் தூவியும் மக்கள் வழிப்பட்ட சூழலை உணரமுடிகிறது. மன்னர்கள் சூடும் மலர்களில் சேரன் பனை மலரையும், சோழன் ஆத்தி மலரையும், பாண்டியன் வேப்ப மலரையும் தலையில் சூடிப் போர்ப் புரிந்த சூழலியலை காணமுடிகிறது. வீரர்கள் சூடும் மலர்களில் வெட்சிப் பூ, கரந்தைப் பூ, வஞ்சிப் பூ, காஞ்சிப் பூ, உழிஞைப் பூ, நொச்சிப் பூ, தும்பைப் பூ, வாகைப் பூ ஆகியன இடம்பெற்றிருந்தன.

தலைவன் சூடும் மலர்களில் காட்டு மல்லிகை, கூதளம், குல்லை, கூதாளி, குவளை, தேற்றா, வேப்பம் பூ, வேங்கை, கோங்கம், தாமரை, முல்லை, பூளை, உழிஞை, எருக்கம் ஆகிய மலர்கள் சூடிய சூழலியலைக் காணமுடிகிறது. தலைவி சூடும் மலர்களில் காட்டு மல்லிகை, ஆம்பல்,

நெய்தல், காந்தள், ஞாழல், செருந்தி, குவளை, முல்லை, தாழை, பாதிரி, வெண்கடம்பு, வேங்கை, மல்லிகை, அரும்பு, ஆவிரை, இலவம் பூ ஆகிய மலர்களையும், தாதினையும் தலையில் சூடியும், மலர் படுக்கையாகவும் இடம்பெற்றிருந்த சூழலியல் வாழ்வியலை உணரமுடிகிறது.

பொதுமக்களான குறவர்கள் வேங்கை, நெய்தல் மலர்களையும், குயவன் நொச்சி மலர்களையும், பார்ப்பன மகளிர் முல்லை மலர்களையும், கோவலர் முல்லை, காந்தள் மலர்களையும், விறலியர் பாதிரி மலர்களையும், பரதவர்கள் கூதாளி, தாழை, புலிநகக் கொன்றை, அடம்பு, ஆம்பல் போன்ற மலர்களையும், இடையர்கள் குரா, பகன்றை, குருந்தம், செங்காந்தள் மலர்களையும், வேட்டுவர் காந்தள் மலரையும், பாணர் தாமரை மலரையும், உழவர் கொன்றை, நெய்தல் மலர்களையும், உப்பு வணிகர் பாதிரி, அலரி, தாழம் மலர்களையும், கோசர்கள் கொன்றை, குவளை, முல்லை மலர்களையும், மழவர்கள் வெண்கடம்பு மலர்களையும், வடுகர்கள் குல்லை மலரையும், வலையர் மக்கள் பகன்றை மலர்களையும், பரத்தையர் செங்கழுநீர், முண்டகம், தும்பை மலர்களையும் சூடிக் கொண்ட சூழலியல் வாழ்வை உணரமுடிகிறது.

மலர்கள் மக்கள் வாழ்க்கைச் சூழலில் திருமண நிகழ்வுகளிலும், நிமித்தங்களிலும், மாலைநேர வழிபாடுகளிலும், அன்றாட நம்பிக்கைகளிலும் இணைந்திருந்த சூழலியல் வாழ்வை உணரமுடிகிறது. இலைகள் உணவு உண்ணும் கொள்கலனாக அன்று முதல் இன்று வரை பயன்படுத்தப்பட்டுள்ளது. கிழங்கு வகைகளை வயல்களில் பாதுகாத்தும், அறுவடை செய்தும், உணவாகப் பயன்படுத்தியும் இயற்கையோடு இயைந்து வாழ்ந்த சூழலியலை அறியமுடிகிறது. நெல் வகைகள், உழுந்து, வரகு, தினை போன்ற தானியங்களையும் பயிரிட்டு அறுவடைச் செய்து வளமான வாழ்க்கையை வாழ்ந்த உயர் வாழ்வியலை அறியமுடிகிறது.

தாவரங்களை வாழ்வியலின் ஓர் அங்கமாக கைக்கொண்டு வாழ்ந்த சங்ககால மக்களின் உயர் வாழ்வு, சூழலியல் சங்கிலியுடன் இயைந்ததாக அமைந்துள்ளது.

## சான்றெண் குறிப்புகள்

1. அரிஸ்டாட்டில், **வாழ்வு தரும் மரங்கள்,** ப.235.
2. சா.அனந்தகுமார், **தாவரங்கள் விலங்குகள் பறவைகளைக் குறிக்கும் பல்வேறு பெயர்கள்,** ப.43.
3. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.311:1-2.
4. மேலது., பா.331:3-7.
5. கதிர் முருகு (உ.ஆ.), **முக்கூடற்பள்ளு**, பா.108.
6. அரிஸ்டாட்டில், **வாழ்வு தரும் மரங்கள்,** ப.237.
7. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.348:3-9.
8. ஆர்.கே.பாரதநேசன், **மனிதனுக்கு எல்லாமே மரம் தான்**, ப.110.
9. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.368:14-15.
10. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.129:1-2.
11. அ.ஆலிஸ் (உ.ஆ.), **பதிற்றுப்பத்து**, பா.81:20-21.
12. வி.நாகராசன் (உ.ஆ.), **மலைபடுகடாம்**, பா.522.
13. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை,** பா.232:2-4.
14. அரிஸ்டாட்டில், **வாழ்வு தரும் மரங்கள்,** ப.236.
15. வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை,** பா.239:6.
16. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை,** பா.95:1-7.
17. ஞா.மாணிக்கவாசன் (உ.ஆ.), **சிலப்பதிகாரம், அரங்கேற்றுக் காதை,** பா.3:97-98.
18. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.39:5-7.
19. ஆர்.கே.பாரதநேசன், **மனிதனுக்கு எல்லாமே மரம் தான்**, ப.108.
20. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.182:2.
21. வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை,** பா.304:1-2.
22. அ.விசுவநாதன் (உ.ஆ.), **கலித்தொகை,** பா.96:27.
23. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.399:15.
24. ஆர்.கே.பாரதநேசன், **மனிதனுக்கு எல்லாமே மரம் தான்**, ப.108.
25. அரிஸ்டாட்டில், **வாழ்வு தரும் மரங்கள்,** ப.90.
26. இளம்பூரணர் (உ.ஆ.), **தொல்காப்பியம், பொருளதிகாரம்**, நூ.630.

27. சா.அனந்தகுமார், **தாவரங்கள் விலங்குகள் பறவைகளைக் குறிக்கும் பல்வேறு பெயர்கள்,** ப.33.

28. சு.சண்முகசுந்தரம் (தொ.ஆ.), **சங்க இலக்கிய வரலாறு**, ப.732.

29. இளம்பூரணர் (உ.ஆ.), **தொல்காப்பியம், பொருளதிகாரம்**, ப.119.

30. ச.வே.சுப்பிரமணியன், **தமிழர் வாழ்வில் தாவரம்**, ப.29.

31. கு.வி.கிருஷ்ணமூர்த்தி, **தமிழரும் தாவரமும்,** ப.207.

32. அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), **ஐங்குறுநூறு**, பா.114:4.

33. வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை**, பா.87:7.

34. மேலது., பா.177:3.

35. மேலது., பா.293:3.

36. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.225:1-4.

37. கா.கோவிந்தன், **பண்டைத் தமிழர் போர் நெறி**, பக்.182-183.

38. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.24:11-12.

39. அரிஸ்டாட்டில், **வாழ்வு தரும் மரங்கள்,** ப.93.

40. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை,** பா.135:1-2.

41. வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை,** பா.248:5-7.

42. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை,** பா.90:6-7.

43. மேலது., பா.142:4.

44. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.37:10-11.

45. கதிர் முருகு (உ.ஆ.), **முக்கூடற்பள்ளு**, பா.33:3-4.

46. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை,** பா.38:6-10.

47. வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை**, பா.182:1-2.

48. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை,** பா.152:1.

49. அ.விசுவநாதன் (உ.ஆ.), **கலித்தொகை,** பா.83:8-9.

50. மேலது., பா.138:12.

51. மேலது., பா.139:10.

52. மேலது., பா.141:5-6.

53. மேலது., பா.147:59.

54. துரை.இராசாராம் (உ.ஆ.), **சீவகசிந்தாமணி**, பா.999.

55. கோவை.இளஞ்சேரன், **இலக்கியம் ஓர் பூக்காடு,** ப.347.

56. ஆர்.கே.பாரதநேசன், **மனிதனுக்கு எல்லாமே மரம் தான்**, ப.34.

57. பி.எல்.சாமி, **சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம்**, ப.122.

58. மேலது., ப.122.

59. **இந்து தமிழ் நாளிதழ்**, இணையத்தளம், 25.01.2016.

60. ஆர்.எஸ்.நாராயணன், **வாழ்வு தரும் மரங்கள்**, ப.188.

61. ச.வே.சுப்பிரமணியன், **தமிழர் வாழ்வில் தாவரம்**, ப.54.

62. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை**, பா.249:1-4.

63. இரா.பஞ்சவர்ணம், **கபிலரின் குறிஞ்சிப்பாட்டுத் தாவரங்கள்**, ப.306.

64. ச.வே.சுப்பிரமணியன், **தமிழர் வாழ்வில் தாவரம்**, ப.27.

65. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை**, பா.172:1-10.

66. மேலது., பா.249:4-8.

67. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.145:11-13.

68. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை**, பா.180:6-8.

69. மேலது., பா.354:5-7.

70. மேலது., பா.388:5-8.

71. மேலது., பா.307:5-7.

72. மேலது., பா.4:1-3.

73. மேலது., பா.101:2-4.

74. வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை**, பா.303:5-7.

75. துரை.தண்டபாணி (உ.ஆ.), **மணிமேகலை**, கா.24, அடி.27-29.

76. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.340:1-2.

77. மேலது., பா.240:14-15.

78. மேலது., பா.360:18-19.

79. மேலது., பா.230:5-7.

80. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை**, பா.145:8-9.

81. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.270:6-7.

82. வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை**, பா.123:3-5.

83. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.290:8-10.

84. ஞா.மாணிக்கவாசகன் (உ.ஆ.), **சிலப்பதிகாரம்**, கா.7, அடி.21-22.

85. இரா.பஞ்சவர்ணம், **தொல்காப்பியரின் தொல்காப்பியத் தாவரங்கள்,** ப.278.

86. சா.அனந்தகுமார், **தாவரங்கள் விலங்குகள் பறவைகளைக் குறிக்கும் பல்வேறு பெயர்கள்,** ப.47.

87. ஆர்.கே.பாரதநேசன், **மனிதனுக்கு எல்லாமே மரம் தான்**, ப.32.

88. ச.வே.சுப்பிரமணியன், **தமிழர் வாழ்வில் தாவரம்**, ப.39.

89. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.76:4.

90. மேலது., பா.77:2-3.

91. மேலது., பா.79:2.

92. கோவை.இளஞ்சேரன், **இலக்கியம் ஓர் பூக்காடு,** ப.335.

93. ச.வே.சுப்பிரமணியன், **தமிழர் வாழ்வில் தாவரம்**, ப.35.

94. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.281:1.

95. ச.வே.சுப்பிரமணியன், **தமிழர் வாழ்வில் தாவரம்**, ப.38.

96. அ.ஆலிஸ் (உ.ஆ.), **பதிற்றுப்பத்து**, பா.44:14-15.

97. மேலது., பா.49:16-17.

98. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை,** பா.3:2-3.

99. வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை,** பா.196:1-2.

100. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.309:1-6.

101. ஆர்.கே.பாரதநேசன், **மனிதனுக்கு எல்லாமே மரம் தான்**, ப.26.

102. துரை.தண்டபாணி (உ.ஆ.), **மணிமேகலை,** பா.7:73.

103. கு.வி.கிருஷ்ணமூர்த்தி, **தமிழரும் தாவரமும்,** ப.256.

104. மேலது., ப.94.

105. இரா.பஞ்சவர்ணம், **தொல்காப்பியரின் தொல்காப்பியத் தாவரங்கள்,** ப.251.

106. சா.அனந்தகுமார், **தாவரங்கள் விலங்குகள் பறவைகளைக் குறிக்கும் பல்வேறு பெயர்கள்,** ப.39.

107. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.37:16-18.

108. இரா.மோகன் (உ.ஆ.), **பெரும்பாணாற்றுப்படை**, அடி.230-233.

109. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை,** பா.350:1-4.

110. அரிஸ்டாட்டில், **வாழ்வு தரும் மரங்கள்,** ப.81.

111. அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), **ஐங்குறுநூறு**, பா.31:3-4.

112. மேலது., பா.33:1-3.

113. மேலது., பா.74:2-4.

114. மேலது., பா.75:2-5.

115. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.243:6-9.

116. ஞா.மாணிக்கவாசகன் (உ.ஆ.), **சிலப்பதிகாரம்**, அடி.71-75.

117. கோவை.இளஞ்சேரன், **இலக்கியம் ஓர் பூக்காடு**, ப.248.

118. வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை**, பா.258:2-4.

119. ஆர்.கே.பாரதநேசன், **மனிதனுக்கு எல்லாமே மரம் தான்**, ப.134.

120. அரிஸ்டாட்டில், **வாழ்வு தரும் மரங்கள்**, ப.155.

121. சா.அனந்தகுமார், **தாவரங்கள் விலங்குகள் பறவைகளைக் குறிக்கும் பல்வேறு பெயர்கள்**, ப.28.

122. இரா.மோகன் (உ.ஆ.), **பெரும்பாணாற்றுப்படை**, அடி.363-367.

123. ஆர்.கே.பாரதநேசன், **மனிதனுக்கு எல்லாமே மரம் தான்**, ப.62.

124. மேலது., ப.70.

125. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.24:10-16.

126. ஆர்.கே.பாரதநேசன், **மனிதனுக்கு எல்லாமே மரம் தான்**, ப.52.

127. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.29:15-16.

128. கதிர் முருகு (உ.ஆ.), **முக்கூடற்பள்ளு**, பா.25:1-3.

129. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.61:8-9.

130. ஆர்.கே.பாரதநேசன், **மனிதனுக்கு எல்லாமே மரம் தான்**, பக்.51-52.

131. அரிஸ்டாட்டில், **வாழ்வு தரும் மரங்கள்**, ப.158.

132. ச.வே.சுப்பிரமணியன், **தமிழர் வாழ்வில் தாவரம்**, ப.35.

133. மேலது., ப.38.

134. ஆர்.எஸ்.நாராயணன், **வாழ்வு தரும் மரங்கள்**, ப.50.

135. சா.அனந்தகுமார், **தாவரங்கள் விலங்குகள் பறவைகளைக் குறிக்கும் பல்வேறு பெயர்கள்**, பக்.40-41.

136. ஆர்.கே.பாரதநேசன், **மனிதனுக்கு எல்லாமே மரம் தான்**, ப.123.

137. மேலது., ப.125.

138. ச.வே.சுப்பிரமணியன், **தமிழர் வாழ்வில் தாவரம்**, ப.81.

139. இரா.பஞ்சவர்ணம், **தொல்காப்பியரின் தொல்காப்பியத் தாவரங்கள்**, ப.255.

140. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.117:15-18.

141. கமலா முருகன் (உ.ஆ.), **குயில் பாட்டு**, பா.1:6-7.

142. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.141:18-21.

143. மேலது., பா.348:1-2.

144. துரை.இராசாராம் (உ.ஆ.), **சீவகசிந்தாமணி**, பா.66.

145. வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை**, பா.73:2-4.

146. இரா.மோகன் (உ.ஆ.), **திருமுருகாற்றுப்படை**, அடி.57-60.

147. அ.விசுவநாதன் (உ.ஆ.), **கலித்தொகை**, பா.104:13.

148. பெ.சுப்பிரமணியன் (உ.ஆ.), **பரிபாடல்**, பா.5:4.

149. மேலது., பா.9:70.

150. மேலது., பா.14:17-18.

151. மேலது., பா.19:101.

152. மேலது., பா.21:8.

153. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை**, பா.9:10-11.

154. மேலது., பா.134:7.

155. அரிஸ்டாட்டில், **வாழ்வு தரும் மரங்கள்**, ப.11.

156. சா.அனந்தகுமார், **தாவரங்கள் விலங்குகள் பறவைகளைக் குறிக்கும் பல்வேறு பெயர்கள்**, ப.33.

157. வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை**, பா.356:5-6.

158. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.109:5.

159. கதிர் முருகு (உ.ஆ.), **முக்கூடற்பள்ளு**, பா.25:4-5.

160. ச.வே.சுப்பிரமணியன், **தமிழர் வாழ்வில் தாவரம்**, ப.31.

161. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.208:21-22.

162. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.129:4-5.

163. மேலது., பா.140:1-2.

164. மேலது., பா.163:8-9.

165. அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), **ஐங்குறுநூறு**, பா.351:1-3.

166. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.172:11-12.

*167. அ.ஆலிஸ் (உ.ஆ.),* **பதிற்றுப்பத்து**, *பா.81:19.*

*168. இரா.செயபால் (உ.ஆ.),* **அகநானூறு**, *பா.348:3-4.*

*169. மேலது., பா.182:3.*

*170. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.),* **புறநானூறு**, *பா.236:1-2.*

*171. இரா.மோகன் (உ.ஆ.),* **பெரும்பாணாற்றுப்படை**, *பா.356.*

*172. ச.வே.சுப்பிரமணியன்,* **தமிழர் வாழ்வில் தாவரம்**, *ப.85.*

*173. அரிஸ்டாட்டில்,* **வாழ்வு தரும் மரங்கள்,** *ப.13.*

*174. துரை.இராசாராம் (உ.ஆ.),* ***சீவகசிந்தாமணி,*** *பா.1652.*

*175. அ.விசுவநாதன் (உ.ஆ.),* **கலித்தொகை,** *பா.41:7-10.*

*176. இரா.செயபால் (உ.ஆ.),* **அகநானூறு**, *பா.12:8-9.*

*177. அரிஸ்டாட்டில்,* **வாழ்வு தரும் மரங்கள்,** *ப.159.*

*178. சா.அனந்தகுமார்,* **தாவரங்கள் விலங்குகள் பறவைகளைக் குறிக்கும் பல்வேறு பெயர்கள்,** *ப.44.*

*179. ஆர்.கே.பாரதநேசன்,* **மனிதனுக்கு எல்லாமே மரம் தான்**, *ப.8.*

*180. மேலது., ப.8.*

*181. அ.ஆலிஸ் (உ.ஆ.),* **பதிற்றுப்பத்து**, *பா.29:1-2.*

*182. ச.வே.சுப்பிரமணியன்,* **தமிழர் வாழ்வில் தாவரம்**, *ப.30.*

*183. திருஞானசம்பந்தர்,* **தேவாரம்**, *பா.6.*

*184. இரா.மோகன் (உ.ஆ.),* **மதுரைக்காஞ்சி**, *பா.529.*

*185. ஆர்.கே.பாரதநேசன்,* **மனிதனுக்கு எல்லாமே மரம் தான்**, *ப.13.*

*186. இரா.மோகன் (உ.ஆ.),* **பெரும்பாணாற்றுப்படை**, *பா.359.*

*187. ஆர்.கே.பாரதநேசன்,* **மனிதனுக்கு எல்லாமே மரம் தான்**, *ப.15.*

*188. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.),* **புறநானூறு**, *பா.163:8-14.*

*189. ஆர்.கே.பாரதநேசன்,* **மனிதனுக்கு எல்லாமே மரம் தான்**, *ப.11.*

*190. பெ.சுப்பிரமணியன் (உ.ஆ.),* **பரிபாடல்**, *பா.10:100.*

*191. கோவை.இளஞ்சேரன்,* **இலக்கியம் ஓர் பூக்காடு,** *ப.684.*

*192. அரிஸ்டாட்டில்,* **வாழ்வு தரும் மரங்கள்,** *ப.161.*

*193. மேலது., ப.128.*

*194. சா.அனந்தகுமார்,* **தாவரங்கள் விலங்குகள் பறவைகளைக் குறிக்கும் பல்வேறு பெயர்கள்,** *ப.47.*

195. வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை**, பா.96:1.

196. மேலது., பா.266:3.

197. அரிஸ்டாட்டில், **வாழ்வு தரும் மரங்கள்**, ப.129.

198. வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை**, பா.241:4,

199. அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), **ஐங்குறுநூறு**, பா.259:1-3.

200. ஞா.மாணிக்கவாசகன் (உ.ஆ.), **சிலப்பதிகாரம்**, பா.1.

201. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.129:1-3.

202. மேலது., பா.224:15-16.

203. அரிஸ்டாட்டில், **வாழ்வு தரும் மரங்கள்**, ப.129.

204. கோவை.இளஞ்சேரன், **இலக்கியம் ஓர் பூக்காடு**, ப.419.

205. அரிஸ்டாட்டில், **வாழ்வு தரும் மரங்கள்**, ப.35.

206. சா.அனந்தகுமார், **தாவரங்கள் விலங்குகள் பறவைகளைக் குறிக்கும் பல்வேறு பெயர்கள்**, ப.32.

207. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.67:4-8.

208. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.91:7-11.

209. வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை**, பா.209:1-3.

210. புலியூர்க்கேசிகன் (உ.ஆ.), **கலிங்கத்துப் பரணி**, பா.77:1.

211. அரிஸ்டாட்டில், **வாழ்வு தரும் மரங்கள்**, ப.35.

212. பி.எல்.சாமி, **சங்க இலக்கியத்தில் செடி கொடி விளக்கம்**, ப.191.

213. இரா.பஞ்சவர்ணம், **தொல்காப்பியரின் தொல்காப்பியத் தாவரங்கள்**, ப.192.

214. சா.அனந்தகுமார், **தாவரங்கள் விலங்குகள் பறவைகளைக் குறிக்கும் பல்வேறு பெயர்கள்**, ப.36.

215. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.96:8,

216. அ.விசுவநாதன் (உ.ஆ.), **கலித்தொகை**, பா.74:5.

217. துரை.தண்டபாணி (உ.ஆ.), **மணிமேகலை**, பா.18:52-53.

218. அ.ஆலிஸ் (உ.ஆ.), **பதிற்றுப்பத்து**, பா.62:12-15.

219. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.156:3-7.

220. மேலது., பா.346:5-8.

221. அ.விசுவநாதன் (உ.ஆ.), **கலித்தொகை**, பா.108:60.

222. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.246:5-7.

223. மேலது., பா.286:4-5.

224. மேலது., பா.336:9-10.

225. இரா.பஞ்சவர்ணம், **தொல்காப்பியரின் தொல்காப்பியத் தாவரங்கள்,** ப.166.

226. சா.அனந்தகுமார், **தாவரங்கள் விலங்குகள் பறவைகளைக் குறிக்கும் பல்வேறு பெயர்கள்,** ப.4.

227. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை,** பா.343:1-6.

228. அ.விசுவநாதன் (உ.ஆ.), **கலித்தொகை,** பா.101:13-14.

229. மேலது., பா.133:3.

230. பெ.சுப்பிரமணியன் (உ.ஆ.), **பரிபாடல்**, பா.4:66-69.

231. விக்கிபீடியா, இணையத்தளம், மே 27, 2012.

232. வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை**, பா.15:2-3.

233. இரா.இராதாகிருஷ்ணன், **நீதி நூல்கள் ஏழு - வெற்றிவேற்கை**, பா.17.

234. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை,** பா.76:1-4.

235. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.251:6-9.

236. அரிஸ்டாட்டில், **வாழ்வு தரும் மரங்கள்,** ப.5.

237. ஏற்காடு இளங்கோ, **மனித வாழ்வில் மரங்கள்**, ப.35.

238. மேலது., ப.71.

239. அரிஸ்டாட்டில், **வாழ்வு தரும் மரங்கள்,** ப.7.

240. மேலது., ப.7.

241. கோவை.இளஞ்சேரன், **இலக்கியம் ஓர் பூக்காடு,** ப.713.

242. ச.வே.சுப்பிரமணியன், **தமிழர் வாழ்வில் தாவரம்**, ப.31.

243. அரிஸ்டாட்டில், **வாழ்வு தரும் மரங்கள்,** ப.84.

244. சா.அனந்தகுமார், **தாவரங்கள் விலங்குகள் பறவைகளைக் குறிக்கும் பல்வேறு பெயர்கள்,** ப.19.

245. அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), **ஐங்குறுநூறு**, பா.253:1-4.

246. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.108:1-3.

247. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை,** பா.140:2-5.

248. மேலது., பா.168:10-11.

249. அரிஸ்டாட்டில், **வாழ்வு தரும் மரங்கள்,** ப.84.

250. துரை.இராசாராம் (உ.ஆ.), **சீவகசிந்தாமணி,** பா.1559:2.

251. அ.விசுவநாதன் (உ.ஆ.), **கலித்தொகை,** பா.40:4.

252. மேலது., பா.43:3-4.

253. பி.எல்.சாமி, **சங்க இலக்கியத்தில் சில உயிரினங்கள்,** ப.69.

254. அரிஸ்டாட்டில், **வாழ்வு தரும் மரங்கள்,** ப.8.

255. சா.அனந்தகுமார், **தாவரங்கள் விலங்குகள் பறவைகளைக் குறிக்கும் பல்வேறு பெயர்கள்,** ப.30.

256. ச.வே.சுப்பிரமணியன், **தமிழர் வாழ்வில் தாவரம்**, ப.55.

257. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.177:10-11.

258. துரை.தண்டபாணி (உ.ஆ.), **மணிமேகலை,** பா.17:28-30.

259. தமிழ்ப்பிரியன் (உ.ஆ.), **நீதிநூற் களஞ்சியம், விவேக சிந்தாமணி**, பா.19.

260. அரிஸ்டாட்டில், **வாழ்வு தரும் மரங்கள்,** ப.56.

261. மேலது., ப.57.

262. அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), **ஐங்குறுநூறு**, பா.131:2-3.

263. சி.அருணா வடிவேல் முதலியார் (உ.ஆ.), **திருவாசகம், திருக்கோவையார்**, பா.2.

264. இரா.பஞ்சவர்ணம், **தொல்காப்பியரின் தொல்காப்பியத் தாவரங்கள்,** ப.152.

265. சா.அனந்தகுமார், **தாவரங்கள் விலங்குகள் பறவைகளைக் குறிக்கும் பல்வேறு பெயர்கள்,** ப.44.

266. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.136:10.

267. புலியூர்க்கேசிகன் (உ.ஆ.), **கலிங்கத்துப்பரணி**, பா.78:1.

268. அ.ஆலிஸ் (உ.ஆ.), **பதிற்றுப்பத்து**, பா.40:14-16.

269. மேலது., பா.88:10.

270. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.199:19-20.

271. கோவை.இளஞ்சேரன், **இலக்கியம் ஓர் பூக்காடு,** பக்.510-511.

272. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை,** பா.148:5-6.

273. ந.ஆனந்தி (உ.ஆ.), **பெருமாள் திருமொழி**, பா.2:13:2-3.

274. அ.ஆலிஸ் (உ.ஆ.), **பதிற்றுப்பத்து**, பா.17:5.

275. அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), **ஐங்குறுநூறு**, பா.381:1-2.

276. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.172:2-8.

277. மேலது., பா.256:20.

278. இரா.மோகன் (உ.ஆ.), **மலைபடுகடாம்**, பா.395-396.

279. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.257:15-18.

280. அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), **ஐங்குறுநூறு**, பா.365:1-2.

281. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.1:1-3.

282. இரா.மோகன் (உ.ஆ.), **திருமுருகாற்றுப்படை,** பா.10-11.

283. துரை.தண்டபாணி (உ.ஆ.), **மணிமேகலை, பளிக்கரை புக்க காதை,** அடி.49-50.

284. அ.ஆலிஸ் (உ.ஆ.), **பதிற்றுப்பத்து**, பா.31:8.

285. கோவை.இளஞ்சேரன், **இலக்கியம் ஓர் பூக்காடு,** ப.41.

286. இளம்பூரணர் (உ.ஆ.), **தொல்., பொருள்.,** நூ.616.

287. மேலது., நூ.68:3-5.

288. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.45:1-3.

289. ஞா.மாணிக்கவாசகன் (உ.ஆ.), **சிலப்பதிகாரம்**, பா.27:126.

290. மேலது., பா.12.

291. மேலது., பா.16:149.

292. ச.வே.சுப்பிரமணியன், **தமிழர் வாழ்வில் தாவரம்**, ப.72.

293. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.21:9-11.

294. மேலது., பா.131:2.

295. மேலது., பா.151:7.

296. மேலது., பா.158:9.

297. அ.ஆலிஸ் (உ.ஆ.), **பதிற்றுப்பத்து**, பா.44:10.

298. கோவை.இளஞ்சேரன், **இலக்கியம் ஓர் பூக்காடு,** ப.321.

299. கு.வி.கிருஷ்ணமூர்த்தி, **தமிழரும் தாவரமும்,** ப.137.

300. இளம்பூரணர் (உ.ஆ.), **தொல்., பொருள்.,** நூ.60.

301. புலியூர்க்கேசிகன் (உ.ஆ.), **புறப்பொருள் வெண்பாமாலை,** நூ.1:3.

302. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.202:1.

303. ஞா.மாணிக்கவாசகன் (உ.ஆ.), **சிலப்பதிகாரம்**, பா.22:68-70.

304. கோவை.இளஞ்சேரன், **இலக்கியம் ஓர் பூக்காடு,** ப.32.

305. புலியூர்க்கேசிகன் (உ.ஆ.), **புறப்பொருள் வெண்பாமாலை,** நூ.21:3.

306. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.261:13-14.

307. கோவை.இளஞ்சேரன், **இலக்கியம் ஓர் பூக்காடு,** ப.32.

308. இளம்பூரணர் (உ.ஆ.), **தொல்., பொருள்.,** நூ.64.

309. புலியூர்க்கேசிகன் (உ.ஆ.), **புறப்பொருள் வெண்பாமாலை,** நூ.35:4.

310. இரா.மோகன் (உ.ஆ.), **முல்லைப்பாட்டு**, அடி.77-78.

311. துரை.தண்டபாணி (உ.ஆ.), **மணிமேகலை,** பா.26:78-79.

312. இளம்பூரணர் (உ.ஆ.), **தொல்., பொருள்.,** நூ.76.

313. புலியூர்க்கேசிகன் (உ.ஆ.), **புறப்பொருள் வெண்பாமாலை,** நூ.60:5.

314. அ.ஆலிஸ் (உ.ஆ.), **பதிற்றுப்பத்து**, பா.84:19.

315. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.25:3-4.

316. இளம்பூரணர் (உ.ஆ.), **தொல்., பொருள்.,** நூ.66.

317. புலியூர்க்கேசிகன் (உ.ஆ.), **புறப்பொருள் வெண்பாமாலை,** நூ.94:7.

318. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.76:5-6.

319. புலியூர்க்கேசிகன் (உ.ஆ.), **புறப்பொருள் வெண்பாமாலை,** நூ.85:6.

320. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.271:2.

321. இளம்பூரணர் (உ.ஆ.), **தொல்., பொருள்.,** நூ.70.

322. புலியூர்க்கேசிகன் (உ.ஆ.), **புறப்பொருள் வெண்பாமாலை,** நூ.126:8.

323. அ.ஆலிஸ் (உ.ஆ.), **பதிற்றுப்பத்து**, பா.14:8-9.

324. கோவை.இளஞ்சேரன், **இலக்கியம் ஓர் பூக்காடு,** ப.33.

325. இளம்பூரணர் (உ.ஆ.), **தொல்., பொருள்.,** நூ.73.

326. புலியூர்க்கேசிகன் (உ.ஆ.), **புறப்பொருள் வெண்பாமாலை,** நூ.154:9.

327. அ.ஆலிஸ் (உ.ஆ.), **பதிற்றுப்பத்து**, பா.64:14-15.

328. ஞா.மாணிக்கவாசகன் (உ.ஆ.), **சிலப்பதிகாரம்**, பா.27:42-44.

329. ச.வே.சுப்பிரமணியன், **தமிழர் வாழ்வில் தாவரம்**, ப.72.

330. கு.வி.கிருஷ்ணமூர்த்தி, **தமிழரும் தாவரமும்,** ப.139.

331. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை,** பா.376:5-6.

332. வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை**, பா.281:3-4.

333. அ.விசுவநாதன் (உ.ஆ.), **கலித்தொகை,** பா.52:7.

*334.* மேலது., *பா.115:4-5.*

*335.* துரை.இராசாராம் *(உ.ஆ.),* ***சீவகசிந்தாமணி,*** *பா.3119.*

*336.* கோவை.இளஞ்சேரன், **இலக்கியம் ஓர் பூக்காடு,** *ப.245.*

*337.* ச.வே.சுப்பிரமணியன், **தமிழர் வாழ்வில் தாவரம்**, *ப.73.*

*338.* கு.வெ.பாலசுப்பிரமணியன் *(உ.ஆ.),* **நற்றிணை,** *பா.370:7-9.*

*339.* இரா.செயபால் *(உ.ஆ.),* **அகநானூறு**, *பா.391:5.*

*340.* ஞா.மாணிக்கவாசகன் *(உ.ஆ.),* **சிலப்பதிகாரம்**, *பா.113.*

*341.* கு.வெ.பாலசுப்பிரமணியன் *(உ.ஆ.),* **நற்றிணை,** *பா.346:9-10.*

*342.* ச.வே.சுப்பிரமணியன், **தமிழர் வாழ்வில் தாவரம்**, *ப.72.*

*343.* இரா.செயபால் *(உ.ஆ.),* **அகநானூறு**, *பா.232:7-8.*

*344.* கா.கார்த்திக், **மண்ணின் மரங்கள்**, *ப.22.*

*345.* ச.வே.சுப்பிரமணியன், **தமிழர் வாழ்வில் தாவரம்**, *ப.70.*

*346.* மேலது., *ப.27.*

*347.* கு.வெ.பாலசுப்பிரமணியன் *(உ.ஆ.),* **நற்றிணை,** *பா.200:2.*

*348.* கு.வெ.பாலசுப்பிரமணியன் *(உ.ஆ.),* **புறநானூறு,** *பா.339:2-3.*

*349.* மேலது., *பா.70:14-15.*

*350.* வி.நாகராசன் *(உ.ஆ.),* **பட்டினப்பாலை,** *பா.65-66.*

*351.* இரா.மோகன் *(உ.ஆ.),* **பெரும்பாணாற்றுப்படை,** *பா.213-214.*

*352.* துரை.இராசாராம் *(உ.ஆ.),* ***சீவகசிந்தாமணி,*** *பா.1848.*

*353.* இரா.செயபால் *(உ.ஆ.),* **அகநானூறு,** *பா.86:15-16.*

*354.* இரா.மோகன் *(உ.ஆ.),* **முல்லைப்பாட்டு,** *பா.8-11.*

*355.* ஞா.மாணிக்கவாசகன் *(உ.ஆ.),* **சிலப்பதிகாரம்,** *பா.9:1-3.*

*356.* கோவை.இளஞ்சேரன், **இலக்கியம் ஓர் பூக்காடு,** *ப.135.*

*357.* ல.சண்முகசுந்தரம், **தமிழும் தாவரமும்,** *ப.37.*

*358.* மேலது., *ப.39.*

*359.* ச.வே.சுப்பிரமணியன், **தமிழர் வாழ்வில் தாவரம்,** *ப.66.*

*360.* இரா.மோகன் *(உ.ஆ.),* **பெரும்பாணாற்றுப்படை,** *பா.104-105.*

*361.* இரா.செயபால் *(உ.ஆ.),* **அகநானூறு,** *பா.196:5.*

*362.* கு.வெ.பாலசுப்பிரமணியன் *(உ.ஆ.),* **புறநானூறு,** *பா.168:13.*

*363.* கு.வெ.பாலசுப்பிரமணியன் *(உ.ஆ.),* **நற்றிணை,** *பா.66:8-9.*

364. துரை.தண்டபாணி (உ.ஆ.), **மணிமேகலை,** பா.17:30-31.

365. ச.வே.சுப்பிரமணியன், **தமிழர் வாழ்வில் தாவரம்,** ப.67.

366. கு.வி.கிருஷ்ணமூர்த்தி, **தமிழரும் தாவரமும்,** ப.227.

367. இரா.மோகன் (உ.ஆ.), **சிறுபாணாற்றுப்படை,** பா.137.

368. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு,** பா.399:6.

369. அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), **ஐங்குறுநூறு,** பா.208:12.

370. வி.நாகராசன் (உ.ஆ.), **மலைபடுகடாம்,** பா.343.

371. துரை.இராசாராம் (உ.ஆ.), **சீவகசிந்தாமணி,** பா.1565:1-2.

372. ஞா.மாணிக்கவாசகன் (உ.ஆ.), **திருக்குறள்,** 1031.

373. வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை,** பா.100:1.

374. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு,** பா.397:16.

375. இரா.மோகன் (உ.ஆ.), **பெரும்பாணாற்றுப்படை,** பா.142.

376. வி.நாகராசன் (உ.ஆ.), **மதுரைக்காஞ்சி,** பா.286-287.

377. இரா.மோகன் (உ.ஆ.), **பொருநராற்றுப்படை,** பா.246.

378. அ.ஆலிஸ் (உ.ஆ.), **பதிற்றுப்பத்து,** பா.32:13.

379. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு,** பா.35:5.

380. அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), **ஐங்குறுநூறு,** பா.27:1.

381. கதிர்முருகு (உ.ஆ.), **முக்கூடற்பள்ளு,** பா.108.

382. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை,** பா.89:4-5.

383. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு,** பா.393:5-6.

384. மேலது., பா.28:3-5.

## இயல் – 3

# சங்க இலக்கியச் சூழலியலில் விலங்குகள்

### 3.0. விலங்குகள்

சங்ககாலத் தமிழர் வாழ்வியலில் விலங்குகள் மிக நெருங்கிய உறவு கொண்டிருப்பதைச் சங்க இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன. நீர்வாழ் விலங்குகளும், நிலவாழ் விலங்குகளும், வளர்ப்பு விலங்குகளும், காட்டு விலங்குகளும், தமிழர்தம் வாழ்வியலின் அகச்சூழலியலிலும், புறச்சூழலியலிலும் பிணைந்துக் காணப்படுகின்றன. போர்க்களத்திலும், பயணத்திலும் மிக இன்றியமையாத இடத்தினை விலங்குகள் பெற்றுள்ளன. அக்காலச் சமூகச் சூழலியலில் விலங்குகள் மிக இன்றியமையாத உணவாகப் பயன்பட்டுள்ளன. வீடுகளில் விலங்குகளை வளர்க்கும் சூழலியலிலும், சடங்கு மற்றும் நம்பிக்கைகளில் விலங்குகள் இடம்பெறும் சூழலியலிலும் சங்க இலக்கியங்களில் பெரிதும் பதிவாகியுள்ளன. விலங்குகள் துணையின்றி எந்த நகர்வும் இல்லை என்பதான வாழ்வியல் சூழலியல் சங்க காலத்தில் நிலவியுள்ளது.

### 3.1. நீர் வாழ் விலங்கினங்கள்

கடல், ஏரி, குளம், நன்னீர் போன்ற நீர்நிலைகளில் உயிர் வாழ்கின்ற விலங்குகள் அனைத்தும் நீர்வாழ் விலங்கினங்கள் என்று அழைக்கப்படுகின்றன. சங்க இலக்கியம் பல்வேறு வகையான நீரில் வாழ்கின்ற உயிரினங்களைப் பதிவுச் செய்துள்ளது. அவற்றுள்,

1. பாம்பு
2. தவளை
3. நண்டு
4. நத்தை
5. நீர்நாய்
6. மீன் இனங்கள்
7. ஆமை
8. சங்குகள்

போன்றன இன்றியமையாத இடத்தைப் பெறுகின்றன.

## 3.2. நிலவாழ் விலங்கினங்கள்

*காடுகள், மலைகள், சதுப்பு நிலங்கள் போன்றவைகளில் உயிர் வாழ்கின்ற விலங்குகளை நிலவாழ் விலங்குகள் என்று அழைப்பர். சங்க இலக்கியங்களில் மிகுதியான விலங்குகள் நிலத்தில் வாழ்ந்தன என்பதற்கான பதிவுகள் காணப்படுகின்றன.*

1. *அணில்*
2. *குதிரை*
3. *யானை*
4. *சிங்கம்*
5. *புலி*
6. *பச்சோந்தி*
7. *கரடி*
8. *ஒட்டகம்*
9. *நரி*
10. *குள்ளநரி*
11. *பன்றி*
12. *முள்ளம்பன்றி*
13. *வெளவால்*
14. *முயல்*
15. *ஆடு*
16. *மாடு*
17. *கழுதை*
18. *எருமை*
19. *மான்*
20. *பூனை*
21. *நாய்*
22. *எருது*
23. *கீரிப்பிள்ளை*
24. *பல்லி*
25. *எலி*
26. *ஓணான்*

27. உடும்பு
28. செம்மறியாடு
29. கோவேறு கழுதை
30. ஆளி

போன்ற விலங்குகள் நிலத்தில் வாழும் தன்மையினைக் கொண்டதாகும்.

### 3.3. இருவாழ் விலங்கினங்கள்

நீரிலும் நிலத்திலும் வாழும் விலங்குகள் இருவாழ் உயிரினங்கள் என்று அழைக்கப்பட்டன.

1. முதலை
2. நண்டு
3. தவளை
4. பாம்பு

போன்றவை நீரிலும் நிலத்திலும் வாழ்கின்ற தகவமைப்பினைப் பெற்றுள்ளன.

### 3.4. மனைவாழ் விலங்கினங்கள்

சங்ககால மக்கள் தங்கள் வீடுகளில் விலங்குகளை வளர்த்துள்ளனர். இத்தகைய விலங்குகள் உழவுத்தொழிலுக்கும், பொருளாதாரத்திற்கும், வீட்டுப் பாதுகாப்பிற்கும் உதவிபுரிந்துள்ளன.

1. கழுதை
2. குதிரை
3. பன்றி
4. குரங்கு
5. பூனை
6. பசு
7. ஆநிரை
8. செம்மறியாடு
9. ஆடு
10. நாய்

*11. எருது*

*போன்ற விலங்குகளை வீட்டில் அக்கால மக்கள் வளர்த்துள்ளதைக் காணமுடிகிறது.*

### 3.5. போர்க்கள விலங்குகள்

*சங்க காலத் தமிழர்களுக்குக் காதலும் வீரமும் இரண்டு கண்களாக விளங்கின. சிறுவர்கள் முதல் பெரியவர்கள் வரை அனைவருக்கும் போர்ப்பயிற்சி அளிக்கப்பட்டது. போர்ச் செய்கின்ற சூழலில் யானை, குதிரை போன்ற விலங்குகளை மிகுதியாகக் கொண்டு போரிட்டு வெற்றி பெற்றனர்.*

### 3.5.1. யானை

*மன்னர்கள் யானைப்படை, குதிரைப்படை, காலாட்படை என்று மூன்று படைகளாகப் பிரித்துப் போர்ப் புரிந்த சூழலை அறியமுடிகிறது. யானைகள் போர்க்களத்தில் பெரும் பங்காற்றியுள்ளன.*

> மன்னர்களின் போரில் துணைநின்று உதவும் பொருட்டுக் காட்டில் உரிமையோடு திரியும் யானைகளைப் பிடித்துப் பழக்கி யானைப் படைப் பிரிவினை அமைத்தள்ளனர்[1]

*என்று க.ரத்னம் குறிப்பிடுகிறார்.*

*போர்க் களங்களில் யானைப் படையானது இன்றியமையாததாகக் காணப்படுகிறது.*

> நால்வகைப் படைகளில் ஏற்றமும் தோற்றமும் வாய்ந்தது யானைப்படை. செருக்களத்தில் வீறுகொண்டு வெம்போர் விளைவிப்பதும், மாற்றார்க்குரிய மாடமதில்களைத் தாக்கித் தகர்ப்பதும் யானைப்படையே[2]

*என்று யானைப்படையின் வலிமையை ரா.பி.சேதுப்பிள்ளை கூறுகிறார். யானையானது போர் புரிவதற்கு உதவிடும் முதன்மை விலங்காக அமைந்திட்ட சூழலியலை அறியமுடிகிறது.*

> கடும்பகட்டு யானை நெடுந்தேர்க் கோதை[3]

*என்று அகநானூறும்,*

கதிர் இலை வேற்காடு கடுமான் கிள்ளி

மதில்கொல் யானையின் கதழ்பு நெறிவந்த[4]

என்று ஐங்குறுநூறும்,

பெருங்கை யானை இரும்பிடர்த் தலை இருந்து[5]

என்று புறநானூறும்,

உடலின்மேல் பலகாயம் சொரிந்து பின்கால்

உடன்பதைப்ப உதிரத்தே ஒழுகும் யானை

உடலின் மேல் கலம் தொடரப் பின்னே செல்லும்[6]

என்று கலிங்கத்துப்பரணியும் போர்க்களத்தில் யானையின் செயல்பாடுகளைப் பட்டியலிடுகின்றன. போர்க்களத்தில் சேர, சோழ, பாண்டியர் மூவரும் யானைகளைக் கொண்டு போர்ப் புரிந்த போர்க்களச் சூழலைக் காணமுடிகிறது. யானைப்படை வீரர்கள் யார் என்பது பற்றி சாமி.சிதம்பரனார்,

யானையின் மேல் ஏறி ஊர்ந்து போர்ச் செய்யும் வீரர்களுக்கு யானை வீரர் என்று பெயர்[7]

என விளக்கம் தருகிறார். உடல் வலிமையான யானைகளைப் பிடித்து வந்து போர்முறைகள் பயிற்றுவித்துப் போர்க்களத்தில் வெற்றிகளை ஈட்டிய அக்கால மன்னர்களின் வீரச் சூழலியலைச் சங்க இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன.

### 3.5.2. குதிரை

பண்டைத் தமிழர்களின் போர் முறைகளில் யானைக்கு அடுத்ததாகக் கருதப்படுவது குதிரையாகும். குதிரை மிக விரைவாக ஓடும் திறன் கொண்ட விலங்காகும். அக்கால மன்னர்கள் தமது படைப்பிரிவில் மிகுதியான குதிரைகளைப் பயன்படுத்தி போர்ப் புரிந்தச் சூழலை அறியமுடிகிறது. இதனை,

கலி மா கடைஇ வந்து எம்சேரித்

தாரும் கண்ணியும் காட்டி ஒருமைய[8]

என்று நற்றிணையும்,

பரும இனமாக் கடவித் தெரிமறவர்[9]

என்று களவழி நாற்பது பாடல்களும் வெளிப்படுத்துகின்றன. போர்க்களச் சூழலில் குதிரைகளைக் கொண்டு பெரும்போர்ப் புரிந்த சூழலியலைக் காணமுடிகிறது.

> குதிரையின் மீதேறிச் செலுத்திப் போர்ப் புரியும் வீரர்களுக்கு இவுளிமறவர் என்று பெயர்[10]

என்று சாமி.சிதம்பரனார் குதிரை வீரர்களின் பெயரினைக் குறிப்பிடுகிறார்.

சங்ககாலத் தமிழ்ச் சமுதாயம் வீரயுகச் சமுதாயம் ஆகும். மன்னர்கள் போர்க்களத்தில் யானைகள், குதிரைகளைப் பெரும்படையாக அமைத்துப் போர்ப் புரிந்து வெற்றி பெற்றனர். யானைகளைக் கொண்டு மதில்களை அழிக்கவும், குதிரைகளைக் கொண்டு விரைவாகப் போர்ப் புரியவும் பயன்படுத்தி வெற்றி பெற்ற அக்கால மன்னர்களின் போர்க்களச் சூழலியலைச் சங்கப் பாடல்களின் வழியாக அறியமுடிகிறது.

## 3.6. தேர்களும் விலங்குகளும்

சங்க கால மக்கள் விலங்குகளோடு நெருங்கியத் தொடர்பினைக் கொண்டிருந்தனர். விலங்குகளைத் தங்கள் வீட்டில் வளர்த்தும், பேணியும் வந்தனர். தலைவன், மன்னன் போன்றவர்கள் தேர்களில் செல்வது அக்காலத்தில் மரபாகக் காணப்பட்டது. தலைவன் தலைவியை விட்டுப் பொருள் தேடச் செல்வதும், மன்னன் நகர்ப்புறத்தைப் பார்வையிடச் செல்வதும் தேர்களில்தான் என்று சங்க இலக்கியங்கள் காட்டுகின்றன. இத்தகையத் தேர்களில் குதிரைகள் இன்றியமையாததாக அமைந்துள்ளன.

### 3.6.1. தேர்களின் வகைகள்

மன்னர்கள் பயன்படுத்தும் தேர்களில் ஒன்று, நான்கு, ஏழு குதிரைகளைப் பூட்டிச் சென்றனர்.

> குதிரை என்றவுடன் அதன் வேகம் நம் நினைவுக்கு வந்த போதும் அதன் வேகம், போர்க்களம், தேரில் பூட்டுதல், அழகு என்ற பல்வேறு நிலைகளில் சங்க இலக்கியங்களில் பயன்படுத்தப்பட்டுள்ளன[11]

என்று குதிரையின் சிறப்பினை பா.வாணிஸ்ரீ குறிப்பிடுகிறார்.

ஓடு தேர் நுண் முகம் நுழைந்த மாவே[12]

*என்று நற்றிணையும்,*

புனல்பாய்ந் தன்ன வாம்மான் திண் தேர்க்

கணைகழிந் தன்ன நோன்கால் வண்பரி[13]

*என்று அகநானூறும்,*

எல்லை செல்ல ஏழ் ஊர்பு இறைஞ்சி[14]

*என்று குறிஞ்சிப்பாட்டும் குதிரைகள் தேரில் பயன்படுத்தப்பட்ட சூழலியல் தொடர்பினைத் தெரிவிக்கின்றன. "அரச குடும்ப இளைஞர்க்குக் குதிரைப் பயிற்சி ஓர் விருப்பக் கலை"[15] என்று ந.சுப்ரமண்யன் குறிப்பிடுகிறார். குதிரையேற்றம் அக்காலத்தில் வீரத்தின் அடையாளமாக அமைந்திருந்தது.*

*மனித வாழ்வியலில் தேரில் குதிரைகள் பூட்டப்பட்ட சூழலியலைக் காணமுடிகிறது. விலங்குகளில் மிக விரைவாக ஓடுகின்ற விலங்காகக் குதிரை அமைந்துள்ளது. தமிழர்தம் வாழ்வியல் சூழலில் போர்க்களத்திலும், பொருள் தேடவும் குதிரைகள் பயன்படுத்தப்பட்டதைச் சங்க இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன. அக்காலத்தின் நிகழ்ச்சியாக இன்றும் குதிரை வண்டிகளையும், குதிரை சவாரியையும், குதிரைப் பயணத்தையும் தமிழ்ச் சமூகத்தில் நாம் காணமுடிகிறது.*

### 3.7. மன்னர் கொடிகளில் விலங்குகள்

*சங்க கால மக்களின் ஆட்சிமுறையானது மன்னர் ஆட்சி முறையாகும். மன்னன் மக்களுக்குத் தலைவனாகத் திகழ்வான். அத்தகைய மன்னர்களில் சேரர், சோழர், பாண்டியர் மூவேந்தர்களாக அழைக்கப்பட்டனர். சிற்றரசர்களும் வாழ்ந்துள்ளனர். மூவேந்தர்களில் சேரனுக்கு வில்லும், சோழனுக்குப் புலியும், பாண்டியனுக்கு மீனும் பொறிக்கப்பட்ட கொடிகள் இருந்துள்ளன.*

*மன்னர்களின் கொடிகளில் இடம்பெறும் விலங்குகளாகப் புலி, மீன் காணப்படுகின்றன.*

சோழர்கள் ஆண்ட நிலப்பகுதி முன்னாளிற் காடாய் இருந்தமையால்

அங்குள்ள புலி முதலிய விலங்குகளை வேட்டையாற் கொன்று போக்கிக்

> காடு கெடுத்து நாடாக்கினார்கள். வலிமை மிக்க புலிகளை வென்று மக்களுக்கு நலஞ்செய்த சோழர்களின் வெற்றி வன்மைக்கு அறிகுறியாகப் புலி எழுதிய கொடி அவ்வேந்தருக்கு அடையாளமாயிற்று[16]

*என்று க.வெள்ளைவாரணன் புலியைத் தேர்ந்தெடுத்ததற்கான காரணத்தைக் குறிப்பிடுகிறார்.*

*பாண்டிய மன்னர்களின் சின்னம் மீன் ஆகும்.*

> மீன் தன் கண்களால் நோக்கித் தன் குஞ்சுகளை வளர்க்குமாறு போலத் தம் குடிகளைக் கண்ணிமையாது நோக்கி நின்று கடற்கோளிற் காப்பாற்றிய பாண்டியர்க்குக் கயல்மீன் எழுதிய கொடி அடையாளமாயிற்று[17]

*என்று மீன்களைத் தேர்ந்தெடுத்ததற்கான காரணத்தை க.வெள்ளைவாரணன் கூறுகிறார். மீன் சின்னத்தின் சிறப்பை,*

> கோண்மாக் குயின்ற சேன் விளங்கு தொடு பொறி
> நெடுநீர்க் கெண்டையொடு பொறித்த
> குடுமிய ஆக, பிறர்குன்று கெழுநாடே[18]

*என்று புறநானூறும்,*

> பருப்பதத்துக் கயல் பொறித்த பாண்டியர் குலபதி[19]

*என்று பெரியாழ்வார் திருமொழி பாடலும் தெரிவிக்கின்றன. வெற்றி பெற்ற மன்னனின் இக்கொடிகள் அவர்தம் வெற்றியின் அடையாளமாகப் பறக்கவிடப்பட்டன.*

*பண்டைத் தமிழ்ச் சமுதாயம் தங்களுக்கு என்று ஓர் அடையாளத்தைக் கொண்டு வாழ்ந்துள்ளது. புலி, கயல்மீன் போன்ற விலங்குகள் இடம்பெற்ற வாழ்வியல் சூழலியலை அறியமுடிகிறது. மன்னர்கள் வீரத்தின் குறியீடாகப் புலியும் மீனும் இடம்பெற்றிருந்த சங்க காலத்தைச் சங்க இலக்கியங்கள் வெகுவாக எடுத்துக்காட்டுகின்றன.*

### 3.8. வேளாண் தொழில்களில் விலங்குகள்

*பண்டைத் தமிழர்களின் உழவுத் தொழிலிலும் பொருளாதார வளர்ச்சியிலும் விலங்குகளின் பங்களிப்பு மிகுதியானதாகும். வேளாண்மைத் தொழிலுக்குப் பயன்படுத்தப்பட்ட விலங்குகள் அனைத்தும் வீட்டில் வளர்க்கப்பட்ட விலங்குகளே ஆகும். பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தமிழர்கள் வேளாண்மை செய்து வந்துள்ளனர். வேள் என்னும் சொல்லின் அடியாகப் பிறந்ததே வேளாண்மை ஆகும்.*

*சங்க இலக்கியத்தில் மாடுகள் (நற்.60; 80; 315; 330; 340; குறுந்.181; 322; 358; 388; ஐங்.3; 87; பதி.58; பரி.3; அகம்.17; 30; 37; 41; 159; 173; 191; 194; 310; 314; 366; 393; பெரும்.65; 197; 238; மதுரை.94; நெடுநல்.4), குதிரைகள் (நற்.254), கோவேறு கழுதைகள் (நற்.278; பரி.10), கழுதைகள் (அகம்.89; 343), ஆடுகள் (நற்.169; 321; அகம்.274; நெடுநல்.4), செம்மறியாடு (குறுந்.221), நாய்கள் (நற்.82; 285) போன்ற விலங்குகள் வேளாண் நிலங்களில் உழுது சாகுபடி செய்யவும், பயிர்களை அறுவடை செய்யவும், உற்பத்திப் பொருளைச் சந்தைக்குக் கொண்டு செல்லவும் பயன்படுத்தப்பட்ட சூழலியல் சங்கிலியைக் காணமுடிகிறது.*

### 3.8.1. உழவுத்தொழில்

*மனித சமுதாயத்தின் அடிப்படைத் தேவைகளில் ஒன்றான உணவைத் தருவது உழவுத்தொழிலாகும். பழந்தமிழர்கள் பண்டைக் காலத்தில் உழவர்களாகவும், இடையர்களாகவும் வாழ்ந்து உழவுத்தொழிலைச் செய்து வந்தனர். நிலத்தை உழுவதற்கு எருது, எருமை, காளை போன்ற விலங்குகள் பயன்பட்டன.*

> பண்டைக் காலம் முதல் எருமை வளர்ப்பும் நம் நாட்டில் இருந்து வந்துள்ளது. பாலுக்காகப் பசுக்கள் மட்டுமின்றி எருமைகளும் பெருமளவில் வளர்க்கப்பட்டுள்ளன. அத்துடன் வேளாண்மைப் பணிகளுக்கும் எருமைகள் பயன்படுத்தப்பட்டன[20]

*என்று இரா.வசந்தகுமார் உழவுத்தொழிலுக்கு எருமைகளும் பயன்படுத்தப் பட்டதைக் குறிப்பிடுகிறார்.*

உழவுக்கும் தொழிலுக்கும் வந்தனை செய்வோம் - வீணில்

உண்டு களித்திருப்போரை நிந்தனை செய்வோம்[21]

*என்று பாரதியார் உழவுத்தொழிலைப் போற்றுகிறார்.*

இரு மருப்பு எருமை ஈன்றணிக் காரான்

உழவன் யாத்த குழவியின் அகலாது[22]

*என்று குறுந்தொகையும்,*

அதரி கொள்பவர் பகடு பூண் தெள்மணி[23]

*என்று மதுரைக்காஞ்சியும்,*

அருந்தொழில் ஆற்றும் பகடும் திருந்திய[24]

*என்று திரிகடுகமும் உழவுத்தொழிலைத் தெரிவிக்கின்றன. மக்கள் எருது, எருமை போன்ற விலங்குகளைப் பயன்படுத்தி உழவுத்தொழில் செய்த சூழலியல் தொடர்பை அறியமுடிகிறது.*

> உழைப்பிற்குப் பயன்படுத்தப்பட்ட எருதுகள் சுமை தூக்கவும், வண்டி இழுக்கவும், உழவுத் தொழிலை மேற்கொள்ளவும் தேர்வு செய்யப்பட்டன[25]

*என்று இரா.வசந்தகுமார் எருது உழவுக்குப் பல்லாற்றானும் பயன்படுத்தப்பட்டச் சூழலைக் குறிப்பிடுகிறார்.*

### 3.8.2. போர் அடித்தல்

*சங்க காலத்தில் அறுவடைச் செய்கின்ற நெல், தினை, வரகு போன்றவைகளின் தானியங்களைப் பிரிப்பதைக் கதிர் அடித்தல் என்று அழைத்தனர். இயந்திரமற்ற அக்கால உழவுத்தொழிலில் நெற்கட்டுகளைப் பிரித்து நெல்மணிகளை மேல்நோக்கி இருக்குமாறு களத்தில் வட்டவடிவில் அடுக்குவர். அதன்மீது இரண்டு அல்லது மூன்று இணை எருதுகளைக் கொண்டு மிதிக்க வைப்பர். பிறகு வைக்கோல் தனியாகவும் நெல் தனியாகவும் பிரிக்கப்படும். முறத்தால் காற்றில் தூவி பதறு இல்லாத நெல்லை வீட்டிற்குக் கொண்டு சேர்ப்பது அக்கால மக்களின் வாழ்வியல் மரபாகும். இத்தகைய நிகழ்வில் போர் அடித்தல் என்ற நெல்லைப் பிரிப்பது இன்றியமையாத ஒன்றாகும். இதனை,*

வேங்கைக் கண்ணியர் எருது எறி களமர்

நிலம் கண்டன்ன அகன் கண் பாசறை

மென் தினை நெடும் போர் புரிமார்[26]

என்று நற்றிணையும்,

பரூஉப் பகடு உதிர்த்த மென் செந் நெல்லின்

அம்பன அளவை உறை குவித்தாங்கு[27]

என்று பதிற்றுப்பத்தும்,

எருது களிறு ஆக வாள்மடல் ஓச்சி

அதரி திரித்த ஆள்உகு கடாவின்[28]

என்று புறநானூறும்,

காந்தள் துடுப்பின் கமழ்மடல் ஓச்சி

வண்கோட் பலவின் சுளைவிளை தீம்பழம்

உண்டுபடு மிச்சில் காழ் பயன் கொண்மார்

கன்று அடாஅ உறுக்கும் மகாஅர் ஓதை[29]

என்று மலைபடுகடாமும் புலப்படுத்துகின்றன.

தினை, நெல், பலாச்சுளையின் விதைகளைப் பிரித்தெடுக்க எருது, எருமை, யானை, பசுங்கன்று போன்ற விலங்குகளைப் பயன்படுத்தி போர் அடித்த வேளாண் சூழலியலைச் சங்க இலக்கியங்கள் வெகுவாகப் பதிவு செய்துள்ளன.

### 3.8.3. வாணிபம்

பண்டைத் தமிழர்கள் வாணிபம், பண்டமாற்று முறைகளில் சிறப்புற்றுத் திகழ்ந்தார்கள். வாணிபம் செய்யும் மக்கள் வணிகர் என்று அழைக்கப்பட்டனர். வாணிபம் செய்வதற்குக் கழுதை, எருமை, எருது போன்ற விலங்குகள் துணைபுரிந்துள்ளன. வணிகர் வாணிகப் பொருள்களை ஊர் ஊராகக் கொண்டு செல்வதற்குக் கழுதைகளைப் பயன்படுத்தினர்.

பாறைகளும் குன்றுகளும் உள்ள இடங்களுக்குச் செல்ல கழுதைகள் பெரிதும் பயன்பட்டன (அகம்.207).

பொருள்கள் எல்லாம் ஒரே இடத்தில் உற்பத்தியாவதில்லை. வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு பொருள்கள் உற்பத்தியானபடியால், அப்பொருள்களை எல்லாம் ஓரிடத்தில் கொண்டு வந்து சேர்ப்பதற்கு வாணிகர் கால்நடைகளையும் வண்டிகளையும் பயன்படுத்தினார்கள்[30]

என்றும்,

தமிழகத்திலும் உப்பு செய் பொருளாகவும் வாணிகப் பொருளாகவும் உணவுப் பொருளாகவும் இருந்து வருகின்றது[31]

என்றும் மயிலை சீனி.வேங்கடசாமி தமிழக வணிகத்தைக் குறிப்பிடுகிறார். இதனை,

உப்பு ஒய் உமணர் அருந்துறை போக்கும்
ஒழுகை நோன் பகடு ஒப்பக் குழீஇ[32]

என்றும்,

பொறை மலிகழுதை நெடுநிரை தழீஇய[33]

என்றும் அகநானூற்றுப் பாடல்கள் வெளிப்படுத்துகின்றன. சங்ககால மக்களின் வாணிபச் செயல்பாடுகளில் விலங்குகளின் பங்கு உயரியதாகும். எருமை, எருது, கழுதை போன்ற விலங்குகள் தானிய வகைகளையும், உப்புகளையும் ஏற்றிச் செல்வதற்கு துணைப்புரிந்த சூழலியல் தொடர்பைக் காணமுடிகிறது.

மனிதர்களுக்கு வேலைக்கு என்று பழக்கப்படுத்தப்பட்ட விலங்குகளில் கழுதையும் ஒன்று. சுமை தூக்கிச் செல்ல கழுதைகள் பெரிதும் சங்க காலந்தொட்டே பயன்படுத்தப்பட்டு வந்துள்ளன[34]

என்று வாணிபத்திற்கும் கழுதைக்கும் இடையேயுள்ள தொடர்பினை இரா.வசந்தகுமார் குறிப்பிடுகிறார். கழுதைகள் உதவியோடு வாணிபத்தில் ஈடுபட்ட அக்காலத் தமிழர்கள் வளமான வாழ்வியல் சூழலியலோடு வாழ்ந்ததைச் சங்க இலக்கியங்கள் தெரிவிக்கின்றன.

சங்க கால மக்கள் வாழ்வியலில் வேளாண்மை முதன்மையானதாகக் கருதப்பட்டதை அறியமுடிகிறது. உழவுத் தொழிலின் சிறப்பினை அறிந்த மக்கள் எருது, எருமை போன்ற விலங்குகளைப் பயன்படுத்தி உழுது, போர் அடித்துச் செல்வச் செழிப்புடன் வாழ்ந்த சூழலியலையும் கழுதை சுமை தூக்குவதற்கும், வாணிபத்திற்கும் முதன்மையாகவும் பயன்பட்டதையும் சங்க இலக்கியங்கள் தெளிவுறுத்துகின்றன.

### 3.9. உணவுகளில் விலங்குகள்

*மனிதர்களின் வாழ்வியலில் அடிப்படைத் தேவைகளில் முதன்மையானது உணவாகும். உணவானது தாவரங்களைச் சார்ந்தும், விலங்குகளைச் சார்ந்தும் சைவம், அசைவம் எனப் பாகுபடுத்தினர். விலங்குகளின் தசைகளை உணவாக உட்கொண்ட சூழலியலைச் சங்க கால மக்கள் வாழ்வில் உணரமுடிகிறது. தமிழர்கள் வேட்டையாடி கொண்டு வந்த இறைச்சியினைக் குடும்பத்தாருடன் உண்டு மகிழ்ந்ததைச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன.*

*உயிர் வாழ உணவு தேவை என்பதை அக்காலத் தமிழ்ச் சமூகத்தினர் நன்கு அறிந்திருந்தனர். போர்ச் செய்யவும், வேட்டையாடவும், வேளாண்மைத் தொழில் செய்யவும் உடலுக்கு வலுவினைச் சேர்க்கவும் மாமிச உணவையே உண்டனர்.*

> வாழ்க்கையின் முதல் தேவை உணவாதலின் உழவு, மீன் பிடித்தல், வேட்டையாடுதல் என்பன பெரும் சமூக நடவடிக்கைகளாயின[35]

*என்று அசைவ உணவின் பயன்பாட்டினை ந.சுப்ரமணியன் குறிப்பிடுகிறார்.*

*சங்க காலத்தில் மன்னரைத் தேடி வருகின்ற அனைவருக்கும் உணவு வழங்கப்பட்டது. அவர்களின் உணவு முறைகளில் இறைச்சி உணவே மிகுதியாகக் காணப்படுகிறது.*

> தன்னைத் தேடி வரும் புலவர்க்கும், பாணருக்கும் மற்ற கலைஞர்களுக்கும் கள்ளும் இறைச்சி கலந்த உணவும் ஒரு மன்னன் அளிப்பது பெருமையாகக் கருதப்பட்டது. தினந்தோறும் ஊன் சோறு அளித்த வள்ளலை நன்றியுடன் பாராட்டும் வழக்கமும் இருந்தது[36]

*என்று மன்னர்களைத் தேடி வருகின்றவர்களுக்கு விருந்து உபசரிப்புச் செய்ததை இரா.வசந்தகுமார் குறிப்பிடுகிறார்.*

*சங்ககாலத் தமிழர் உணவு முறைகளில் மீன்கள் (நற்.45; 60; 311; ஐங்.48; 180; அகம்.20; 60; 80; 236; 261; 290; புறம்.52; 212; 320; 384; சிறுபாண்.163; பெரும்.100; 282; பட்டினப்.63; 176; மலைபடு.465), ஆடு (நற்.83; 322; குறுந்.263; 362; பதி.12; பரி.17; அகம்.242; புறம்.364; 366; 395; திருமுருகு.232; பெரும்.143),*

*எலி (நற்.83; புறம்.322; 324), பன்றிகள் (நற்.75; 285; ஐங்.364; புறம்.177; பெரும்.344; மதுரை.295; மலைபடு.153; 176), முயல் (நற்.59; ஐங்.421; புறம்.34; 319; 396; பெரும்.115), ஆநிரை (புறம்.224), செம்மறியாடு (அகம்.35; 292; 394; புறம்.33; 96; 113; பொருநர்.103; மதுரை.754), யாமை (ஐங்.81; புறம்.212), யானை (அகம்.169), மான் (அகம்.284; புறம்.33; 152; 168; 398), உடும்பு (புறம்.325; 326; பெரும்.132; மலைபடு.177), நண்டு (சிறுபாண்.195; பெரும்.167), நத்தை (நற்.280) ஆகியன பெரிதும் இடம்பெற்றுள்ளன. இதனை,*

நினைச் சுறா அறுத்த உணக்கல் வேண்டி[37]

*என்று நற்றிணையும்,*

வராஅல் சொரிந்த வட்டியுள் மனையோள்
யாண்டுகழி வெண்ணெல் நிறைக்கும் ஊர[38]

*என்று ஐங்குறுநூறும்,*

வாராது அட்ட வாடுஊன் புழுக்கல்[39]

*என்று பெரும்பாணாற்றுப்படையும்,*

கடும்புலால் வெண்மணல் கானலுறு மீன்கண்
படும்புலால் பார்த்தும் பகர்தும்[40]

*என்று திணைமாலை நூற்றைம்பதும் குறிப்பிடுகின்றன. மக்கள் பல்வேறு வகையான இறால், சுறா, வராஅல், கொழுமீன் போன்ற மீன் வகைகளையும் உண்டு வாழ்ந்த சூழலியலைச் சங்கப் பாடல்கள் வாயிலாக அறியமுடிகிறது.*

*பழந்தமிழர்கள் சுறாமீன்களை வேட்டையாடுவதிலும் உணவாக உண்பதிலும் பெரிதும் ஆர்வம் உடையவர்களாக விளங்கியுள்ளனர்.*

குருகு உடைத்து உண்ட வெள்அகட்டு யாமை
அரிப் பறை வினைஞர் அல்கு மிசைக்கூட்டும்[41]

*என்று ஐங்குறுநூறும்,*

புலி தொலைத்து உண்ட பெருங்களிற்று ஒழிஊன்
கலிகெழு மறவர் காழ்க்கோத்து ஒழிந்ததை
ஞெலிகோற் சிறுதீ மாட்டி ஒலிதிரைக்
கடல்விளை அமிழ்தின் கணம்சால் உமணர்
சுனைகொள் தீம்நீர்ச் சோற்று உலைக்கூட்டும்[42]

*என்று அகநானூறும்,*

. . .  . . .  . . . வேட்டுவன்

மான் தசை சொரிந்த வட்டியும்[43]

*என்று புறநானூறும், புலால் உணவினை வேட்டையாடி சமைத்துண்டதைத் தெரிவிக்கின்றன. அக்கால மக்கள் ஆமை, யானை, மான் ஆகியவற்றின் இறைச்சியினை உண்டு வாழ்ந்ததையும் காணமுடிகிறது.*

கொம்பன் யானையைக் கொல்வோம்

அதன் இறைச்சியை உண்டோம்

யானையின் உடலில் புகுவோம்

அதன் இதயத்தையும் கல்லீரலையும் ருசிப்போம்[44]

*என்று மத்திய ஆப்பிரிக்காவில் சாரி ஆற்றின் கரையில் வாழும் படகோட்டிகள் யானையினை உணவாக உண்டு வாழ்ந்து வந்ததை ஓ.ஹென்றி பிரான்சிஸ் கூறுகிறார். மேலும் ஆமையிறைச்சி பற்றி,*

ஏழுவகைக் கடலாமை இனங்களில் பேராமை, சிற்றாமை, அலுங்காமை ஆகியவை வாணிகத்திற்காகக் கொல்லப்படுகின்றன. பேராமையின் மாமிசம் உணவிற்குப் பயன்படுகின்றது. அதன் வயிற்றுப் பக்கத்திலும் கழுத்திலும் இருக்கும். குறுத்தெலும்புகள் வால் பாகத்தில் இருக்கும் எலும்புகள் யாவும் ஆமை சூப் செய்வதற்கு மிகவும் பயன்படுகின்றன. சிற்றாமைகள் அவற்றின் தோல், மாமிசம், கொழுப்பு ஆகிய மூன்று பொருள்களுக்காகப் பிடிக்கப்படுகின்றன. அவற்றின் மேல் உள்ள முட்கள் போன்ற ஓடுகள் பல்வேறு நிறங்களுடனும் கடினமாகவும் இருப்பதால் சிற்றாமைகள் அதிகமாக விரும்புகிறார்கள். அலுங்காமையினுடைய மேல் ஓடு அதிக விலை உயர்ந்ததாகும்[45]

*என்று அ.அப்துல் ரகுமான் குறிப்பிடுகின்றார்.*

*சங்க கால மக்கள் தங்கள் இருப்பிடத்திற்கு ஏற்றவாறும், நிலத்திற்கு ஏற்றவாறும் உணவு முறைகளைப் பின்பற்றினர். அந்தந்த நிலத்தில் வாழும் விலங்குகளை வேட்டையாடி உண்டு வந்ததையும் அறியமுடிகிறது. காட்டில் வாழும் மக்களும், போர்த் தொழில் செய்யும் வீரர்களும் உடலுக்கு வலுச் சேர்க்க மாமிச உணவினை விரும்பி உண்டதை அறியமுடிகிறது. மன்னர்களைத் தேடி வருகின்றவருக்கும் அவர்களின் பற்கள் தேயும் அளவிற்கு மாமிச உணவு கொடுக்கப்பட்டதையும் காணமுடிகிறது. மக்களுக்கும்*

*உணவிற்கான விலங்குகளுக்கும் தொடர்பு பரந்துபட்டதாகக் காணப்படுகிறது. அக்காலத் தமிழ்ச் சமுதாயம் இறைச்சி உணவினை உண்டு வாழ்ந்த உணவுச் சூழலியலைச் சங்கப் பாடல்களின்வழி தெள்ளிதின் அறிந்துகொள்ள முடிகிறது.*

## 3.10. விலங்குகளின் உறுப்புகள் பயன்பாடுகள்

*பண்டைத் தமிழ்ச் சமூகம் வீரம் விளைந்ததாக விளங்குகின்றது. விலங்குகளை வேட்டையாடியும், கொன்றும் அவற்றின் உறுப்புகளை மக்கள் தங்கள் அன்றாடத் தேவைக்குப் புழங்குப் பொருளாகப் பயன்படுத்தினர். அக்காலத் தமிழர்கள் விலங்குகளை வேட்டையாடி அவற்றின் உறுப்புகளாகிய தோல், தந்தம், கொம்பு போன்றவற்றைக் கொண்டு கட்டில் (பதி.79; நெடுநல்.117), படுக்கையறை (அகம்.58; பெரும்.89; மதுரை.310), கவசம் (புறம்.13), கருவிகள் வைக்கும் உறைகள் (பதி.19; 24), உலக்கை (கலி.41; 42), புலிப்பல் தாலி (நற்.161; அகம்.7), ஊஞ்சல் (கலி.131), பரண் (நற்.351; குறுந்.333), வேட்டைக் கருவிகள் (அகம்.282), துலாக்கோல் (புறம்.39), விலங்கு தோலில் பரிசளித்தல் (புறம்.374) போன்றவற்றைச் செய்து வாழ்ந்தனர்.*

### 3.10.1. யானை

*சங்க கால மக்கள் யானையின் தந்தத்தை விற்றும், அந்த தந்தத்தை வைத்துப் பல்வேறு பொருள்கள் செய்தும் வந்தனர். இதனை,*

கடுங்கண் வேழத்துக் கோடு நொடுத்து உண்ணும்[46]

*என்று குறுந்தொகையும்,*

.... .... .... வயக்களிற்றுக்
கோடு உலக்கையாக நல்சேம்பின் இலைசுளாகா[47]

*என்று கலித்தொகையும்,*

யானை வால் மருப்பு எறிந்த வெண்கடைக்
கோல் நிறை துலாஅம் புக்கோன் மருக[48]

*என்று புறநானூறும்,*

கோட்டின் செய்த கொடுஞ்சி நெடுந்தேர்[49]

*என்று பொருநராற்றுப்படையும்,*

பொருது ஒழி நாகம் ஒழி எயிறு அருகு எறிந்து

சீரும் செம்மையும் ஒப்ப[50]

*என்று நெடுநல்வாடையும்,*

புதுவது புனைந்த வெண்கை யாப்பு அமைத்து[51]

*என்று மலைபடுகடாமும் கூறுகின்றன. யானையினை வேட்டையாடி அதன் தந்தத்தை விற்கவும், வட்டக்கட்டில், துலாக்கோல், பேரியாழ், கொடிஞ்சி, உலக்கை செய்தும் வாழ்ந்த சூழலியலையும் காணமுடிகிறது.*

### 3.10.2. புலி

*விலங்கினங்களில் வீரத்திற்கு எடுத்துக்காட்டாகக் குறிப்பிடுவது புலியாகும்.*

> காட்டு விலங்குகளில் கொடியதாகக் கருதப்படுவது புலி. எதிர்ப்படும் எல்லா விலங்குகளையும் அடித்துக் கொல்லும் கொடிய குணம் கொண்ட புலி மலைப் பகுதிகளிலும் காட்டுப் பகுதிகளிலும் பண்டைக் காலத்தில் அதிக எண்ணிக்கையில் இருந்துள்ளன. அவற்றின் வலிமை கண்டு வியந்த மக்கள் இலக்கியத்தில் வீரத்திற்கு எடுத்துக்காட்டாகப் புலியைக் குறிப்பிட்டனர்[52]

*என்று புலியின் வலிமையை இரா.வசந்தகுமார் கூறுகிறார். புலியின் உறுப்புகளை மக்கள் பயன்படுத்திய நிலையை,*

புலிப்பற் தாலிப் புதல்வற் புல்லி[53]

*என்று குறுந்தொகையும்,*

மறங்கொள் வயப்புலி வாய்பிளந்து பெற்ற

மாலை வெண்பல் தாலி[54]

*என்று சிலப்பதிகாரமும்,*

திண்பிணி எஃகம் புலிஉறை கழிப்ப[55]

*என்று பதிற்றுப்பத்தும்,*

வரிஅதள் படுத்த சேக்கை தெரிஇழைத்[56]

*என்று அகநானூறும்,*

புலிநிறக் கவசம் பூம் பொறி சிதைய[57]

*என்றும்,*

இருங்கேழ் வயப்புலி வரிஅதட் குவைஇ[58]

என்று புறநானூற்றுப் பாடல்களும் தெரிவிக்கின்றன. புலியினை வேட்டையாடி அதன் தோலை உடலுக்குக் கவசமாகவும், பரிசுப் பொருள் அளிப்பதற்காகவும், புலிப்பல் தாலியாகவும், வாள் வைக்கும் உறையாகவும், படுக்கையறையாகவும் செய்து வாழ்ந்த மக்கள் வாழ்வியலை அறியமுடிகிறது. புலியின் உறுப்புகளோடு வாழ்ந்ததால் தங்களுக்கும் வீர உணர்வு ஏற்படும் என்ற நம்பிக்கையினால் புலியின் பொருள்களோடு ஒன்றிணைந்து வாழ்ந்த அக்காலத் தமிழர்தம் சூழலியலைத் தெள்ளிதின் உணரமுடிகிறது.

### 3.10.3. மான்

சங்க காலத்தில் புலித்தோலைப் படுக்கையறைக்குப் பயன்படுத்தியதைப் போல் மான் தோலையும் பயன்படுத்தியதை அறியமுடிகிறது. இதனை,

மான் தோல் பள்ளி மகவொடு முடங்கி[59]

என்று பெரும்பாணாற்றுப்படையும்,

மான் தோற் சிறுபறை கறங்கக் கல்லென[60]

என்று மலைபடுகடாம் பாடலும் கூறுகின்றன. வேட்டையாடிய மானின் தோலைச் சிறிய பறையினை மூடி வைக்கும் உறையாகவும், குறவர்கள் படுத்துறங்கும் படுக்கை விரிப்பாகவும் பயன்படுத்திய வாழ்வியல் சூழலைக் காணமுடிகிறது.

### 3.10.4. சுறா

மீனவர்களின் வாழ்வியல் களமாகக் கடற்கரை அமைந்துள்ளது. இரவுப் பொழுதில் பல்வேறு வகையான மீன்களை வேட்டையாடி உணவாகப் பயன்படுத்தியும், பண்டமாற்று முறை செய்தும் சங்க கால மக்கள் வாழ்ந்து வந்தனர். இவர்கள் மிகப்பெரிய மீனாகக் கருதுவது சுறா மீனைத்தான். சுறா மீன்களை எறியுளி (குறுந்.304) கொண்டு வேட்டையாடுவர்.

மீன் பிடிக்கச் செல்லும் பரதவர் சுறா மீன்களைப் பிடிப்பதற்கு கூறிய உளியைச் செருகிய மூங்கிலைக் கயிற்றில் கட்டிப் பயன்படுத்துவர்[61]

என்று எறியுளிக்கு வி.நாகராசன் (உ.ஆ.) விளக்கமளிக்கிறார். இதன் கொம்பினை ஊஞ்சலாகப் பயன்படுத்தினர். இதனை,

எறிசுறா வான் மருப்புக் கோத்து நெறிசெய்த[62]

என்று கலித்தொகை தெரிவிக்கிறது. சுறா மீனின் கொம்பினைப் பலகையாகக் கொண்டு ஊஞ்சல் ஆடிய வாழ்வியல் சூழலையும் தெரிந்து கொள்ள முடிகிறது. சுறா மீன் கொம்புகள் (பட்டினப்.86) இறந்து பட்ட வீரனின் நினைவாக வழிபட்ட நிகழ்வைக் காணமுடிகிறது. தமிழர் வாழ்வில் சுறாமீன் வலிமையின் அடையாளமாகவும், உயர் வீரத்தின் வெளிப்பாடாகவும் இருந்த சூழலியலை அறியமுடிகிறது.

### 3.10.5. சங்கு

கடல்வாழ் உயிரினங்களில் இன்றியமையாததாக ஒன்று சங்கு ஆகும். சங்கு இடம்புரிச் சங்கு, வலம்புரிச் சங்கு என இரண்டு வகையாகப் பிரிக்கப் படுகிறது. பரதவர்கள் குடும்பத்தில் வாழ்ந்த மக்கள் சங்குகளைப் பிடித்து வளையலாக உருமாற்றம் செய்து அணிந்து மகிழ்ந்தனர். இதனை,

> வலம்புரி மூழ்கிய வான் திமிற் பரதவற்
> ஒலி தலைப் பணிலம் ஆர்ப்ப கல்லென[63]

என்று அகநானூற்றுப் பாடல் தெரிவிக்கின்றது. கடற்கரையில் பரதவர்களின் மகளிர் சங்குகளை அறுத்து வளையாக கைகளில் அணிந்ததை அகநானூறு படம்பிடிக்கிறது.

> சங்குகளில் இடம்புரிச் சங்கு என்றும் வலம்புரிச் சங்கு என்றும் இருவகையுண்டு. வலம்புரிச் சங்கு கிடைப்பது அருமை. ஆகையால் வலம்புரிச் சங்குக்கு விலையதிகம். சங்குகளை வளைகளாக அறுத்து வளையல் செய்தார்கள். அக்காலத்துத் தமிழ் மகளிர் எல்லோரும் சங்கு வளைகளைக் கையில் அணிந்தார்கள்[64]

என்று மயிலை சீனி.வேங்கடசாமி சங்கு வளையல்களின் சிறப்புகளைக் குறிப்பிடுகின்றார்.

மனித வாழ்வியலில் விலங்கினங்களின் உறுப்புகள் பல்வேறு நிலைகளில் புழங்குப் பொருளாக இருந்தச் சூழலியலை அறியமுடிகிறது. யானையின் தந்தத்தைக் கொண்டு கட்டில், உலக்கை, துலாக்கோல், பேரியாழ், கொடிஞ்சி போன்றவைகளைச் செய்து வாழ்ந்த வீர உணர்வு வாழ்வை உணரமுடிகிறது. புலியினை வேட்டையாடி அதன் தோலை வீரத்தின் அடையாளமாகக் கருதியச் சூழலியலையும் காணமுடிகிறது. சுறா, மான், சங்கு

போன்றவற்றினை ஊஞ்சல், படுக்கை விரிப்பு, வளைகள் செய்து வாழ்ந்த வாழ்வியல் தொடர்பான சூழலியலைச் சங்க இலக்கியங்கள் பதிவு செய்துள்ளன.

### 3.11. காதல் உணர்வில் விலங்கினங்கள்

சங்ககால மக்களிடம் காதலும் வீரமும் உண்மையானதாகக் காணப்பட்டன. தலைவன் தலைவியின் அகவாழ்க்கைத் தும்பை மலரைப் போல தூய்மையானதாக இருந்தது. காதலித்த பெண்ணையே மணம் செய்து கொள்ளும் மரபு சங்க காலத்தில் இருந்துள்ளது. தலைவன் தலைவியரது காதல் வாழ்க்கையானது களவில் தொடங்கி கற்பு வாழ்க்கையில் நிறைவடைகிறது. தலைவன் தலைவியை விட்டுப் பொருள் தேட செல்லுகின்ற வழிகளின் இயற்கை நிகழ்வுகள், தாவரங்கள், விலங்குகள், பறவைகள் போன்றவை ஏற்படுத்துகின்ற நிகழ்வுகளானது தலைவனுக்குத் தலைவியின் நினைவுகளை வெளிக்கொணர்வதாக அமைந்துள்ளன.

> ஐந்தறிவு விலங்குகளின் இயல்புகள் ஆறறிவுள்ள மனிதர்களின் இயல்புகளோடு ஒப்பிட்டுக் கூறுவதையே சங்ககாலப் புலவர்கள் மரபாகக் கொண்டிருக்கிறார்கள் என்பதைவிட கொள்கையாகக் கொண்டு திகழ்கிறார்கள்[65]

என்று விலங்குகளோடு ஒப்பிடுகின்ற அன்பின் நிகழ்வுகளை பா.வாணிஸ்ரீ குறிப்பிடுகிறார்.

> துடி அடிக் கயந்தலை கலக்கிய சின்னீரைப்
> பிடி ஊட்டி பின் உண்ணும் களிறு எனவும் உரைத்தனரே[66]

என்றும்,

> இன்நிழல் இன்மையான் வருந்திய மடப்பிணைக்குத்
> தன்நிழலைக் கொடுத்து அளிக்கும்கலை எனவும் உரைத்தனரே[67]

என்று கலித்தொகையும்,

> படு கடுங் களிற்றின் வருத்தம் சொலிய
> பிடி படி முறுக்கிய பெரு மரப்பூசல்[68]

என்று அகநானூற்றுப் பாடல்களும் தெரிவிக்கின்றன. ஆண் யானையானது பெண் யானையின் துன்பத்தைப் போக்க, தனது கன்றும் பெண் யானையும் நீர் அருந்திய பிறகே நீர் அருந்துகிறது. இத்தகைய நிகழ்வு தலைவனுக்குத்

தலைவியின் நினைவுகள் வர விரைவில் பொருள் தேடிக் கொண்டு வீட்டிற்கு செல்கின்ற மனநிலையை ஏற்படுத்தி நல்லதொரு இல்லற வாழ்வியல் சூழலுக்கு உதவிடுகிறது. ஆண் மான் பெண் மானின் வெப்பத்தால் ஏற்படுகின்ற துயரத்தைப் போக்குவதற்குத் தன் நிழலைத் தருகின்றது (கலி.11). ஆண் யானை தனது பெண் யானை குழியில் விழுந்தவுடன் மரக்கிளைகளை முறித்துப் படியாக அமைத்துப் பெண் யானை மேலே வருவதற்குப் பாதை அமைக்கின்றது (அகம்.10). தலைவன் விலங்குகளின் இயல்புகளைக் காணும்போது தலைவியின் நினைவுகளும் அவளைக் காண வேண்டும் என்ற உந்துதலும் ஏற்படுகின்ற சூழலியலை அறியமுடிகிறது.

> தலைவனின் தலைமைப் பண்புநிலை பெறுவதற்கும், தலைவியிடம் பாச உணர்வு பெருகுவதற்கும், குழந்தையிடம் அன்பு நிலை பெறுவதற்கும் விலங்குகள் அடிப்பொருள்களாகப் பயன்பட்டுள்ளன[69]

என்று பா.வாணிஸ்ரீ விலங்குகளின் இயல்பு மனித பாச உணர்வை மிகுதிப்படுத்துவதை எடுத்துரைக்கின்றார்.

மனித வாழ்வியலில் அன்பு ஒன்றே அனைவரையும் மனிதத் தன்மையோடு வாழச் செய்யும் காரணியாக அமைகிறது. உயிரோட்டமான அன்பினை விலங்குகள் மூலம் கண்டுணர்ந்து மக்களும், தங்களுடைய வாழ்வில் அன்பான சூழலை ஏற்படுத்திக் கொண்டனர். விலங்குகளுக்கிடையே ஏற்பட்ட அன்பின் பரிமாற்றங்கள் மனித வாழ்விற்கு அடித்தளமாக அமைந்த சூழலியலைக் கண்டுணர முடிகிறது.

### 3.12. விலங்குகளோடு பேசுதல்

மக்கள் தனிமையின் போது தங்களின் இன்ப, துன்ப நிகழ்வுகளை பறவைகளோடும், விலங்குகளோடும் பகிர்ந்து கொண்டு வாழ்ந்தனர். தலைவன் தலைவியை விட்டுப் பொருள் தேடச் சென்ற பின்பு தலைவியானவள் தனிமையின் பொழுதைக் கழிப்பதற்கு வீட்டில் வாழும் விலங்குகளில் ஒன்றாகப் பல்லியிடம் பேசுவது மரபாகக் காணப்படுகிறது.

> காதலால் மனம் கலங்கியவர்கள் பறவை விலங்குகளோடும் உயிரிலாப் பொருள்களோடும் பேசுவதாகக் கற்பனை செய்தல் எல்லா நாட்டு இலக்கியங்களிலும் உண்டு[70]

என்று மு.வரதராசன் ஆறுதல் தருவதற்காய் விலங்குகளிடம் பேசிய வாழ்வியலைக் கூறுகிறார். இதனை,

முன்னியது முடித்தனம் ஆயின் நன்னுதல்
வருவம் என்னும் பருவரல் தீர
படும்கொல் வாழி நெடுஞ்சுவர்ப் பல்லி[71]

என்று நற்றிணையும்,

திண்சுவர் நோக்கி நினைந்து கண்பனி
ஐமென் தூவி அணைசேர்பு அசைஇ
மையல் கொண்ட மதனழி இருக்கையள்
பகுவாய்ப் பல்லி படுதொறும் பரவி
நல்ல கூறு என நடுங்கிப்
புல்லென் மாலையொடு பொருங்கொல் தானே[72]

என்று அகநானூற்றுப் பாடலும் குறிப்பிடுகின்றன. தலைவன் தலைவியை விட்டுப் பொருள் தேடுவது மரபாகும். தலைவன் சென்ற பின் தலைவி தனிமையில் துன்பம் அடைவதும், அதில் ஆறுதல் பெற பல்லியிடம் தலைவன் தன்னைக் காண எப்பொழுது வருவான் என்று வினவும் சூழலையும் சங்க இலக்கியங்கள் காட்சிப்படுத்துகின்றன.

தலைவி தனிமையில் உள்ளபோது மனதில் உள்ள துன்பங்களையும், தலைவன் வருகின்ற காலச் சூழலையும் பல்லியிடம் கேட்டு மன அமைதி பெறுகின்ற சூழலியலைச் சங்க இலக்கியங்கள் தெளிவுறுத்துகின்றன. மனிதர்களுக்கு மன அமைதி விலங்குகள் வாயிலாகக் கிடைத்த உளவியல் அணுகுமுறை அன்பு இருந்ததை அறிந்துகொள்ள முடிகிறது. இதுவே பிற்காலங்களில் சிற்றிலக்கியமாகிய ‘தூது’ இலக்கியத்திற்கு வித்திட்டதற்கு வாய்ப்புண்டு.

### 3.13. உயிரினங்களை நேசித்தல்

பண்டைத் தமிழ்ச் சமூகம் தோன்றியக் காலம் முதல் சக மனிதர்களை நேசித்து வாழ்ந்துள்ள உயரிய பண்பாடுடையதாகும். மனிதர்களை மட்டும் அல்லாது தாவரங்கள், விலங்குகள், பறவைகள் போன்ற பல்வேறு வகையான

*உயிரினங்களையும் அன்பு செலுத்தி வாழ்ந்த வாழ்வியல் சூழலியலைக் காணமுடிகிறது.*

> எந்த உயிருக்கும் ஊறுபாடு நேராமல் மன்னவன் அரவணைத்துக் காக்க வேண்டுமாம். மரஞ், செடி, கொடி முதலான நிலைத் திணை உயிர்களையும் ஊர்வன, பறப்பன முதலான இயங்கு திணை உயிர்களையும் காப்பது அரசின் பொறுப்பாக அன்றைய அறிவுலகம் அறம் வகுத்திருந்தது[73]

*என்று நா.கு.பொன்னுசாமி அக்கால மக்கள் உயிரினங்களை நேசித்து வாழ்ந்ததைக் குறிப்பிடுகின்றார்.*

### 3.13.1. யானை

*யானைகள் மன்னர்களுக்குப் போர் புரியவும் ஊர்வலம் செல்லவும் பயன்பட்டன. யானையை வளர்ப்பவனுக்குப் பாகன் என்று பெயர். பாகன் யானையை நன்கு பராமரித்து வளர்த்து வருகின்ற நிகழ்வை,*

> பெருஞ்சோறு பயந்துபல் யாண்டு புரந்த
> பெருங்களிறு இழந்த பைதற் பாகன்
> அது சேர்ந்து அல்கிய அழுங்கல் ஆலை[74]

*என்று புறநானூற்றுப் பாடல் எடுத்தியம்புகிறது. யானையை இழந்த பாகன் மிகுந்த வருத்தமடைந்து வருந்திய துயர நிலையை அறியமுடிகிறது. யானையை உயர்வாக எண்ணிய மன்னனின் செயலை,*

> குழியிடைக் கொண்ட கன்றுடைப் பெருநிரை
> பிடிபடு பூசலின் எய்தாது ஒழிய
> கடுஞ்சின வேந்தன் ஏவலின் எய்தி
> நெடுஞ்சேண் நாட்டில் தலைத்தாா்ப் பட்ட
> கல்லா எழினி பல்எறிந்து அழுத்திய
> வன்கண் கதவின் வெண்மணி வாயில்
> மத்தி நாட்டிய கல்கெழு பனித்துறை
> நீர் ஒலித் தன்ன போர்
> அலர் நமக்கு ஒழிய அழப்பிரிந்தோரே[75]

*என்று அகநானூற்றுப் பாடல் தெரிவிக்கின்றது. யானையும் கன்றும் ஒரு பள்ளத்தில் விழுந்ததை அறிந்த சோழ மன்னன் எழினி என்பவனிடம்*

காப்பாற்றி வருமாறு சொல்லுகின்றான். எழினி மறுக்கவே அவனைக் கொன்று, யானையை மீட்டு வரவேண்டும் என்று மத்தி என்பவனிடம் கூறியதைக் காணமுடிகிறது. யானையை ஒரு விலங்காகப் பார்க்காமல் அதனையும் நேசித்து, அதற்கு துன்பம் வரும்போது ஓடோடிச் சென்று காப்பாற்றியச் சூழலை அகநானூறு வழியாக உணரமுடிகிறது.

> யானைகளின் மூலம் தலைவன் தலைவியின் அன்பு, பரிவு, பாதுகாத்தல், சேர்ந்திருத்தல், மகிழ்தல், பிரிதல், வருந்துதல், கதறுதல், பொருளீட்டல், புணர்தல், ஊடல் என்பன போன்ற பண்புநலன்கள் புலப்படுத்தப்படுகின்றன[76]

என்று பா.வாணிஸ்ரீ யானைகளுக்கும் மக்களுக்குமான உணர்வுநிலை சூழலியலைக் குறிப்பிடுகிறார்.

### 3.13.2. குதிரை

சங்க கால மக்கள் வாழ்வியலில் குதிரையானது சுமையேற்றும் வண்டிகளில் பயன்படுத்தப்பட்டதைக் காணமுடிகிறது. மன்னர்களின் போர்ப் பிரிவில் தேர்ப்படையாகவும் குதிரைகள் இருந்துள்ளன. இதனை,

> உமணர் தந்த உப்பு நொடை நெல்லின்
> அயினி மா இன்று அருந்த[77]

என்று நற்றிணையும்,

> இருங்கழிப் புகாஅர் பொருந்தத் தாக்கி
> வயச்சுறா எறிந்தென வலவன் அழிப்ப
> எழில்பயம் குன்றிய சிறைஅழி தொழில
> நிரைமணிப் புரவி விரை நடை தவிர[78]

என்று அகநானூற்றுப் பாடலும் எடுத்துரைக்கின்றன.

உமணர்கள் உப்பை விளைவித்தும், அதிலிருந்து கிடைக்கப்பட்ட பண்டமாற்றுப் பொருள்களான நெல், தினை, வரகு போன்றவை கொண்டு வாழ்ந்தனர். அவர்களின் வண்டியில் குதிரைகள் மிகுதியாகப் பூட்டப்பட்டிருந்தன. குதிரைகளுக்கு ஓய்வளித்த சூழலையும் உமணர்கள் உண்ணும் உணவுகளை குதிரைகளுக்குத் தருகின்ற சூழலையும் அறியமுடிகிறது. தாம் மட்டும் உண்ணாது தங்களால் வளர்க்கப்படும் விலங்குகளுக்கும்

உணவிடும் அக்கால மக்களிடம் குடிகொண்டிருந்த உயர்பண்பாகிய உயிரினங்களை நேசித்து வாழ்ந்த சூழலியலை அறிந்து மகிழ முடிகிறது.

### 3.13.3. குரங்கு

தமிழர்களின் வாழ்வியலில் மிக நெருங்கியத் தொடர்பினை உடைய விலங்காகக் குரங்குகள் காணப்படுகின்றன. குரங்கிலிருந்து மனிதன் வந்தான் என்பது பரிணாம வளர்ச்சியின் கருத்தியலாகும். குரங்குகளை அக்காலத் தமிழர் தங்களின் வீட்டில் வளர்த்து வந்துள்ளதைக் காணமுடிகிறது. இதனை,

முடமுதிர் பலவின் குடம் மருள் பெரும்பழம்
கல்கெழு குறவர் காதல் மடமகள்
கருவிரல் மந்திக்கு வரு விருந்து அயரும்[79]

என்று நற்றிணைப் பாடல் குறிப்பிடுகிறது. குறவர்கள் குரங்குகளுக்குப் பலாச் சுளையினை உணவாகத் தருகின்ற நிகழ்வினைக் காணமுடிகிறது.

மன்றப் பலவின் சுளைவிளை தீம்பழம்
உண்டு வந்து மந்திமுலை வருடக் கன்றமர்ந்து[80]

என்று ஐந்திணை எழுபது பாடல், மக்கள் குரங்குகளுக்கு உணவாகப் பலாச்சுளையினைத் தந்து உயிரினங்களை நேசித்த வாழ்வியலை எடுத்துக் காட்டுகின்றது.

> சங்கப் புலவர்கள் தாம் இயற்றிய பாடல்களில் தன்னோடு உறவு கொண்டிருக்கின்ற அல்லது தன் மனையில் வளர்த்து வருகின்ற வளர்ப்பு விலங்குகளைக் கவனத்தில் கொண்டிருக்கின்றனர். தாம் எண்ணிய கருத்துக்களை மக்களுக்கு உணர்த்துவதற்காக இவ்விலங்குகளின் வாயிலாக வெளிப்படுத்தி உணர்த்தியிருக்கின்றனர்[81]

என்று மனிதனுக்கும் விலங்குகளுக்குமிடையேயான நேசித்தலை பா.வாணிஸ்ரீ குறிப்பிடுகிறார்.

அக்கால மக்கள் சக மனிதர்களை மட்டும் நேசிக்காமல் விலங்குகளையும் நேசித்த சூழலியல் உயர் வாழ்க்கையை அறியமுடிகிறது. விலங்குகளுக்கு உணவளித்தும், பாதுகாத்தும் வளர்த்துள்ளனர். விலங்கின் இழப்பைத் தாங்க முடியாத தேர்ப்பாகனின் அன்பினையும் காணமுடிகிறது.

இக்காலத்திலும் விலங்குகளுக்கு ஏற்படுகின்ற துன்பத்தைப் போக்குகின்ற மக்களின் உயிர்நேசத்தை ஊடகங்கள் வாயிலாக அறியமுடிகிறது. அறிவியல் சிந்தனைகளும் மருத்துவ வளர்ச்சியும் இல்லாத காலத்திலேயே நம் தமிழ் மக்கள் விலங்குகளை நேசித்து வாழ்ந்த வாழ்வியல் போற்றுதலுக்குரியதாய் உள்ளது.

### 3.14. பரிசுப் பொருள்களில் விலங்குகள்

பண்டையத் தமிழர்கள் கொடைச் சிறப்புகளில் முதன்மையானவர்களாகத் திகழ்கிறார்கள். தம்மை நாடி வருகின்ற பாணர், விறலியர், கூத்தர், புலவர்கள் என அனைவருக்கும் பரிசுப் பொருளை அளவில்லாமல் தருவது மன்னர்களின் தனிச்சிறப்பாகும். கொடைச் சிறப்புச் செய்பவரை வள்ளல்கள் என்று அழைப்பர். வள்ளல்களை முதல், இடை, கடை என்று மூன்று பிரிவாக வகைப்படுத்துவர்.

> பாணர்களின் பசி தீர்த்த மன்னர்கள் வள்ளல்கள். அவர்களின் வறுமை தீரப் பொன்னும் பொருளும் தகுதிக்கு ஏற்றவாறு யானை, குதிரை, ஊர் எனக் கொடைகளாக அளித்தனர். பாணர்கள் அவற்றைப் பெற்றுத் தம் வறுமை தீரத் திரும்பியுள்ளனர்[82]

என்று கொடைகளில் விலங்குகள் பரிசுப் பொருளாக இடம்பெற்றதை க.காந்திதாசன் கூறுகிறார். மன்னர்களின் கொடைகளில் யானை, குதிரை போன்ற விலங்கினங்கள் மிகுதியாக இடம்பெற்றச் சூழலியலைக் காணமுடிகிறது. இதனை,

> . . . .   . . . .   . . . .   பாணர்
> பரிசில் பெற்ற விரி உளை நல்மான்[83]

என்று நற்றிணையும்,

> இன் கடுங்கள்ளின் அ.்.தை களிற்றொடு
> நன் கலன் ஈயும் நாள் மகிழ் இருக்கை[84]

என்று அகநானூறும்,

> சிறுகண் யானை வெண் கோடுபயந்த
> ஒளி திகழ் முத்தம் விறலியர்க்க ஈத்து[85]

*என்று புறநானூறும் குறிப்பிடுகின்றன. மன்னர்கள் பாணர்களுக்கும் விறலியர்க்கும் மான், குதிரை, யானையின் தந்தம், யானை முத்துக்கள் போன்றவற்றைப் பரிசுப் பொருளாக அளித்த நிகழ்வுகளைக் காணமுடிகிறது.*

> வெகு அபூர்வமாக யானையின் தலையில் முத்து கிடைக்கும் என்று கூறுவர். இந்த அரிய கல்லுக்கு கஜமுக்தா அல்லது யானைமுத்து என்று பெயர்[86]

*என ஓ.ஹென்றி பிரான்சிஸ் யானையின் முத்திற்கு விளக்கமளிக்கிறார்.*

*சங்க காலத்தில் மன்னர்களைப் பாடி வருவோர்க்கும் தேடி வருவோர்க்கும் பெரும் பரிசாக யானைகள் அளிக்கப்பட்டன. இது பரிசு பெறுவோரின் தகுதிக்காக மட்டுமின்றி பரிசளிப்போரின் தகுதியைப் பொருத்தும் வழங்கப்பட்டது. யானையினைப் பரிசிலாகப் பெற்றவர்கள் அதனைப் பெருமையாகக் கருதினார்கள். விலங்கினங்களும் மன்னர்களின் கொடைகளில் ஒன்றாக அமைந்த சூழலியலை அக்காலத் தமிழர்தம் வாழ்வில் காணமுடிகிறது.*

## 3.15. வேட்டையாடுதலில் விலங்குகள்

*சங்க காலத் தமிழ்ச் சமூகம் வேட்டைச் சமூகம் ஆகும். மக்கள் உணவிற்காகவும், பொழுதுபோக்கிற்காகவும், வீரத்திற்காகவும் வேட்டையாடுதலை மரபாகக் கொண்டிருந்தனர். யானை, புலி, கரடி, மான், உடும்பு, முயல், பன்றி போன்ற பெரிய விலங்கு முதல் சிறிய விலங்கு வரை வேட்டையாடினர்.*

> வேட்டையாடுதல் என்பது பழங்காலந் தொட்டே இருந்து வருகிறது. இது இன்னும் நாட்டுப்புறங்களில் நடைபெற்றுக் கொண்டிருக்கின்ற ஒரு தொழில். பாதுகாப்பிற்காகவும், உணவின் பயன்பாட்டிற்காகவும், பொழுதுபோக்கிற்காகவும் இத்தொழில் அமைகிறது. விலங்குகள், பறவைகள் போன்றவற்றைத் துரத்திச் சென்று தான் அமைத்த இருப்பிடத்திற்கு வரவழைத்து அதனை உயிருடனோ, கொன்றோ பிடிக்கின்றனர். இதற்காகப் பயன்படுத்தப்படும் கருவிகள் நிறைய உண்டு. ஒவ்வொரு பிரிவு மிருகத்தைப் பிடிக்கப் பல வகையான கருவிகளும், ஒரே மிருகத்தைப் பிடிக்கப் பல கருவிகளும் உண்டு. அது

வாழும் இடத்திற்குத் தகுந்தவாறு, உயிரோடு கொன்று பிடிப்பதற்குத் தகுந்தவாறு கருவிகள் வேறுபடுகின்றன. பெரும்பாலும் இக்கருவிகள் உள்ளூர் மக்களாலேயே தயார் செய்து பயன்படுத்தப்படுகின்றன. இக்கருவிகள் மிகுதியாக மரத்தினாலே செய்யப்படுகின்றன[87]

*என்று வேட்டையாடுதலுக்கு விளக்கத்தையும் வேட்டையாடுவதற்கு உரிய கருவிகளையும் சா.சுந்தரபாலு குறிப்பிடுகின்றார்.*

*வேட்டையாடுதல் அரசர்களின் தலையாயத் தொழில்களில் ஒன்றாகக் கருதப்பட்டது. இதனை,*

வேழம் வீழ்த்த விழுத் தொடைப் பகழி
பேழ் வாய் உழுவையைப் பெரும் பிறிது உறீஇ
புழல் தலைப் புகர்க் கலை உருட்டி, உரல் தலைக்
கேழற் பன்றி வீழ அயலது
ஆழல் புற்றத்து உடும்பில் செற்றும்[88]

*என்று புறநானூற்றுப் பாடலும்,*

கோட்டு மீன் எறிந்த உவகையர் வேட்டம் மடிந்து[89]

*என்றும்,*

உடும்பு கொலீஇ வரிநுணல் அகழ்ந்து
நெடுங்கோட்டுப் புற்றத்து ஈயல் கொண்டி
எல்லு முயல் எறிந்த வேட்டுவன் சுவல[90]

*என்றும்,*

கொடு விற்கானவன் கோட்டுமா தொலைச்சிப்[91]

*என்று நற்றிணைப் பாடல்களும்,*

களிற்றுமுகம் திறந்த கவுளுடைப் பகழி[92]

*என்று அகநானூற்றுப் பாடலும் கூறுகின்றன. ஓரி என்ற மன்னன் யானை, புலி, மான், பன்றி, உடும்பு போன்றவற்றை ஒரே அம்பில் வீழ்த்தியதையும், வேட்டவர்கள் சுறா மீன்களை வேட்டையாடியதையும், கானவர்கள் பன்றி, யானை போன்ற விலங்குகளை வேட்டையாடிய சூழலையும் காணமுடிகிறது.*

கொடிய விலங்குகளைப் பார்த்து மனிதர்கள் எவ்வாறு அச்சமுறுகிறார்களோ அவ்வாறு வேட்டையாடும் மனிதர்களைப் பார்த்து விலங்குகளும் அச்சமுறுகின்றன[93]

என்று விலங்குகள் வேட்டையாடும் மனிதர்களைக் கண்டு விலங்குகளும் அஞ்சுகின்ற நிலையை கு.இராசரெத்தினம் கூறுகின்றார்.

வேட்டையாடும் மனிதர்கள் தங்களுடன் நாய்களை அழைத்துச் செல்வது மரபாகும். நாய்கள் மிகுந்த மோப்பச் சக்தியினைக் கொண்டன.

> மனை விலங்குகளில் மிகவும் முக்கியப்படுத்தப்பட்ட விலங்கு நாய் என்பதாகும். இந்நாய் இருநிலைகளில் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. ஒன்று வீட்டுக் காவலுக்கும் மற்றொன்று வேட்டையாடுவதற்கும் நாய் பயன்படுத்தப்பட்டிருக்கிறது[94]

என்று பா.வாணிஸ்ரீயும்,

> விலங்குகளில் நாய் தான் மனித வரலாற்றில் மிகப்பழங்காலத்தில் பழக்கப்படுத்தப்பட்டது[95]

என்று பி.எல்.சாமியும் குறிப்பிடுகிறார். இதனை,

> ஓட்டு இயல் பிழையா வயநாய் பிற்பட
> வேட்டம் போகிய குறவன் காட்ட[96]

என்னும் அகநானூற்றுப் பாடலும் தெரிவிக்கின்றன. குறவன் வேட்டையாடச் செல்லும் போது நாயுடன் சென்ற சூழலை,

> வெஞ்சிலைக்கை வீரரொடும் வேடரோடு கூறமுன்
> மஞ்சலைக்கு மாமலைச் சரிப்புறத்து வந்தமா
> அஞ்சுவித் தடர்க்கு நாய்கள் அட்டமாக விட்டுநீள்
> நெஞ்சாத்தி னோடு சூழல் செய்து கானுள் எய்தினார்[97]

என்று பெரியுபராணப் பாடல் குறிப்பிடுகின்றது. வேட்டையாடுவதற்கு மற்றொரு விலங்காகிய நாயுடன் சென்று வேட்டையாடி வந்த சூழலியலைக் காணமுடிகிறது.

சங்க காலத் தமிழர்கள் வேட்டையாடுவதில் மிகச் சிறந்தவர்களாக இருந்ததை அறியமுடிகின்றது. மன்னர்களின் வீரத்தை ஆராய்வதற்கு விலங்குகளை வேட்டையாடிய நிகழ்வுகளையும் காணமுடிகிறது. காடுகளிலும் மலைப்பகுதிகளிலும் கடற்கரைப் பகுதிகளிலும் கானவர், குறவர், வேட்டுவர் போன்றோர் உணவின் தேவைக்காக வேட்டையாடியச் சூழலியல் வாழ்வை உணரமுடிகிறது.

### 3.16. சடங்கு மற்றும் நம்பிக்கைகளில் விலங்குகள்

*மக்களால் மக்களுக்காக ஏற்படுத்தப்பட்ட ஒரு வரன்முறை சடங்குகள் ஆகும். இயற்கை விளைவுகளால் நன்மை ஏற்படும் போதும், பாதிப்பு அடையும் போதும் பல்வேறு நம்பிக்கைகளுக்கு மனிதன் ஆட்படுகிறான்.*

> வாழ்க்கையிலிருந்து கிடைக்கும் அனுபவங்களே மனிதனுக்குப் பழக்க வழக்கங்களையும் நம்பிக்கைகளையும் சடங்குகளையும் தோற்றுவித்திருக்கின்றன[98]

*என்று கு.இராசரெத்தினம் குறிப்பிடுகிறார்.*

> குரிசி என்பது பலியான ஆடு, கோழியின் இரத்தமும் நவதானியங்களும் கலந்து துழாவப்பட்ட கலவையாகும். இந்த குரிசி களத்தில் சிறிது சிறிதாகப் பலியாகக் கொடுக்கப்படும்[99]

*என்று நா.வானமாமலை பலியிடுதலுக்கு விளக்கமளிக்கிறார். ஆடு பலியிடுதலை,*

> வெறிஎன உணர்ந்த உள்ளமொடு மறிஅறுத்து
> அன்னை அயரும் முருகு நின்
> பொன் நேர் பசலைக்கு உதவாமாறே[100]

*என்று நற்றிணையும்,*

> மறிஈர்ந்து உதிரம் தூய் வேலன் தரீஇ
> வெளியோடு அலம் வரும் யாய்[101]

*என்று ஐந்திணை ஐம்பது பாடலும் சங்க கால மக்கள் முருகனுக்கு வெறியாட்டு நிகழ்த்தி வழிபாடு செய்த சூழலியலை விளக்குகின்றன.*

*தமிழர்கள் தாவரங்கள், விலங்குகள் போன்றவற்றை வழிபட்டு வந்துள்ளனர். விலங்குகளில் யானையின் தந்தத்தையும், பெண் எருமையின் கொம்பையும், சுறாக் கொம்பையும் வழிபட்டனர். இதனை,*

> பொருது தொலை யானைக் கோடு சீர்ஆக
> தூவொடு மலிந்த காய கானவர்[102]

*என்று மலைபடுகடாமும்,*

> எருமைப் பெடையோடு எமர் ஈங்கு அயரும்
> பெருமணம் எல்லாம் தனித்தே ஒழியே[103]

*என்று கலித்தொகைப் பாடலும்,*

சினைச் சுறவின் கோடு நட்டு

மனைச் சேர்த்திய வல் அணங்கினான்[104]

*என்று பட்டினப்பாலை பாடலும் குறிப்பிடுகின்றன. அக்கால மக்கள் தங்கள் வீட்டில் தந்தம், எருமையின் கொம்பு, சுறாவின் கொம்பு போன்றவற்றை வைத்து வழிபட்ட சூழலியலைச் சங்க இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன.*

அறிவு நிலைக்கு அப்பாற்பட்ட எண்ணங்களே நம்பிக்கையாகிறது[105]

*என்று மு.கவிதாதேவி நம்பிக்கை பற்றிக் குறிப்பிடுகிறார். இத்தகைய நம்பிக்கை நமது அக்காலத் தமிழ்ச் சமூகத்திலும் நிலவிய சூழலியலை அறிந்து கொள்ள முடிகிறது.*

*பண்டைத் தமிழர் போரில் வீரமரணம் அடைந்த வீரர்களுக்கு நடுகல் நட்டு வழிபட்டு வந்தனர்.*

போரில் இறந்த வீரர்களுக்குக் கல் நட்டு வணங்கியதே நடுகல் வழிபாடாகும்[106]

*என்று நடுகல் வழிபாட்டை ப.அனுராதா விளக்குகிறார்.*

போர்க்களத்தில் வீரமரணம் அடைந்த வீரர்கள், வடக்கிருந்து உயிர் துறந்தவர்கள், உடன்கட்டை ஏறிய உத்தம மாதர்கள், கடவுளுக்குக் கோயில் கட்டியவர்கள், கால்வாய் வெட்டியவர்கள், நரபலியால் வெட்டுண்டவர்கள், நற்காரியத்திற்காகத் தற்கொலை செய்து கொண்டவர்கள் ஆகியோர் நடுகல்லுக்கு உரியோர் ஆவார்[107]

*என்று க.இராசமாணிக்கம் நடுகல் வழிபாட்டு முறையினை விரிவாக விவரிக்கின்றார். இதனை,*

நடுகல் பீலிசூட்டி துடிப்படுத்து

தோப்பிக் கள்ளொடு துரூஉப் பலிகொடுக்கும்[108]

*என்று அகநானூற்றுப் பாடலும் தெரிவிக்கின்றது. மக்கள் நடுகல்லை வழிபட்டதையும் அதற்கு பலியிட்டதையும் காணமுடிகிறது.*

முதலில் நல்ல உறுதியான கல்லைக் காணுதல், இரண்டாவது அக்கல்லை எடுத்து வருவது, மூன்றாவது அக்கல்லை நீராட்டுதல், நான்காவது அதனைக் குறித்த இடத்திலே நடுதல், ஐந்தாவது அக்கல்லில் வீரனுடைய பெயரும் புகழும் குறித்தல், ஆறாவது

அதனைத் தெய்வமாக வைத்து விழாக் கொண்டாடி வாழ்த்தி வணங்குதல் என்று ஆறு வகையாகக் கூறப்படுகின்றது[109]

என்று நடுகல் உருவாக்கத்தை சாமி.சிதம்பரனார் விளக்குகிறார்.

மக்கள் வாழ்வியலில் வழிபாடு ஓர் அங்கமாகக் காணப்படுகிறது. பலியிடுதல், நடுகல் இட்டு வழிபாடு செய்தல், விலங்குகளின் உறுப்புகளை வீட்டில் வைத்துத் தெய்வமாக வணங்குதல் போன்ற விலங்குகள் தொடர்பான நம்பிக்கை சார்ந்த சூழலியலைச் சங்க இலக்கியம் வாயிலாக உணரமுடிகிறது.

### 3.17. ஏறு தழுவுதல்

அக்காலத் தமிழர்கள் வீரத்திற்கு முதன்மை வழங்கியவர்களாக வாழ்ந்தனர். அவர்களின் வீரத்தின் அடையாளமாகக் கருதப்படுவது ஏறு தழுவுதல் ஆகும்.

ஏறு தழுவுதல் என்பது முல்லை நிலத்தில் காளையினை அடக்குகின்ற நிகழ்வு ஆகும். ஏறு தழுவுதல் கலித்தொகையின் 101, 102, 103, 104, 105, 106, 107 ஆகிய பாடல்களில் இடம்பெற்றுள்ளன. மாட்டை மனிதர்கள் அடக்குவது அல்லது கொம்பைப் பிடித்து வீழ்த்துவது ஏறு தழுவுதல் ஆகும். கொம்பைப் பிடித்து அடக்குதல், கழுத்தைப் பிடித்துக் கொண்டு காளையின் மார்பில் தொங்குதல், கழுத்தைத் திருகுதல், இமிழைத் தழுவுதல், தோளில் ஏறுதல் போன்றவை காளையை அடக்கும் முறையாகும்.

காளையின் கொம்பைப் பிடித்தல் ஆண்மை. வாலைப் பிடித்தல் தாழ்மை என்பது தமிழர் கொள்கை[110]

என்று ரா.பி.சேதுப்பிள்ளை தமிழரின் வீரத்தைக் குறிப்பிடுகிறார்.

பாடுகம் வம்மின் பொதுவன் கொலை ஏற்றுக்
கோடு குறி செய்த மார்பு[111]

என்றும்,

மருப்பில் கொண்டும் மார்பு உறத் தழீஇயும்
எருத்திடை அடங்கியும் இமில்இறப் புல்லியும்[112]

என்றும் கலித்தொகை பாடல்கள் ஏறுதழுவுதலில் ஏற்பட்ட புண்ணைப் பெருமையாகக் கருதிய வாழ்வியலைத் தெரிவிக்கின்றன.

ஏறுதழுவுதல் என்பது முல்லை நிலத்தின் சிறந்த வீர விளையாட்டாகும். இதன் பரிணாம வளர்ச்சியாக இன்று ஜல்லிக்கட்டு நடைபெறுகிறது. ஆணின் வீரத்தினை அறியும் நிகழ்வாக ஏறுதழுவுதல் காணமுடிகிறது. இத்தகைய வீரவிளையாட்டு அக்காலம் முதல் இந்தக் காலம் வரை தமிழரின் பண்பாட்டு அடையாளமாகத் திகழ்கிறது. வீர வெளிப்பாட்டிலும் விலங்குகளோடு இயைந்து வாழ்ந்த சூழலியல் தொடர்பு சங்க இலக்கியங்களில் பெரிதும் காணப்படுகின்றன. காளைக்கும் வீரத்தை வழங்க வாய்ப்பளித்துத் தனது வீரத்தையும் வெளிப்படுத்த கருவியாக அமைத்துக் கொண்டு அகவாழ்விலும் புற வாழ்விலும் ஏறு தழுவுதலை இன்றியமையாததாக இடம்பெறச் செய்த அக்காலச் சூழலியல் சங்கிலி பெரு வியப்பைத் தருகிறது.

போர்க்களங்களில் விலங்குகளைத் துன்புறுத்துதல் என்பது நிகழ்ந்தாலும் பெரும்பான்மை அவற்றைப் பயன்படுத்துவதும் பேணுவதுமாகவே இருந்துள்ளது. உணவிற்காக வேட்டையாடுதல் மூலம் விலங்குகள் அழிக்கப்படுவதும் நிகழ்கிறது. உயிரினச் சமன்பாடு வேண்டற்பாலதுதான். ஆனால் அதனை மீறாமல் பார்த்துக் கொள்வது மானுடத்தின் கடமையாகும்.

### 3.18. தொகுப்புரை

மன்னர்கள் போர்க்களத்தில் யானைகள், குதிரைகள் பெரும்படையாக அமைத்துப் போர்ப் புரிந்து வெற்றிப் பெற்ற சூழலியலை அறியமுடிகிறது. மன்னர்கள் வீரத்தின் குறியீடாகப் புலியும், மீனும் இடம்பெற்றிருந்த சங்க காலத்தைச் சங்க இலக்கியம் வெகுவாக எடுத்துக் காட்டுகின்றன. எருது, எருமை போன்ற விலங்குகளைப் பயன்படுத்தி உழுது, போர் அடித்துச் செல்வச் செழிப்புடன் வாழ்ந்த சூழலியலையும், கழுதை சுமை தூக்குவதற்கும் வாணிபத்திற்கும் முதன்மையாகப் பயன்பட்டதையும் சங்க இலக்கியங்கள் தெளிவுறுத்துகின்றன.

சங்க கால மக்கள் தங்கள் இருப்பிடத்திற்கு ஏற்றவாறும், நிலத்திற்கு ஏற்றவாறும் விலங்குகளை வேட்டையாடி உண்டு வாழ்ந்ததை அறியமுடிகிறது. மனித வாழ்வியலில் விலங்கின் உறுப்புகளான தந்தம், தோல்,

கொம்பு, சங்கு போன்றவை புழங்குப் பொருள்களாக நிலவியுள்ளன. விலங்குகளுக்கிடையே ஏற்பட்ட அன்பின் பரிமாற்றங்கள் மனித வாழ்விற்கு அடித்தளமாக அமைந்த சூழலியலைக் கண்டுணர முடிகிறது.

தலைவி தனிமையில் உள்ள போது மனதில் உள்ள துன்பங்களையும், தலைவன் வருகின்ற காலச் சூழலையும் பல்லியிடம் கேட்டு மன அமைதி பெறுகின்ற சூழலியலைச் சங்க இலக்கியங்கள் தெளிவுறுத்துகின்றன. அக்கால மக்கள் சக மனிதர்களை மட்டும் நேசிக்காமல் விலங்குகளையும் நேசித்த சூழலியல் உயர் வாழ்க்கையை அறியமுடிகிறது. விலங்கினங்களும் மன்னர்களின் கொடைகளில் ஒன்றாக அமைந்த சூழலியலை அக்காலத் தமிழர்தம் வாழ்வில் காணமுடிகிறது.

மன்னர்களின் வீரத்தை ஆராயவும், கானவர், குறவர், வேட்டுவர் போன்றோர் உணவின் தேவைக்காகவும் வேட்டையாடியச் சூழலியல் வாழ்வை உணரமுடிகிறது.

மக்கள் வாழ்வியலில் பலியிடுதல், நடுகல் இட்டு வழிபாடு செய்தல், விலங்குகளின் உறுப்புகளை வீட்டில் வைத்துத் தெய்வமாக வணங்கியது போன்ற நம்பிக்கை சார்ந்த சூழலியலை உணரமுடிகிறது. ஏறு தழுவுதல் அக வாழ்விலும், புற வாழ்விலும் இன்றியமையாத இடம்பெற்றச் சூழலியல் சங்கிலியை அறியமுடிகிறது. இயற்கையோடு இணைந்த சூழலியலைப் பேணிப் பாதுகாக்காமல் அவற்றை மீறும் போது மிகப்பெரிய இயற்கைப் பேரழிவுகளை மனித சமூகம் எதிர்கொள்ள வேண்டியுள்ளது.

## சான்றெண் குறிப்புகள்

1. *க.ரத்னம், **சங்க இலக்கியத்தில் யானைகள்,** ப.48.*
2. *ரா.பி.சேதுப்பிள்ளை, **தமிழர் வீரம்,** ப.12.*
3. *இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு,** பா.93:20.*
4. *அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), **ஐங்குறுநூறு,** பா.78:1-2.*
5. *கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு,** பா.3:11.*
6. *புலியூர்க்கேசிகன் (உ.ஆ.), **கலிங்கத்துப்பரணி,** பா.476:1-3.*
7. *சாமி.சிதம்பரனார், **பழந்தமிழர் அரசியல்,** ப.16.*
8. *கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை,** பா.150:7-8.*
9. *துரை.தண்டபாணி (உ.ஆ.), **களவழி நாற்பது,** பா.16:1.*
10. *சாமி.சிதம்பரனார், **பழந்தமிழர் அரசியல்,** ப.16.*
11. *பா.வாணிஸ்ரீ, **சங்க அகப்பாடல்களில் விலங்குகள் வழி அறியலாகும் கருத்தியல்,** ப.24.*
12. *கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை,** பா.58:11.*
13. *இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு,** பா.400:13-14.*
14. *வி.நாகராசன் (உ.ஆ.), **குறிஞ்சிப்பாட்டு,** பா.215.*
15. *ந.சுப்ரமண்யன், **சங்க கால வாழ்வியல்,** ப.70.*
16. *க.வெள்ளைவாரணன், **சங்க காலத் தமிழ் மக்கள்,** ப.7.*
17. *மேலது., ப.7.*
18. *கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு,** பா.50:30-32.*
19. *வி.என்.தேவநாதன் (ப.ஆ.), **நாலாயிரத் திவ்ய பிரபந்தம், ஐந்தாம் பத்து,** பா.469:1.*
20. *இரா.வசந்தகுமார், **அறிவியல் கண்ணோட்டத்தில் சங்க இலக்கிய விலங்குகள், தொகுதி மூன்று,** ப.106.*
21. *கீர்த்தி (தொ.ஆ.), **மகாகவி பாரதியார் கவிதைகள், சுதந்திரப் பள்ளு,** பா.4:1-2.*
22. *வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை,** பா.181:3-4.*
23. *வி.நாகராசன் (உ.ஆ.), **மதுரைக்காஞ்சி,** பா.94.*
24. *ஞா.மாணிக்கவாசகன் (உ.ஆ.), **திரிகடுகம்,** பா.69:1.*

25. *இரா.வசந்தகுமார்,* ***அறிவியல் கண்ணோட்டத்தில் சங்க இலக்கிய விலங்குகள், தொகுதி 1,*** *ப.23.*

26. *கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.),* ***நற்றிணை,*** *பா.125:9-11.*

27. *அ.ஆலிஸ் (உ.ஆ.),* ***பதிற்றுப்பத்து,*** *பா.71:4-5.*

28. *கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.),* ***புறநானூறு,*** *பா.370:16-17.*

29. *வி.நாகராசன் (உ.ஆ.),* ***மலைபடுகடாம்,*** *பா.336-339.*

30. *மயிலை சீனி.வேங்கடசாமி,* ***பழங்காலத் தமிழர் வாணிகம்,*** *ப.15.*

31. *மேலது., ப.95.*

32. *இரா.செயபால் (உ.ஆ.),* ***அகநானூறு,*** *பா.30:5-6.*

33. *மேலது., பா.89:12.*

34. *இரா.வசந்தகுமார்,* ***அறிவியல் கண்ணோட்டத்தில் சங்க இலக்கிய விலங்குகள்,*** *ப.373.*

35. *ந.சுப்ரமண்யன்,* ***சங்க கால வாழ்வியல்,*** *பக்.296-297.*

36. *இரா.வசந்தகுமார்,* ***அறிவியல் கண்ணோட்டத்தில் சங்க இலக்கிய விலங்குகள்,*** *ப.92.*

37. *கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.),* ***நற்றிணை,*** *பா.45:6.*

38. *அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ.),* ***ஐங்குறுநூறு,*** *பா.48:2-3.*

39. *இரா.மோகன் (உ.ஆ.),* ***பெரும்பாணாற்றுப்படை,*** *பா.100.*

40. *ஞா.மாணிக்கவாசகன் (உ.ஆ.),* ***திணைமாலை நூற்றைம்பது,*** *பா.51:1-2.*

41. *அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ.),* ***ஐங்குறுநூறு,*** *பா.81:1-2.*

42. *இரா.செயபால் (உ.ஆ.),* ***அகநானூறு,*** *பா.169:3-7.*

43. *கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.),* ***புறநானூறு,*** *பா.33:1-2.*

44. *ஓ.ஹென்றி பிரான்சிஸ்,* ***யானை காடுகளின் அரசன்,*** *ப.102.*

45. *அ.அப்துல் ரகுமான்,* ***கடல் வாழ் ஆமைகளின் வியத்தகு வாழ்க்கை,*** *ப.63.*

46. *வி.நாகராசன் (உ.ஆ.),* ***குறுந்தொகை,*** *பா.100:4.*

47. *அ.விசுவநாதன் (உ.ஆ.),* ***கலித்தொகை,*** *பா.41:1-2.*

48. *கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.),* ***புறநானூறு,*** *பா.39:2-3.*

49. *இரா.மோகன் (உ.ஆ.),* ***பொருநராற்றுப்படை,*** *பா.163.*

50. *வி.நாகராசன் (உ.ஆ.),* ***நெடுநல்வாடை,*** *பா.117-118.*

51. *வி.நாகராசன் (உ.ஆ.),* ***மலைபடுகடாம்,*** *பா.28.*

52. *இரா.வசந்தகுமார்,* **அறிவியல் கண்ணோட்டத்தில் சங்க இலக்கிய விலங்குகள், தொகுதி இரண்டு,** *ப.95.*
53. *வி.நாகராசன் (உ.ஆ.),* **குறுந்தொகை,** *பா.163:3.*
54. *ஞா.மாணிக்கவாசகன் (உ.ஆ.),* **சிலப்பதிகாரம், வேட்டுவ வரி,** *பா.27-28.*
55. *அ.ஆலிஸ் (உ.ஆ.),* **பதிற்றுப்பத்து,** *பா.19:4.*
56. *இரா.செயபால் (உ.ஆ.),* **அகநானூறு,** *பா.58:4.*
57. *கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.),* **புறநானூறு,** *பா.13:2.*
58. *மேலது., பா.374:14.*
59. *இரா.மோகன் (உ.ஆ.),* **பெரும்பாணாற்றுப்படை,** *பா.89.*
60. *வி.நாகராசன் (உ.ஆ.),* **மலைபடுகடாம்,** *பா.321.*
61. *வி.நாகராசன் (உ.ஆ.),* **குறுந்தொகை,** *பா.723.*
62. *அ.விசுவநாதன் (உ.ஆ.),* **கலித்தொகை,** *பா.131:7.*
63. *இரா.செயபால் (உ.ஆ.),* **அகநானூறு,** *பா.350:11-12.*
64. *மயிலை சீனி.வேங்கடசாமி,* **பழங்காலத் தமிழர் வாணிகம்,** *ப.99.*
65. *பா.வாணிஸ்ரீ,* **சங்க அகப்பாடல்களில் விலங்குகள் வழி அறியலாகும் கருத்தியல்,** *ப.54.*
66. *அ.விசுவநாதன் (உ.ஆ.),* **கலித்தொகை,** *பா.11:8-9.*
67. *மேலது., பா.11:16-17.*
68. *இரா.செயபால் (உ.ஆ.),* **அகநானூறு,** *பா.8:10-11.*
69. *பா.வாணிஸ்ரீ,* **சங்க அகப்பாடல்களில் விலங்குகள் வழி அறியலாகும் கருத்தியல்,** *ப.55.*
70. *மு.வரதராசன்,* **இலக்கியத்திறன்,** *ப.146.*
71. *கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.),* **நற்றிணை,** *பா.169:1-3.*
72. *இரா.செயபால் (உ.ஆ.),* **அகநானூறு,** *பா.289:10-17.*
73. *நா.கு.பொன்னுசாமி,* **சங்க இலக்கியத்தில் சமூக அறம்,** *ப.46.*
74. *கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.),* **புறநானூறு,** *பா.220:1-3.*
75. *இரா.செயபால் (உ.ஆ.),* **அகநானூறு,** *பா.211:9-17.*
76. *பா.வாணிஸ்ரீ,* **சங்க அகப்பாடல்களில் விலங்குகள் வழி அறியலாகும் கருத்தியல்,** *ப.97.*
77. *கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.),* **நற்றிணை,** *பா.254:6-7.*

78. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.190:11-14.

79. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை**, பா.353:4-6.

80. ஞா.மாணிக்கவாசகன் (உ.ஆ.), **ஐந்திணை எழுபது**, பா.4:1-2.

81. பா.வாணிஸ்ரீ, **சங்க அகப்பாடல்களில் விலங்குகள் வழி அறியலாகும் கருத்தியல்**, ப.22.

82. க.காந்திதாசன், **சங்க இலக்கியத்தில் பாணர் வாழ்வியல்**, ப.58.

83. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை**, பா.185:3-4.

84. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.76:3-4.

85. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.170:10-11.

86. ஓ.ஹென்றி பிரான்சிஸ், **யானை காடுகளின் அரசன்**, ப.49.

87. சா.சுந்தரபாலு, **தொழிற்கருவிகள் - ஒரு மொழியியல் நோக்கு**, ப.28.

88. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு**, பா.152:1-5.

89. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை**, பா.49:5.

90. மேலது., பா.59:1-3.

91. மேலது., பா.75:6.

92. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.132:4.

93. கு.இராசரெத்தினம், **சங்க இலக்கியத்தில் பொதுமக்கள்**, ப.56.

94. பா.வாணிஸ்ரீ, **சங்க அகப்பாடல்களில் விலங்குகள் வழி அறியலாகும் கருத்தியல்**, ப.22.

95. பி.எல்.சாமி, **சங்க இலக்கியத்தில் விலங்கின விளக்கம்**, ப.446.

96. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு**, பா.182:5-6.

97. சி.கே.சுப்ரமணிய முதலியார் (தொ.ஆ.), **திருத்தொண்டர் புராணம், பகுதி இரண்டு**, பா.725:1-4.

98. கு.இராசரெத்தினம், **சங்க இலக்கியத்தில் பொதுமக்கள்**, ப.146.

99. நா.வானமாமலை (ப.ஆ.), **மக்களும் மரபுகளும்**, ப.39.

100. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை**, பா.47:9-11.

101. ஞா.மாணிக்கவாசகன் (உ.ஆ.), **ஐந்திணை ஐம்பது**, பா.20:3-4.

102. வி.நாகராசன் (உ.ஆ.), **மலைபடுகடாம்**, பா.154-155.

103. அ.விசுவநாதன் (உ.ஆ.), **கலித்தொகை**, பா.114:13-14.

104. வி.நாகராசன் (உ.ஆ.), **பட்டினப்பாலை**, பா.86-87.

105. மு.கவிதாதேவி, **நற்றிணை காட்டும் சூழல்கள்,** ப.51.

106. ப.அனுராதா, **இலக்கியப் பீடம்,** ப.14.

107. க.இராசமாணிக்கம், **பண்டைத் தமிழர் வாழ்வியல்,** பக்.210-211.

108. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு,** பா.35:8-9.

109. சாமி.சிதம்பரனார், **பழந்தமிழர் வாழ்வும் வளர்ச்சியும்,** ப.13.

110. ரா.பி.சேதுப்பிள்ளை, **தமிழர் வீரம்,** ப.72.

111. அ.விசுவநாதன் (உ.ஆ.), **கலித்தொகை,** பா.104:63-64.

112. மேலது., பா.105:30-31.

# இயல் – 4

# சங்க இலக்கியச் சூழலியலில் பறவைகள்

## 4.0. பறவைகள்

சங்க கால மக்கள் வாழ்வில் தலையாய தொடர்பு காரணியாகப் பறவைகள் அமைந்துள்ளன. அக வாழ்விலும், புற வாழ்விலும் மன உணர்வுகளோடு தொடர்புடைய ஒன்றாகப் பறவைகள் இடம்பெறுகின்றன. உணவிற்காகவும், நம்பிக்கைகாகவும், விளையாட்டிற்காகவும், காலநிலை முன்னறிவிப்புக்காகவும் பறவைகள் பயன்பாடுகளை சங்க இலக்கியம் வெளிப்படுத்துகின்றது. வீட்டில் வளர்க்கும் பறவைகளும், காடுகளில் இடம்பெறும் பறவைகளும் அக்காலத் தமிழ்ச் சூழலியலில் வெகுவாக இடம்பெற்றிருப்பதைச் சங்க இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன.

## 4.1. கடவுளும் பறவைகளும்

சங்க காலத் தமிழர்கள் காதலையும் வீரத்தையும் இரண்டு கண்களாகப் போற்றினர். இவை இரண்டும் கைகூடுவதற்கு மக்கள் இறைவழிபாடுகளில் ஈடுபட்டனர். அக்கால மக்கள் தாம் நினைத்தது நிறைவேற வேண்டுமென்ற நம்பிக்கையில் பல்வேறு வழிபாடுகளில் ஈடுபட்டனர். அவர்கள் சிவன், திருமால், முருகன், விநாயகர், கலைமகள், திருமகள், காளி போன்ற கடவுள்களை வணங்கி பல்வேறு வழிபாட்டு முறைகளைச் செய்து வந்தனர்.

> திருமால் கருடனையும், நவக்கிரகங்களில் ஒன்றான சனி காகத்தையும், மன்மதன் கிளியையும், குறிஞ்சி நிலத்துத் தெய்வமான முருகன் மயிலையும், படைப்புக் கடவுளான பிரம்மன் அன்னத்தையும், வாகனங்களாகக் கொண்டு விளங்கினர்[1]

என்று சி.கு.சென்னகேசவலு கூறுகிறார். இதனை,

> படையும் கொடியும் குடையும் முரசும்
> நடைநவில் புரவியும் களிறும் தேரும்
> தாரும் முடியும் தேர் வன பிறவும்
> தெரிவுகொள் செங்கோல் அரசர்க்குரிய[2]

என்கிறது தொல்காப்பியம்.

புள் அணி நீள்கொடிச் செல்வனும் வெள்ஏறு[3]

என்றும்,

பலபொறி மஞ்ஞை வெல்கொடி அகவ[4]

என்று திருமுருகாற்றுப்படையும்,

சேவல் அம் கொடியோன் காப்ப[5]

என்று குறுந்தொகையும்,

விறல் வெய்யோன் ஊர் மயில் வேல்நிழல் நோக்கி[6]

என்று பரிபாடலும்,

குமரி இருக்கக் காலமயில் கூத்து அயர்[7]

என்று மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழும் கூறுகின்றன. திருமாலின் கொடியாகக் கருடப்பறவையும், முருகனின் கொடியாக மயிலும் சேவலும் காணப்படுகின்றன. மயில் முருகனின் வாகனமாகவும் திகழ்ந்ததைச் சங்க இலக்கியங்கள் தெரிவிக்கின்றன.

> புராண இதிகாசங்களில் தேவர்கள் தம்தம் தகுதிகளுக்கேற்ப பறவைகளையும் மற்ற விலங்குகளையும் ஊர்திகளாகப் பெற்று இருந்தனர்[8]

என்றும்,

> அன்னமும் கிளியும் சேவலும், மயிலும் குயிலும் கொக்கும் காக்கையும் கருடனும் ஒவ்வொர் இறைவனை ஒன்றி அவர்களுக்கு வாகனங்களாக அமைந்து விளங்குகின்றன[9]

என்றும் சி.கு.சென்னகேசவலு கடவுள்களின் பறவைகளைக் குறிப்பிடுகிறார்.

அக்காலத் தமிழர்கள் இறைவழிபாட்டில் நம்பிக்கையுடையவர்களாக இருந்திருக்கின்றனர். அவர்கள் வணங்கும் கடவுளாகக் கருதப்பட்ட முருகன், திருமால் போன்றவர்களுக்குப் பறவைகள் ஊர்தியாகவும் கொடியாகவும் இடம்பெற்றிருந்த சூழலைக் காணமுடிகிறது.

### 4.2. காலத்தை அறிவுறுத்துதலில் பறவைகள்

சங்க கால மக்கள் பொழுதை இருவகையாகப் பிரித்திருந்தனர். பொழுது, சிறுபொழுது, பெரும்பொழுது என இரண்டு வகைப்பட்டது. பொழுது விடிந்ததையும் விடியப் போவதையும் அறிவுறுத்துதலின்

*பொருட்டுப் பறவைகள் கூவின. இவை மனிதர்களை துயிலெழுப்பச் செய்தன. அத்தகையப் பறவைகளில் கோழி இன்றியமையாத இடத்தைப் பெறுகிறது. சேவல் கோழி விடியற்காலையில் எழுப்பும் ஒலி விடியலை மக்களுக்கு உணர்த்தும் வழக்கம் சமூகத்தில் பொது நம்பிக்கையாக இன்றும் நிலவுகின்றது.*

*பண்டைத் தமிழர் வாழ்வில் இடம்பெறும் கோழி என்னும் பறவையானது நீர்க்கோழி, கானக்கோழி, மனைக்கோழி எனப் பல வகைப்பட்டன (புறம்.395). இதனை,*

நள் இருள் விடியல் புள் எழப் போகி[10]

*என்று பெரும்பாணாற்றுப்படையும்,*

பொறி மயிர் வாரணம் வைகறை இயம்ப[11]

*என்று மதுரைக்காஞ்சியும்,*

குக்கூ என்றது கோழி; அதன் எதிர்
துட்கொன்றன்று என் தூஉ நெஞ்சம்
தோள் தோய் காதலர்ப் பிரிக்கும்
வாள் போல் வைகறை வந்தன்றால் எனவே[12]

*என்று குறுந்தொகையும்,*

வட்ட வரிய செம் பொறிச் சேவல்
ஏனல் காப்போர் உணர்த்திய கூஉம்
கானத்தோர் நின் தெவ்வர் நீயே[13]

*என்றும்,*

பொறிமயிர் வாரணம் பொழுது அறிந்து இயம்ப[14]

*என்றும்,*

மனைக்கோழிப் பைம் பயிரின்னே
கானக்கோழி கவர் குரலொடு
நீர்க்கோழிக் கூய்ப் பெயர்க்குந்து[15]

*என்றும் புறநானூற்றுப் பாடல்களும் குறிப்பிடுகின்றன.*

*பொழுது விடிந்ததை அறிவுறுத்துதலில் கோழி என்ற பறவையானது ஆயர் மக்களை எழுப்புவதும், தலைவன் தலைவியை விடியற்காலையில்*

எழுப்புதலும், தினைப்புனத்தைக் காவல் காக்கின்ற கானவன் தூங்கினாலும் அவனையும் கூவி எழுப்புவதையும் சங்க இலக்கியங்கள் காட்சிப்படுத்துகின்றன. பறவைகள் தங்கள் உணர்வு நிலைக்கேற்பவும் கால நிலைக்கேற்பவும் பல்வேறு ஒலிகளை எழுப்புகின்றன. அவ்வகையில் பறவைகளின் ஒலிகள் பற்றிய அறிவானது காலநிலைகளை மக்கள் உணர்ந்து கொள்வதற்குத் துணைசெய்தன. வாழ்வியலின் ஓர் அங்கமான பொழுது அறிதற்கு பறவைகளின் வாழ்வியல் சூழல் மனிதனின் வாழ்வியலோடு இணைந்திருப்பதைக் காணமுடிகிறது. இதனை,

வைகறை யாமம் வாரணம்[16]

என்னும் சிலப்பதிகார அடி கோழி பொழுது விடிந்து விட்டதைக் கூவி மக்களை எழுப்புவதைப் புலப்படுத்துகின்றது.

மக்கள் வாழ்வியலில் கோழி என்னும் வீட்டில் வளர்க்கும் பறவை அக்காலம் முதல் தற்காலம் வரை ஒன்றிணைந்து காணப்படுகிறது. கடிகாரம் இல்லாத அக்காலத்திலிருந்து இன்றுவரை பறவைகளின் ஒலியினைக் கொண்டு காலத்தை அறியும் சூழலில் மக்கள் வாழ்கின்றனர். காலையில் ஆடு, மாடுகளை மேய்க்கவும், உழவுத் தொழில் செய்யவும், கானவர்களை கூவி எழுப்புவதற்கும் கோழி மற்றும் சேவல் அக்கால மக்களின் வாழ்வியல் சூழலியலோடு இணைந்திருந்ததை அறியமுடிகிறது. புலரும் பொழுதில் கோழிக் கூவுதல் இயற்கையான நிகழ்வாகும். அந்த ஒலியை வைத்துப் பண்டைத் தமிழர்கள் காலத்தை அறிந்து அன்றாடப் பணிகளில் ஈடுபட்ட சூழலியல் நிலையைச் சங்க இலக்கியங்கள் வழி தெளிவுற உணரமுடிகிறது.

## 4.3. முன்னறிவிப்புச் செய்தலில் பறவைகள்

சங்க காலத் தமிழர்கள் பறவைகளோடு இயைந்த சூழலியலோடு வாழ்ந்தனர். பறவைகள் தங்கள் உணர்வு நிலைக்கு ஏற்பவும் காலநிலைக்கு ஏற்பவும் பல்வேறு ஒலிகளை எழுப்புகின்றன. அவ்வகையில் பறவைகளின் ஒலிகளைப் பற்றிய அறிவானது காலநிலைப் போக்கினை உணர்ந்து கொள்வதற்குத் துணை செய்கின்றன. பண்டைத் தமிழர் வாழ்வில் கணந்துள் (நற்.212; குறுந்.350; சிலம்பு.10) பறவையானது இன்றியமையாததாகக் காணப்படுகின்றது.

மக்கள் இதனை ஆள்காட்டி என்ற பெயரால் அழைக்கின்றனர். இது காரணப் பெயர். இது திரியும் பகுதிகளை மக்கள் நெருங்கும்போது உரக்கக் கத்தியபடி எழுந்து வட்டமிட்டுப் பறக்கும் பழக்கம் கொண்டது[17]

*என்று கணந்துள் பறவையின் இயல்பினை க.ரத்னம் குறிப்பிடுகின்றார். இதனை,*

ஆற்றுஅயல் இருந்த இருங்கோட்டு அம்சிறை
நெடுங்காற் கணந்துள் ஆள் அறிவுறீஇ
ஆறுசெல் வம்பலர் படைதலை பெயர்க்கும்
மலையுடைக் கானம் நீந்தி
நிலையாப் பொருள் பிணிப் பிரிந்திசினோரே[18]

*என்றுரைக்கின்றது குறுந்தொகை. மேலும்,*

கரைநின் றாலு மொருமயி ரனக்குக்
கம்புட் சேவற் கனைகுரன் முழவாக[19]

*என்கிறது மணிமேகலை. பாலை நிலத்தில் வாழும் கணந்துள் பறவை அங்கு வருகின்ற வழிப்போக்கர்களையும், ஆறலைக் கள்வர்களையும் பார்த்துக் குரல் எழுப்பும். இந்த குரலைக் கேட்ட வழிப்போக்கர்கள் தங்களைப் பாதுகாத்துக் கொண்டு விழிப்புணர்வுடன் செல்வர். வழிப்போக்கர்களை ஆறலைக் கள்வரிடமிருந்து காப்பாற்ற கணந்துள் பறவை குரல் பயன்பட்ட சூழலியலைச் சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது.*

தான் வாழும் வகையில் தன்னைத் தான் காத்துக் கொள்ள ஒரு உயிர் குரல் எழுப்பும். இது அதட்டும் ஒலி எனப்படும்[20]

*என்று சி.கு.சென்னகேசவலு சுட்டிக் காட்டுவதைப் பொருத்திப் பார்ப்பது சிறந்ததாகிறது.*

*பாலை நில மக்கள் வாழ்வியலில் கணந்துள் பறவை முன்னறிவிப்புச் செய்கின்ற பறவையாக, ஆறலை கள்வர்களிடமிருந்து தங்களையும், தன் உடைமைகளையும் பாதுகாத்துக் கொள்ள உதவுகின்ற ஆட்காட்டிப் பறவையாக வாழ்ந்த சூழலியல் நிலையைச் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறியமுடிகிறது.*

### 4.4. இறகுகளின் பயன்பாடுகள்

உலகில் காணப்படுகின்ற தாவரங்கள் அனைத்தும் இனப்பெருக்கம் அடைவதற்கு முழு முதல் காரணியாக அமைந்திருப்பது பறவைகள் ஆகும். தாவரங்களின் மகரந்த சேர்க்கைக்குப் பறவைகள் உதவிடுகின்றன. தாவரங்களை உணவாக உண்டு வாழும் பறவைகளின் கழிவுகள் புதியத் தாவரங்கள் பல்வேறு பகுதிகளிலும் முளைத்திட ஏதுவாகின்றன. பறவைகள் உண்ணும் பழங்களின் விதைகள் மரமாக, செடியாக, கொடியாக உலகின் பல்வேறு பகுதிகளில் வளர்கின்றன. பறவைகளின் இடப்பெயர்ச்சி (Bird Migration) இதற்குப் பெருந்துணை புரிகின்றது. பறவைகளின் இறகுகள் மனிதர்தம் வாழ்வில் பல்வேறு வகைகளில் பயன்படுகின்ற சூழலைச் சங்க இலக்கியங்களின்வழி அறியமுடிகிறது.

சங்க இலக்கியத்தில் மனிதர்களுக்குப் பயன்படும் வகையில் அன்னம், மயில் போன்ற பறவைகள் இடம்பெற்றுள்ளன. பறவைகளின் இறகுகள் மனிதர்களுக்குப் பல்வேறு வகைகளில் பயன்படுகின்றன. இறகுகள் என்பது பறவைகளின் தோலில் வெளிப்புறம் வளரும் மெல்லிய உறுப்புகள் ஆகும். இது மிகவும் மென்மையானதாய் அமைகிறது.

### 4.4.1. மயில்

இந்தியத் துணைக் கண்டத்தைப் பூர்விகமாகக் கொண்ட பறவை மயிலாகும். மயில் இந்தியாவின் தேசியப் பறவையாகக் காணப்படுகிறது.

**1963இல் மயிலைத் தேசியப் பறவையாக இந்திய அரசு அறிவித்தது**[21]

என்று க.ரத்னம் கூறுகிறார்.

மயிலுக்கு அழகு அதன் தோகைதான். தோகையை உடைய மயில் ஆண் இனங்களாகவும் தோகையில்லாத மயில் பெண் இனங்களாகவும் அறிவியலாளர் இனம் காண்பர். ஆண் மயிலின் கழுத்து, மார்பு, வயிறு பளபளக்கும் கருநீல நிறத்தில் காணப்படும். இறகுகள் கருநீலம், வெள்ளை, பழுப்பு நிறங்களில் வட்ட வடிவமாக அமைந்திருக்கும். பெண் மயிலுக்கு நீண்ட தோகை கிடையாது. இவற்றின் கழுத்துப் பளபளக்கும். பச்சை,

வெள்ளை, கருப்பு ஆகிய வண்ணங்களில் இறகுகளைக் கொண்டிருக்கும். ஆண் மயிலைவிட பெண் மயில் உருவத்தில் சிறியதாகக் காணப்படும்.

சங்க காலத்தில் மயிலின் தோகையினைப் பீலி (நற்.177; கலி.138; 140; அகம்.67; 69; 131; புறம்.232; 264) என்று அழைத்தனர். மயிற்தோகையினைச் சரணம், சிகண்டம், கூந்தல், சந்திரகம், கலாபம், கூழை, பீலி, தொங்கல், தூவி எனப் பல்வேறு பெயர்களில் வழங்குவர்.

#### 4.4.1.1. மடலேறுதலில் மயிலிறகு

சங்க இலக்கியத்தில் தலைவனின் காதலைத் தலைவியின் இல்லத்தார் ஏற்காமல் இருந்தால் மடலேறுதல் வழக்கமாக இருந்தது. காதல் கைகூடாமல், கற்பு வாழ்வில் இணைய முடியாத தலைவன் குதிரை வடிவத்தில் பனைமட்டையால் வடிவமைத்து, பல்வேறு மலர்களை மாலையாகச் சூடி மயிலின் தோகையினைச் சூடிக் கொண்டு அனைவரும் பார்க்கும்படி மடலேறுவான். இதனை,

> புன வரை இட்ட வயங்கு தார்ப் பீலி
> பிடி அமை நூலொடு பெய்ம் மணிகட்டி[22]

என்று கலித்தொகை பாடல் தெரிவிக்கின்றது. தலைவன் மடலேறுதலில் மயிலின் தோகையினை மாலையாக வடிவமைத்துக் காட்டுகின்ற சூழலியலைக் காணமுடிகிறது.

#### 4.4.1.2. நடுகல்லில் மயிலிறகு

போரில் இறந்துபட்ட வீரர்களுக்கு நடுகல் வைத்து வழிபடுவது சங்ககால மக்களின் மரபாகும். அத்தகைய வழிபாடுகளில் மயிலிறகுகள் இன்றியமையாத இடத்தைப் பெறுகின்றன.

> நடுகல்லைப் பீலியாலும் மலராலும் அணி செய்து; பல்லியம் ஒலிக்க
> விழவுச் செய்தல் தமிழர் மரபு[23]

என்று சு.சண்முகசுந்தரம் நடுகல்லில் இடம்பெறும் மயில் பீலியைக் குறிப்பிடுகின்றார். மேலும் இதனை,

> அணி மயிற்பீலி சூட்டி பெயர் பொறித்து
> இனி நட்டனரே கல்லும்[24]

என்று புறநானூற்றுப் பாடலும் குறிப்பிடுகின்றது. போரில் வீரமரணம் அடைந்த வீரர்களுக்கு வைக்கப்பட்ட நடுகல்லில் மயிலின் தோகையினை வைத்து வணங்குகின்ற சூழலியலை நாம் சங்க இலக்கியங்கள்வழி அறியமுடிகிறது.

### 4.4.1.3. வீரர்கள் சூடும் மாலையில் மயிலிறகு

வீரர்கள் போர் புரியச் செல்லும் போது அடையாளத்திற்காக மலர்களாலான மாலையினைத் தலையில் சூடியும், காதில் வைத்தும் போர்ப் புரிந்தனர். அத்தகைய வீரர்களின் போர்ச் சூழலில் மயிலிறகும் இடம்பெற்றிருந்தது. இதனை,

தோகைத் தூவித் தொடைத்தார் மழவர்[25]

என்று அகநானூற்றுப் பாடல் தெரிவிக்கின்றது. முசுண்டை மன்னனின் வீரர்கள் மயில் தோகையை மாலையாகச் சூடிக் கொண்ட நிகழ்வைக் காணமுடிகிறது.

குடை நிரைத்தலின் தழை நெருக்கலின்[26]

என்று கலிங்கத்துப்பரணியும் மன்னன் செல்கின்ற தேரில் காணப்படும் குடையானது மயிலின் தோகையால் செய்யப்பட்டிருந்ததைக் குறிப்பிடுகிறது.

### 4.4.1.4. வில்லில் காணப்படும் மயிலிறகு

அக்கால மக்கள் மயிலிறகினைத் தெய்வத் தன்மை வாய்ந்ததாகவும், கடவுள் உறையும் பொருளாகவும் நம்பினர். இதனை,

ஒல்கு இயல் மடமயில் ஒழித்த பீலி
வான்போழ் வல்வில் சுற்றி[27]

என்று அகநானூற்றுப் பாடல் கூறுகின்றது. வீரம், வன்மை, வேட்டையாடும் தன்மை கொண்ட வடுகர்கள் வில்லில் மயிலின் இறகினைச் சுற்றி அம்பினை எய்தனர். மயிலின் இறகினைக் கொண்டு அம்பு எய்தால் நினைத்த இடத்தில் துளைத்து வெற்றிதரும் என்ற நம்பிக்கை அக்கால வடுகர் மக்களிடம் காணப்பட்டதை அகநானூறு தெளிவுறுத்துகின்றது.

### 4.4.1.5. அடையாளங்களில் மயிலிறகு

பண்டையத் தமிழர்கள் வாணிபத்திற்காகவும், பொருள் ஈட்டுவதற்காகவும், பண்டமாற்று முறைக்காகவும் ஓர் ஊரிலிருந்து மற்ற ஊர்களுக்குச் செல்வது வழக்கமாகும். அவர்கள் செல்லுகின்ற வழிகளில் தடம் மாறாமல் இருக்க ஏதேனும் ஒரு பொருளை அடையாளமாக வைத்துச் செல்வர். இதனை,

பீலி சூட்டி மணி அணி பவ்வே[28]

என்ற நற்றிணைப் பாடல் குறிப்பிடுகிறது. தலைவன் பொருள் தேடச் சென்றதன் அடையாளமாக மயிலின் தோகையினை வைத்துவிட்டுச் செல்கிறான். தலைவி மயிலிறகினைப் பார்த்து அதனைப் புரிந்துக் கொள்கிறாள். மயிலிறகு தலைவன் தலைவி வாழ்வியலில் அடையாளப் பொருளாகக் காணப்படும் சூழலியலை உணரமுடிகிறது.

> மயிலின் பீலியைச் சங்க காலத்தில் சமயச் சடங்குகளுக்கும் பயன்படுத்தினர். வேலன் வெறியாட்டில் மயிற்பீலியைச் சூடினான். வேலிலும் வில்லிலும் முரசிலும் மயிலிறகைச் செருகி வைத்தல் அக்கால வழக்கமாகும். மயிலே தெய்வமேறி ஆடும் என்ற நம்பிக்கையும் இருந்தது. மயிற்பீலி தெய்வத் தன்மை வாய்ந்தது என்று கருதினர்[29]

என பி.எல்.சாமி குறிப்பிடுகின்றார். மயிலிறகு தெய்வத் தன்மையுடையதாயும் வெற்றியின் நம்பிக்கையாகவும் இருந்த மக்களின் வாழ்வியல் சூழலியலைச் சங்கப் பாடல்கள் எடுத்தியம்புகின்றன.

### 4.4.2. அன்னப்பறவை

சங்க இலக்கியத்தில் மிகக்குறைவாகக் காணப்படுகின்ற பறவைகளில் அன்னப்பறவையும் ஒன்றாகும். தற்காலத்திலும் இது அரிதாகவே காணப்படுகிறது. அன்னப்பறவைகளின் இறகுகள் மிருதுவாகக் காணப்படும். இதனை அக்கால மன்னர்கள் மெத்தைக்காகவும், தலையணிக்காகவும் பயன்படுத்தியுள்ளனர்.

### 4.4.2.1. மெத்தைகளில் அன்னப்பறவைகளின் இறகுகள்

*மன்னர்களின் அரண்மனையில் உறங்குவதற்காகப் பெரிய கட்டில் செய்யப்பட்டு அதில் அன்னப்பறவையின் இறகுகளைக் கொண்டு மெத்தை அமைத்தனர். இதனை,*

ஊட்டுறு பல்மயிர் விரைஇ[30]

*என்று நெடுநல்வாடை பாடலடி குறிப்பிடுகிறது. மன்னர்கள் அன்னப்பறவைகளின் இறகில் செய்த மெத்தையில் உறங்கியச் சூழலைக் காணமுடிகின்றது.*

### 4.4.2.2. தலையணையில் அன்னப்பறவையின் இறகுகள்

*அன்னப்பறவையின் இறகு மிருதுவாகக் காணப்படுவதால் தலையணைக்கும் பயன்படுத்தப்பட்டன. இதனை,*

ஐமென் தூவி அணைசேர்பு அசைஇ[31]

*என்று அகநானூறும்,*

இணைபுண ரெகினத் திளமயிர் செறிந்த
துணையணைப் பள்ளித் துயிலாற்றுப் படுத்தாங்கு[32]

*என்று சிலப்பதிகாரமும் தெரிவிக்கின்றன. தலையணைகளில் அன்னப்பறவையின் இறகுகளைக் கொண்டு அமைத்து வாழ்ந்த அக்காலச் சூழலியலை அறியமுடிகிறது.*

*தமிழர் வாழ்வியலில் மயிலின் இறகானது மடலேறுதல், நடுகல் வழிபாடு, வீரர்கள் மாலையாகச் சூடுதல், வில்லில் கட்டி அம்பு எய்தல், தலைவன் பொருள் தேடச் செல்வதற்கு அறிவிக்கும் அடையாளமாகப் பயன்படுத்திய வாழ்வியல் சூழலைக் காணமுடிகிறது. அன்னப்பறவைகளின் இறகுகள் மிக மிக மென்மையாக இருப்பதால் சிறந்த தூக்கத்திற்கு உதவிடும் என்னும் அனுபவ அறிவால் அக்கால மன்னர்கள், மக்கள் போன்றவர்கள் மெத்தைகளிலும், தலையணைகளிலும் பயன்படுத்தியுள்ளமையை அறியமுடிகிறது.*

### 4.5. விளையாட்டுகளில் பறவைகள்

*சங்க காலம் முதல் தற்காலம்வரை மக்கள் வாழ்வியலில் விளையாட்டு ஓர் அங்கமாகத் திகழ்கிறது. சிறுவர்கள் முதல் பெரியவர்கள்வரை அனைவரும் விளையாடுகின்ற சூழலைக் காணமுடிகிறது. மக்கள் விளையாட்டுகளில் பறவைகளும் இடம்பெறுகின்றன. சங்ககால மக்கள் கௌதாரி (பட்டின.77), குருகு (நற்.159), தம்பலப்பூச்சி (நற்.362), நாரை (அகம்.226) போன்ற பறவையினங்களோடு விளையாடினர்.*

### 4.5.1. போர்ப் பயிற்சிக்கான பறவைச் சண்டை

*சங்க காலத்தில் சிறுவர்கள் போர் பயிற்சிக்காகச் சண்டை செய்து விளையாடினர். சிறுவர்கள் இரு பிரிவாகப் பிரிந்து இருவருக்குமிடையே தாங்கள் வளர்த்த பறவையினைச் சண்டையிட்டு வெற்றிப் பெறுவது பறவைச் சண்டையாகும். அந்தப் பறவைச் சண்டைகளில் கௌதாரி, கோழி, காடை, பறவைகள் இடம்பெற்றன. இத்தகைய பறவைச் சண்டைகளை,*

> உறைக் கிணற்றுப் புறச்சேரி
> மேழகத் தகரொடு சிவல் விளையாட[33]

*என்று பட்டினப்பாலையும்,*

> பொறிப்புறப் பூழின் போர்வல் சேவல்[34]

*என்று புறநானூறும்,*

> செறிந்து ஒளிர் வெண்பல்லாய் யாம் வேறு இயைந்த
> குறும்பூழ்ப்போர் கண்டேம்; அனைத்தல்லது யாதும்
> அறிந்ததோ இல்லை நீ வேறு ஓர்ப்பது[35]

*என்று கலித்தொகையும்,*

> சூரற் புறவின் அணில் பிளிற்றுஞ்சூழ் படப்பை
> ஊர் கெழு சேவ லிதலொடு போர் திளைக்கும்[36]

*என்று ஐந்திணை எழுபதும் எடுத்துக்காட்டுகின்றன.*

*சிறுவர்களின் விளையாட்டுகளில் கௌதாரிக்கும் ஆட்டுக்கிடாய்க்கும் சண்டை வைத்து விளையாடப்பட்டது. குறும்பூழ் பறவைகளுக்குப் போர்ப் பயிற்சி சண்டையினைப் பயிற்றுவித்தார்கள். கோழிக்கும் காடைக்கும் சண்டை வைத்துள்ளனர் (கலி.95; புறம்.321). பறவைச் சண்டைகளின்*

*இறுதியில் எந்தப் பறவை வீழ்த்தப் பெறுகிறதோ அந்தப் பறவையே வெற்றி பெற்ற பறவையாக அறிவித்தனர்.*

### 4.5.2. பறவைகளை எண்ணி மகிழ்தல்

*சங்க காலத்தில் தலைவனைப் பிரிந்த தலைவி பொழுதினைப் போக்குவதற்குப் பூப்பறித்து விளையாடியும், விலங்குகளோடு பேசியும், பறவைகளை எண்ணி மகிழ்தலும் செய்து வந்தாள். இதனால் தலைவியின் மனம் அமைதியும், ஆறுதலும் பெற்றது. இதனை,*

மணி துணிந்தன்ன மா இரும் பரப்பின்
உரவுத் திரை கொழீஇய பூ மலி பெருந்துறை
நிலவுக் குவித்தன்ன மோட்டு மணல் இடிகரை
கோடு துணர்ந்தன்ன குருகு ஒழுக்கு எண்ணி
எல்லை கழிப்பினம் ஆயின்[37]

*என்றுரைக்கிறது நற்றிணைப் பாடல்.*

*தலைவனைப் பிரிந்த தலைவி தனிமையைக் கழிக்க பகலில் குருகு பறவைகளை எண்ணி மகிழும் சூழலியலைக் காணமுடிகிறது.*

### 4.5.3. தம்பலப்பூச்சியைப் பிடித்து விளையாடுதல்

*தலைவி தோழியுடன் இருக்கும்போது நீராடுதல், தினைப்புனம் காத்தல், பறவைகளை விரட்டுதல் போன்ற செயல்களில் ஈடுபடுகிறாள். இதனை,*

அணி மிகு கானத்து அகன் புறம் பரந்த
கடுஞ் செம்மூதாய் கண்டும், கொண்டும்
நீ விளையாடுக சிறிதே[38]

*என்று நற்றிணைப் பாடல் தெரிவிக்கின்றது.*

*தலைவி தோழியுடன் இருக்கும் போது தம்பலப்பூச்சியினைப் பிடித்து விளையாடுகிறாள். அவர்களின் அன்றாட வாழ்வியலில் பறவைகளும் ஓர் அங்கமாகத் திகழ்ந்த சூழலியலை அறியமுடிகிறது.*

### 4.5.4. நாரையை ஓட்டி விளையாடுதல்

*தலைவன் தலைவியின் அகவாழ்வில் பறவைகள் இன்றியமையாத இடம்பெறுகின்றன. அவர்களுடைய விளையாட்டில் வெண்ணிற நாரைகள் காணப்படுகின்றன. சங்க இலக்கியத்தில் மிகுதியான இடங்களில் இடம்பெறும் பறவைகளில் நாரையும் ஒன்றாகும்.*

குறுந்தொடி மகளிர் குரூஉப்புனல் முனையின்
பழனப் பைஞ்சாய் கொழுதி, கழனிக்
கரந்தைஅம் செறுவின் வெண்குருகு ஒப்பும்[39]

*என்று அகநானூற்றுப் பாடல், பெண்கள் வெண்ணிற நாரையினை ஓட்டி விளையாடும் சூழலியலைக் காட்டுகிறது.*

*அக்காலச் சமுதாயத்தில் சிறுவர்கள் கௌதாரி, கோழி, காடை போன்ற பறவைகளைச் சண்டையிடும் பறவையாகப் பழக்கி வைத்திருந்த சூழலை அறியமுடிகிறது. தலைவி தனிமையில் இருக்கும் போது பறவைகளை எண்ணி மகிழ்ந்த சூழலையும் காணமுடிகிறது. பெண்கள் தம்பலப்பூச்சியினைப் பிடித்தும், வெண்ணிற நாரையை விரட்டியும் விளையாடிய வாழ்வியல் சூழலியலைச் சங்க இலக்கியத்தில் பெரிதும் காணமுடிகிறது.*

### 4.6. நம்பிக்கை மற்றும் நிமித்தங்களில் பறவைகள்

*மக்கள் வாழ்வியலில் தாவரங்கள், விலங்குகள் இன்றியமையாததாக விளங்குவதுபோல் பறவைகளும் விளங்குகின்றன. அவர்களுடைய வாழ்வியல் சூழலியலில் நம்பிக்கைகள், நிமித்தங்கள் இன்றியமையாத இடம்பெற்றுள்ளன.*

நம்பிக்கைகள் மக்களால் உருவாக்கப்பட்டு, அம்மக்கள் சமுதாயத்தால் பாதுகாக்கப் படுகின்றன. மனிதனின் தன்னல உணர்வும் சமுதாய உணர்வுமே நம்பிக்கைகளை வளர்த்து வருகின்றன[40]

*என்று சு.சக்திவேல் நம்பிக்கைகள் குறித்து விளக்கமளிக்கிறார். மேலும்,*

நிமித்தம் என்பது வாழ்வில் நிகழவிருக்கும் நன்மை தீமைகளைச் சில குறியீடுகளின் வாயிலாக உணர்த்துவதாகும்[41]

*என்றும் சு.சக்திவேல் கூறுகிறார்.*

*தமிழர் வாழ்வில் நன்மைக்காகவும் தீமைக்காகவும் நம்பிக்கை, நிமித்தம் உருவாக்கப்பட்டிருந்தன. நிமித்தங்கள் பற்றித் தொல்காப்பியர்,*

நாளும் புள்ளும் பிறவற்றி னிமித்தமும்[42]

*என இலக்கணம் வகுக்கிறார். மக்களின் அன்றாட வாழ்வில் அவர்தம் நிலத்தைப் பொருத்து நம்பிக்கைகள் அமைந்திருந்தன.*

### 4.6.1. காகம்

*சங்க காலத்தில் காகம் கரைந்தால் விருந்தினர் வருவர் என்ற நம்பிக்கை மக்களிடத்தில் இருந்தது.*

> நிமித்தம் உணர்த்தக் கூடிய பறவை இனங்களில் முதன்மை காக்கைக்கு இருப்பதாக மக்களினம் கருதுகிறது[43]

*என்று கு.இராசரெத்தினம் காக்கைப் பற்றிய நம்பிக்கையைக் குறிப்பிடுகிறார். காகம் கரைந்தால் விருந்தினர் வருவார்கள் என்ற நம்பிக்கையில் அக்கால மக்கள் பலிச்சோறு கொடுத்தனர். இதனை,*

தோள் வலி யாப்ப ஈண்டு நம் வரவினைப்
புள் அறிவுறீ இயின கொல்லோ[44]

*என்று நற்றிணையும்,*

செஞ்சோற்ற பலி மாந்திய
கருங்காக்கை கவவு முனையின்[45]

*என்று பொருநராற்றுப்படையும்,*

பிண்டத் திரளையும் பேய்க்கிட்ட நீர்ச்சோறும்
உண்டற்கு வேண்டி நீ ஓடித் திரியாதே[46]

*என்று பெரியாழ்வார் திருமொழியும் தெளிவுறுத்துகின்றன. இவற்றிலிருந்து மக்கள் வாழும் பகுதிகளில் காகம் கரைந்ததையும், பலிச்சோறு கொடுத்தச் சூழலையும் உணரமுடிகிறது.*

> காக்கை ஒரு வட்டாரத்தைச் சார்ந்து வாழ்வதோடு அந்த வட்டாரத்தவர்களையும் அடையாளங் கண்டு கொள்ளும் நுட்பமான அறிவு கொண்டது[47]

*என்று க.ரத்னம் காகத்தின் நினைவாற்றலைக் குறிப்பிடுகிறார். இந்த நம்பிக்கை இன்றும் நிலவிவருகிறது.*

### 4.6.2. ஆந்தை

*மனிதர்களுக்கு அச்சத்தைக் கொடுக்கின்ற விரும்பத்தகாத ஒரு பறவை ஆந்தையாகும். இதன் அலறல் சத்தம் மனிதனுக்கு நன்மையும் தீமையும் கொடுக்கிறது.*

> ஆந்தையின் அலறலைக் கேட்டு அக்கால மக்கள் தமக்கு வரவிருக்கும் நன்மை தீமைகளை முன் கூட்டிக் கூறுவர். ஒருமுறை கூப்பிடுதல் சாவு, இரண்டானால் காரியம் கை கூடுதல், மூன்றானால் மனைவி வருதல், நான்கானால் கலகம், ஐந்தானால் பயணம், ஆறானால் அடுத்தவர் வரவு, ஏழானால் இழந்த பண்டம் கிட்டுதல், எட்டானால் சாவு, ஒன்பதும் பத்துமானால் நன்மை உண்டாகும் என்பர்[48]

*என்று சி.கு.சென்னகேசவலு ஆந்தையின் அலறல் குரலைப் பற்றி விளக்கம் தருகிறார்.*

> கடுங்குரற் குடிஞைய நெடும் பெருங்குன்றம்[49]

*என்று அகநானூற்றுப்பாடல் ஆந்தையின் அலறல் குறித்துக் குறிப்பிடுகின்றது. தலைவன் பொருள் தேடச் செல்லும்போது ஆந்தையின் குரலானது நல்நிமித்தமாகக் கருதப்பட்டச் சூழலை அறியமுடிகிறது.*

> ஆந்தையை முக்காலம் உணர்ந்த ஞானியாகக் கருதி இருடி என்றழைத்தனர். மேல் நாடுகளிலும் ஆந்தையை ஞானம் நிறைந்த பறவை (Bird of Wisdom) என்று கருதுவதுண்டு[50]

*என்று ஆந்தையின் ஞானம் குறித்து பி.எல்.சாமி குறிப்பிடுகிறார். ஆந்தையின் காலத்தைக் கணிக்கும் அறிவை இக்காலத்திலும் மக்கள் நம்பி வருகின்றனர்.*

### 4.6.3. குருகு

*சங்க இலக்கியத்தில் மிகுதியாக இடம்பெற்ற பறவைகளில் ஒன்று குருகு ஆகும். இந்த பறவை உயரமாகப் பறந்தால் நல்நிமித்தமாக அக்கால மக்கள் கருதினர்.*

> குருகும் இருவிசும்பு இவரும் புதலும்
> வரிவண்டு ஊதவாய் நெகிழ்ந்தனவே
> சுரிவளைப் பொலிந்த தோளும் செற்றம்
> வருவர் கொல் வாழி தோழி[51]

*என்றும்,*

யாரும் இல்லை தானே கள்வன்
தான் அது பொய்ப்பின் யான்எவன் செய்கோ
தினைத்தாள் அன்ன சிறுபசுங் கால
ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்
குருகும் உண்டு தான்மணந்த ஞான்றே[52]

என்றும் குருகின் இயல்பினைக் குறுந்தொகை பாடல்கள் தெரிவிக்கின்றன. குருகு பறவை உயரமாகப் பறப்பதால் பொருள் ஈட்டச் சென்ற தலைவன் விரைவில் வருவான் என்று நல்நிமித்தமாகத் தோழி தலைவிக்குக் கூறிய சூழலியலையும், தலைவன் தலைவி களவுக் காலத்திலும் இடம்பெற்ற சூழலியலையும் காணமுடிகிறது.

> புட்களில் காக்கை கரைதல், குயில் பயிரல், நாரை உயரப் பறத்தல் ஆகியன தலைவன் விரைவில் திரும்பி வருவான் என்பதற்கான நன்னிமித்தங்களாகும் எனத் தோழியாலும் தலைவியாலும் சுட்டப்படுகின்றன[53]

என்று நிர்மலாமோகன் குறிப்பிடுகிறார். மக்களின் அன்றாட வாழ்வியல் சூழலியலோடு குருகு இணைந்திருந்ததை அறிமுடிகிறது.

தமிழர் வாழ்வியலில் காகம், ஆந்தை, குருகு போன்ற பறவைகளும், பெயர் குறிப்பிடப்படாத பிற பறவைகளும் நிமித்தமாகவும், நம்பிக்கைகளாகவும் இடம்பெற்ற சூழலியல் நிலையைச் சங்க இலக்கியம் வாயிலாக அறியமுடிகிறது. காகம் விருந்தினர் வருவதை அறிவித்து, நல்ல செய்திகளைத் தரவேண்டுமென்பதற்காகப் பலிச்சோறு வழங்கியதை அறியமுடிகிறது. ஆந்தை அலறல் குரல் நன்மை, தீமை நிமித்தமாக அக்கால மக்களின் வாழ்வியலில் இடம்பெற்றிருந்ததைச் சங்க இலக்கியம் தெரிவிக்கின்றது. பொருள் தேடச் சென்ற தலைவன் வீட்டிற்கு வருவான் என்பதை அறிவுறுத்தும் விதமாகக் குருகு உயரமாகப் பறந்தது என்னும் நல்நிமித்தத்தையும் சங்க இலக்கியம் காட்சிப்படுத்துகிறது. மக்களின் அன்றாட வாழ்வில் ஒவ்வொரு சின்னச்சின்ன நிகழ்விலும் பறவையினங்கள் இரண்டறக் கலந்திருந்த சூழலியலைச் சங்க இலக்கியம் கண்முன் நிறுத்துகின்றது.

### 4.7. உணவும் பறவைகளும்

*தமிழர் வாழ்வியலில் தாவரங்கள், விலங்குகள், பறவைகள் உணவாகப் பயன்பட்டன. பறவைகளில் கோழி, ஈசல், காடை போன்றவற்றை அக்கால மக்கள் வளர்த்தும் வேட்டையாடியும் உணவாக உட்கொண்டு வாழ்ந்தனர். இதனை,*

வினைஞர் தந்த வெண்ணெல் வல்சி
மனைவாழ் அளகின் வாட்டொடும் பெறுகுவிர்[54]

*என்று பெரும்பாணாற்றுப்படையும்,*

நெடுங்கோட்டுப் புற்றத்து ஈயல்கொண்டி[55]

*என்று நற்றிணையும்,*

நெய்கனி குறும்பூழ் காயம் ஆக
ஆர் பதம் பெறுக[56]

*என்று குறுந்தொகையும்,*

ஈயல் பெய்து அட்ட இன்புளி வெஞ்சோறு[57]

*என்று அகநானூறும்,*

கரிக்குருவிக்குக் கண்ணியும் கொண்டு
கானாங் கோழிக்குப் பொறியும் கொண்டு[58]

*என்று திருக்குற்றாலக் குறவஞ்சியும் தெரிவிக்கின்றன.*

*மருதநில மக்களின் உணவு முறைகளிலொன்று வெண்ணெல் சோறு ஆகும். வெண்ணெல் சோறுடன் கோழி இறைச்சியினைப் பொரியலாகச் சமைத்து உண்டனர். வேட்டுவன் வேட்டையாடி கொண்டு வரும் பறவைகளில் ஈசலை உணவாக உண்கொண்டான் (நற்.59). தலைவன் வீட்டில் காடைக்கறி சமைத்து உண்டான் (குறுந்.389; அகம்.394; புறம்.119). வீட்டில் வசிக்கும் மனைவி புளிச்சோறுடன் ஈசலைச் சமைத்து உண்கிறாள் போன்ற மக்களின் உணவு சூழலியலைச் சங்க இலக்கியம் தெரிவிக்கின்றது.*

*மருத நிலத்தில் வாழ்கின்ற மக்களும், முல்லை நிலத்தில் வாழும் மக்களும் வீட்டில் வளர்க்கப்படும் பறவையினங்களையும், காட்டில் கண்ணி வைத்துப் பிடிக்கப்பட்ட பறவைகளையும் உணவாக உட்கொண்டு வாழ்கின்ற சூழலியலைச் சங்க இலக்கியத்தில் காணமுடிகிறது. அந்தந்த நிலத்தின்*

தன்மைக்கேற்பவும் சூழலுக்கேற்பவும் உணவுமுறை அமைந்துள்ளது. அக்கால மக்கள் உணவுகளில் கோழி, ஈசல், கானாங்கோழி, காடை போன்ற பறவைகள் இடம்பெற்றிருந்ததை அறியமுடிகிறது. சூழலியலில் உணவுச் சங்கிலி அடிப்படையான ஒன்றாகும். சங்ககால மக்கள் வாழ்வில் பறவைகள் உணவாக இடம்பெறும் சூழலியல் நிலையை சங்ககால இலக்கியங்கள் தெளிவுறுத்துகின்றன.

### 4.8. வளர்ப்புப் பறவைகள்

பண்டைத் தமிழர்கள் இயற்கை, விலங்குகள், பறவைகள் போன்றவற்றுடன் இயைந்த வாழ்வை மேற்கொண்டனர். தங்கள் வீட்டில் தாவரங்களை வளர்த்து இயற்கை வளத்தைப் பாதுகாத்தனர். விலங்குகளை வீட்டிற்குப் பாதுகாப்பாகவும், வேட்டையாடவும் வளர்த்தனர். பறவைகளை அழகுக்கும், மன அமைதிக்கும் வளர்த்து வந்தனர். இதனை,

> சங்க காலத்தில் வீட்டில் வளர்க்கப்பட்ட பறவைகள் கோழி, கிளி, மயில் ஆகியவையாகும்[59]

என்று பி.எல்.சாமி குறிப்பிடுகிறார். வீட்டில் பறவைகளை வளர்க்கும் வழக்கம் சங்ககாலம் தொடங்கி இன்றுவரை நிலவிவருகிறது.

#### 4.8.1. கிளி

பறவை இனங்களில் அழகிய ஒரு பறவை கிளி ஆகும். இப்பறவை இலக்கியத்திலும் புராணங்களிலும் தவறாமல் இடம்பெறுகிறது. அதன் பச்சை நிறமும் சிவந்த அலகும் காண்பவர் கவரும் தன்மையைக் கொண்டவையாகும்.

> பண்டைக் காலம் முதற்கொண்டே கிளி இந்திய நாட்டு மக்களால் கூண்டுப் பறவையாக வளர்க்கப்பட்டு வருகிறது[60]

என்று சி.கு.சென்னகேசவலு குறிப்பிடுகிறார்.

> ஒண்சுவர் நல்இல் உயர்திணை இருந்து
> பைங்கிளி மிழற்றும் பால்ஆர் செழுநகர்[61]

என்று பட்டினப்பாலையும்,

> கிள்ளையும் கிளை எனக்கூவும் இளையோள்[62]

என்று நற்றிணையும்,

செந்தார்ப் பைங்கிளி முன்கை ஏந்தி[63]

என்று அகநானூறும்,

கழல் மல்கு பந்தொடுஅம் மானைமுற்றில்
கற்றவர் சிற்றிடைக் கன்னிமார்கள்
பொழில் பல்கு கிள்ளையைச் சொல் பயிற்றும்
புகலிநி லாவிய புண்ணியனே[64]

என்று திருஞானசம்பந்தர் தேவாரப் பாடலும் கிளியின் வளர்ப்பினை எடுத்துரைக்கின்றன.

தலைவி வீட்டில் வளர்ப்புப் பறவையாகக் கிளி வளர்ப்பதும், அதற்குப் பேச்சு பழக்குவித்தலும், பேசுகின்ற கிளிகளிடம் கொஞ்சி மகிழ்ந்த சூழலையும் காணமுடிகிறது.

கிளிகளின் பல்வேறு வகைகள் உரோமானிய மகளிரின் அன்பிற்குரிய கூண்டுப் பறவைகளாயின[65]

என்று பி.டி.சீனிவாச அய்யங்கார் குறிப்பிடுகிறார். தலைவியுடன் மிக நெருக்கமாகப் பழகுகின்ற பறவைகளில் கிளி தலையாய இடத்தைப் பெறுகிறது.

### 4.8.2. கோழி

மக்களால் மிகுதியாக வளர்க்கப்படுகின்ற பறவையினங்களில் கோழி ஒன்றாகும். இன்றும் கிராம மக்களின் வீட்டில் கோழிகள் வளர்க்கப்படுகின்ற சூழலைக் காணமுடிகிறது. வீட்டில் பாதுகாப்பிற்காகவும், இறைச்சிக்காகவும் கோழிகள் வளர்க்கப்படுகின்றன. வீட்டிற்கு வரும் பூச்சியினங்கள், தேள், பாம்பு போன்றவற்றை வீழ்த்தும் தன்மை கோழியிடம் காணப்படுகின்றது. இதனை,

மனைஉறை கோழிக் குறுங்காற் பேடை[66]

என்று குறுந்தொகைப் பாடலும்,

மனைஉறை கோழி மறனுடைச் சேவல்[67]

என்று அகநானூற்றுப் பாடலும் தெரிவிக்கின்றன. தலைவி வீட்டில் கோழிகள் வளர்க்கப்பட்ட ஆரோக்கியமான சூழலியலை உணரமுடிகிறது.

### 4.8.3. அன்னம்

வீட்டில் வளர்க்கப்படும் பறவைகளில் அன்னப்பறவையும் ஒன்றாகும். அன்னத்தின் மெல்லிய இறகினைக் கொண்டு மெத்தையும், தலையணையும் செய்தனர். இதனை,

துறைவிட்டன்ன தூமயிர் எகினம்
துணையோடு திளைக்கும் காப்புடை வரைப்பில்[68]

என்று அகநானூற்றுப் பாடல் கூறுகிறது. தலைவியின் வீட்டின் முன்பு ஆண், பெண் அன்னப்பறவைகள் விளையாடிய அன்பு சூழலியலைக் காணமுடிகிறது.

சங்ககாலத்தில் மனிதனின் அன்றாட வாழ்வு நிகழ்வுகளோடு பறவையினங்கள் வாழ்ந்த சூழலியல் காட்சிகளை சங்க இலக்கியம் புலப்படுத்துகின்றது. வீட்டில் கோழி, கிளி, அன்னம் போன்ற பறவைகளை அக்கால மக்கள் வளர்த்துள்ளதைக் காணமுடிகிறது. உணவுக்காகவும் பாதுகாப்பிற்காகவும் பொழுதுபோக்கிற்காகவும் பறவைகளை வளர்த்து நல்ல ஆரோக்கியமான வாழ்வியல் சூழலியலைச் சங்க இலக்கியம் வாயிலாகத் தெளிவுற உணரமுடிகிறது.

### 4.9. காதல் உணர்வுகளை வெளிப்படுத்துதல்

மனிதர் வாழ்வில் காதலும் வீரமும் இரண்டறக் கலந்தனவாகக் காணப்படுகின்றன. அகவாழ்க்கை காதலையும் புறவாழ்க்கை வீரத்தையும் அடிப்படையாகக் கொண்டு அமைகின்றன. தலைவன் தலைவியின் அகவாழ்வில் காதலை உணர்வதற்கு விலங்குகளும் பறவைகளும் இன்றியமையாததாகத் துணைபுரிகின்றன. அவற்றிலும் பறவைகள் சிறப்பிடம் பெறுகின்றன. தலைவி, தலைவன் பிரிவைத் தாங்க முடியாமல் அருகே உள்ள பறவைகளிடம் பேசுதல் பண்டைய இலக்கியங்களில் மரபாக உள்ளன. இதனை,

சிறு வெள்ளாங் குருகே! சிறு வெள்ளாங் குருகே!
துறைபோகு அறுவைத் தூ மடி அன்ன
நிறம் கிளர் தூவிச் சிறு வெள்ளாங் குருகே[69]

என்று நற்றிணையும்,

ஒள் இழை உயர்மணல் வீழ்ந்தென

வெள்ளாங் குருகை வினவுவோளே[70]

*என்று ஐங்குறுநூறும்,*

அன்னச் சேவல்! அன்னச் சேவல்!

ஆடுகொள் வென்றி அடு போர் அண்ணல்

நாடு தலை அளிக்கும் ஒள் முகம் போல[71]

*என்று புறநானூற்றுப் பாடலும் தெரிவிக்கின்றன.*

பேடைக் குயிலொன்று பெட்புறவோர் வான்கிளையில்

வீற்றிருந்த ஆண்குயில்கள் மேனி புளகமுற

ஆற்றல் அழிவுபெற உள்ளத் தனல் பெருக[72]

*என்று குயில்பாட்டில் குயிலின் மூலம் காதல் உணர்வை பாரதியார் தெரிவிக்கின்றார்.*

*தலைவி, தான் படுகின்ற துன்பத்தைத் தலைவனிடம் சொல்ல வேண்டும் என்ற குருகு பறவையிடம் பேசுகிறாள். கடற்கரையில் தலைவியின் அணிகலன் காணாமல் போனதை அங்கு சுற்றித் திரியும் குருகிடம் தலைவி கேட்கிறாள். கோப்பெருஞ்சோழனின் இயல்புகளைப் பிசிராந்தையார் அன்னச் சேவலிடம் கூறுகிறார். புதுவையில் மாமரத்தில் இரண்டு குயில்கள் காதலிப்பது போல் பேசுகின்ற சூழலைப் பாரதியார் குறிப்பிடுகிறார்.*

*தலைவி தலைவனின் பிரிவைப் போக்குவதையும் அதனைப் பறவைகள் மூலம் தலைவனுக்கு உணர்த்திய சூழலையும் அறியமுடிகிறது. தம் மனதில் ஏற்படும் வருத்தத்தைப் பறவைகள் மூலம் போக்கும் உளவியல் சார்ந்த சூழலியலோடு தலைவி வாழ்ந்து வந்ததைக் காணமுடிகிறது.*

### 4.10. பறவைகளை நேசித்தல்

*சங்க காலத் தமிழர்கள் மனித நேயத்துடன் பிற உயிரினங்களை நேசித்து வாழ்ந்து வந்தனர். அவர்கள் செல்லுகின்ற வழிகளில் பறவைகள் படுகின்ற இன்னல்களைக் கண்டு இரக்கங்கொண்டு, அவற்றைப் போக்கினர். தற்காலத்திலும் பறவைகள் சாலையோரங்களில் அடிபட்டால் மனிதர்கள்*

காப்பாற்றுகின்ற நற்செயலைக் காணமுடிகிறது. குருகின் இன்னலைப் போக்கும் செயலை,

பனிப் புதல் ஈங்கை அம்குழை வருட
சிறை குவிந்திருந்த பைதல் வெண்குருகு
பார்வை வேட்டுவன் காழ் களைந்தருள்[73]

என்றுரைக்கிறது நற்றிணை. வேட்டுவன் செல்லுகின்ற வழியில் குருகு பறவையானது இண்டங்கொடியால் பின்னப்பட்டுத் துன்பமடைவதைத் தலைவன் காண்கிறான். அவன் அந்த இண்டங்கொடியை எடுத்துவிட்டுக் குருகின் துன்பத்தைப் போக்கியச் சூழலியலை அறியமுடிகிறது.

சங்க இலக்கியத்தில் புராணக் கதைகளும் இடம்பெறுகின்றன. பேகன் மயிலுக்குப் போர்வைத் தருதலும், சிபிச் சக்கரவர்த்தி புறாவிற்காகத் தன் தசையைக் கொடுத்தலும் சங்க இலக்கியத்தில் இடம்பெறுகின்றன.

கான மஞ்ஞைக்குக் கலிங்கம் நல்கிய
அருந்திறல் அணங்கின் ஆவியர் பெருமகன்
பெருங்கல் நாடன் பேகனும்[74]

என்று சிறுபாணாற்றுப்படையும்,

கூர் உகிர்ப் பருந்தின் ஏறு குறித்து ஒரீஇ
தன் அகம் புக்க குறு நடைப்புறவின்
தபுதி அஞ்சிச் சீரை புக்க
வரையா ஈகை உரவோன் மருக[75]

என்று புறநானூற்றுப் பாடலும் புராணக் கருத்துக்களைத் தெரிவிக்கின்றன. மயிலின் குளிரைப் போக்குவதற்குப் பேகன் போர்வை தந்ததையும், பருந்திடமிருந்து காப்பாற்ற புறாவிற்கு இணையாகத் தன்னுடைய தசையினையும் உயிரையும் சிபிச் சக்கரவர்த்தி கொடுத்துப் பறவைகளுக்காகத் தன் உயிரையே தந்த உயர் பண்பினைச் சங்கப் பாடல்கள் தெளிவுறுத்துகின்றன.

தமிழர்கள் சக மனிதர்களை மட்டும் நேசிப்பதோடு மட்டுமல்லாமல் பிற உயிரினங்களையும் நேசிக்கும் உள்ளத்தன்மை கொண்டவர்களாகக் காணப்படுகின்ற சூழலியல் வாழ்வை உணர முடிகிறது. அன்பு ஒன்றுதான் மனிதர்களை மாமனிதர்களாக மாற்றுகின்ற உயர்ந்த சூழலியல் நிலை என்னும்

*சிறந்த வாழ்வியல் சூழலியலைச் சங்க இலக்கியம் வாயிலாக அறிந்து இன்புற முடிகிறது.*

### 4.11. தூது அனுப்புதலில் பறவைகள்

*சங்க இலக்கியத்தில் தலைவன் தலைவி வாழ்விலும், போர்களிலும் தூது அனுப்புவது மரபாகும். மன்னர்கள் போர் ஏற்படாமல் இருக்க எதிரி நாட்டு மன்னரிடம் ஒருவரைத் தூதாக அனுப்பி போர் ஏற்படுவதைத் தவிர்ப்பர். தலைவன் பொருளீட்டச் சென்றால் தலைவி தனிமையில் வருந்தி உடல் இளைத்துக் காணப்படுவாள். அந்நேரம் தலைவன் விரைந்து வர வேண்டும் என்று தலைவி அஃறிணை உயிர்களைத் தூதாக அனுப்புகிறாள்.*

இயம்புகின்ற காலத்து எகினம் மயில் கிள்ளை
பயம்பெறு மேகம் பூவை பாங்கி நயந்த குயில்
பேதை நெஞ்சம் தென்றல் பிர மரம் ஈரைந்தும்
தூதுரைத்து வாங்கும் தொடை[76]

*என்று இரத்தினச் சுருக்கம் தூதிற்கு இலக்கணம் வகுக்கிறது. அஃறிணை உயிரான எகினம், மயில், கிளி, குயில் போன்ற பறவைகளும் தூதாக அனுப்புதலில் சிறப்பிடம் பெற்றுள்ளன.*

*பண்டைத் தமிழர்கள் போர்ச் சூழலிலும் தலைவன் தலைவி பிரிவுச் சூழலிலும் தூது அனுப்புதல் இயல்பாகும்.*

கொடுங் குரற் குறைத்த செவ்வாய்ப் பைங்கிளி
அஞ்சல் ஓம்பி ஆர் பதம் கொண்டு
நின் குறை முடித்த பின்றை என் குறை
செய்தல் வேண்டுமால் கை தொழுது இரப்பல்
பல் கோட் பலவின் சாரல் அவர் நாட்டு
நின் கிளை மருங்கின் சேறி ஆயின்
அம்மலை கிழவோற்கு உரைமதி - இம்மலைக்
கானக் குறவர் மட மகள்
ஏனல் காவல் ஆயினள் எனவே[77]

*என்று நற்றிணையும்,*

செய்பொருள் தரல் நசைஇச் சென்றோர்

எய்தினரால் என வரூஉம் தூதே[78]

*எனவும்,*

துறத்தல் வல்லியோர் புள்வாய்த் தூதே[79]

*எனவும் குறுந்தொகையும்,*

வருவர் ஆயினோ நன்றே வாராது

அவணர் காதலர் ஆயினும் இவண் நம்

பசலை மாய்தல் எளிது மன் தில்ல

சென்ற தேஎத்து செய்வினை முற்றி

மறுதரல் உள்ளத்தர் எனினும்

குறுகுபெரு நசையொடு தூதுவரப் பெறின்[80]

*என்று அகநானூறும்,*

கோதையார் சூடிக் கொடுத்து வரவிட்ட

தாதையார் மாலைதனைத் தம்மின் என்பாய்[81]

*என அழகர் கிள்ளை விடு தூதும், தூதின் சிறப்பியல்புகளைப் பட்டியலிடுகின்றன.*

*தலைவி கிளியிடம், "நான் தினைப்புனம் காவல் காத்துக் கொண்டிருக்கிறேன், தலைவனை வந்து பார்க்கச் சொல்" என்று தூது அனுப்புகிறாள். தலைவன் தலைவிக்குத் தூது அனுப்பினால் மகிழ்ச்சி அடைதலும், தூது அனுப்பாமல் இருந்தால் வருத்தமடைதலும் எனும் வாழ்வியல் நிலையைச் சங்க இலக்கியங்கள் புலப்படுத்துகின்றன.*

*தலைவன் தலைவி வாழ்வியலில் தூது அனுப்புதலில் தலைவி, மனநிறைவும், ஆறுதலும் அடைகிறாள். தலைவன் விரைவில் தன்னைக் காண வருவான் என்று நம்புகின்ற பறவைகளோடு தொடர்புடைய சூழலியலை, அறியமுடிகிறது. அக வாழ்வில் தூது அனுப்புவதற்குக் காரணம் பிரிவு ஆகும். இந்த பிரிவைப் போக்குவதற்கு அஃறிணை உயிரினங்களாகிய பறவைகள் தூதாக அனுப்பப்பட்ட சூழலியல் நிலைகளை சங்க இலக்கியங்களில் காணமுடிகின்றது.*

## 4.12. தொகுப்புரை

அக்காலத் தமிழர்கள் இறைவழிபாட்டில் நம்பிக்கையுடையவர்களாக இருந்திருக்கின்றனர். அவர்கள் வணங்கும் கடவுளாகக் கருதப்பட்ட முருகன், திருமால் போன்றவர்களுக்குப் பறவைகள் ஊர்தியாகவும் கொடியாகவும் இடம்பெற்றிருந்த சூழலியலைக் காணமுடிகிறது. பறவைகளின் ஒலியை வைத்துக் கொண்டு பண்டைத் தமிழர்கள் காலத்தை அறிந்து அன்றாடப் பணிகளில் ஈடுபட்ட சூழலியல் நிலையைச் சங்க இலக்கியங்கள்வழி தெளிவுற உணரமுடிகிறது. ஆறலைக் கள்வர்களிடமிருந்து தங்களையும், தன் உடைமைகளையும் பாதுகாத்துக் கொள்ள உதவுகின்ற ஆட்காட்டிப் பறவையாகக் கணந்துள் பறவை வாழ்ந்த சூழலியல் நிலையை அறியமுடிகிறது.

தமிழர் வாழ்வியலில் மயிலின் இறகானது மடலேறுதல், நடுகல் வழிபாடு, வீரர்கள் மாலையாகச் சூடுதல், வில்லில் கட்டி அம்பு எய்தல், தலைவன் பொருள் தேடச் செல்வதற்கு அறிவிக்கும் அடையாளமாகவும், அன்னப்பறவை இறகுகளை மன்னர்கள், மக்கள் போன்றவர்கள் மெத்தைகளிலும், தலையணைகளிலும் பயன்படுத்தியுள்ளமையையும் அறியமுடிகிறது. அக்காலச் சமுதாயத்தில் சிறுவர்கள் கௌதாரி, கோழி, காடை போன்ற பறவைகளை சண்டையிடும் பறவையாகப் பழக்கி வைத்திருந்த சூழலை அறியமுடிகிறது. தலைவி தனிமையில் இருக்கும்போது பறவைகளை எண்ணி மகிழ்ந்த சூழலையும் காணமுடிகிறது.

தமிழர் வாழ்வியலில் காகம், ஆந்தை, குருகு போன்ற பறவைகளும், பெயர் குறிப்பிடப்படாத பிற பறவைகளும் நிமித்தமாகவும், நம்பிக்கைகளாகவும் இடம்பெற்ற சூழலியல் நிலையைச் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறியமுடிகிறது. அக்கால மக்கள் உணவுகளில் கோழி, ஈசல், கானாங்கோழி, காடை போன்ற பறவைகள் இடம்பெற்றிருந்ததை அறியமுடிகிறது. அக்கால மக்களின் வீட்டில் கோழி, கிளி, அன்னம் போன்ற பறவைகளை வளர்த்துள்ளதைக் காணமுடிகிறது.

தலைவி தம் மனதில் ஏற்படும் வருத்தத்தைப் பறவைகள் மூலம் போக்கும் உளவியல் சார்ந்த சூழலியலோடு வாழ்ந்து வந்ததை உணரமுடிகிறது. தமிழர்கள் சக மனிதர்களை மட்டும் நேசிப்பதோடு மட்டுமல்லாமல் பிற உயிரினங்களையும் நேசிக்கும் உள்ளத்தன்மை கொண்டவர்களாகக் காணப்படுகின்ற சூழலியல் வாழ்வை அறியமுடிகிறது. தலைவன் தலைவி வாழ்வியலில் தூது அனுப்புதலில் தலைவிக்கு மனநிறைவும், ஆறுதலும் கிடைக்கின்ற சூழலியல் வாழ்வியலைச் சங்க இலக்கியங்கள் காட்சிப்படுத்துகின்றன.

மக்களின் அகவாழ்விலும் புறவாழ்விலும் பறவையினங்கள் இரண்டறக் கலந்திருப்பதால் சங்க சமூகம் உயர்வுடையதாகிறது. உணவிற்கும் பாதுகாப்பிற்கும் பறவைகளும் மனிதனைச் சார்ந்து வாழ்ந்திருந்தன. மனிதனின் அன்றாட வாழ்வில் தனது பல்வேறு செயல்களுக்குப் பறவைகள் பெருந்துணை புரிகின்றன. சூழலியலின் உயிரினச் சங்கிலியில் மனிதனுக்கும் பறவைகளுக்குமிடையேயான உன்னத உறவு நிலையிலமைந்த சூழலியல் காரணிகளைச் சங்க இலக்கியம் தெளிவுற எடுத்தியம்புகின்றது.

## சான்றெண் குறிப்புகள்

1. சி.கு.சென்னகேசவலு, **ஐந்திணைப் பறவைகள்,** ப.9.
2. ச.சுபாஷ் சந்திரபோஸ் (உ.ஆ.), **தொல். பொருளதிகாரம்,** நூ.621.
3. இரா.மோகன் (உ.ஆ.), **திருமுருகாற்றுப்படை,** பா.151.
4. மேலது., பா.122.
5. வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை, கடவுள் வாழ்த்து,** ப.5.
6. பெ.சுப்பிரமணியன் (உ.ஆ.), **பரிபாடல்,** பா.8:67.
7. செ.உலகநாதன் (உ.ஆ.), **மதுரை மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழ்,** பா.5:5.
8. சி.கு.சென்னகேசவலு, **ஐந்திணைப் பறவைகள்,** ப.9.
9. மேலது., ப.90.
10. இரா.மோகன் (உ.ஆ.), **பெரும்பாணாற்றுப்படை,** பா.155.
11. வி.நாகராசன் (உ.ஆ.), **மதுரைக்காஞ்சி,** பா.673.
12. வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை,** பா.157:1-4.
13. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு,** பா.28:8-10.
14. மேலது., பா.398:3.
15. மேலது., பா.395:9-11.
16. ஞா.மாணிக்கவாசகன் (உ.ஆ.), **சிலப்பதிகாரம்,** பா.6:116.
17. க.ரத்னம், **தமிழ்ச் செவ்வியல் இலக்கியத்தில் பறவைகள்,** ப.44.
18. வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை,** பா.350:4-8.
19. துரை.தண்டபாணி (உ.ஆ.), **மணிமேகலை,** பா.4:11-12.
20. சி.கு.சென்னகேசவலு, **ஐந்திணைப் பறவைகள்,** ப.21.
21. க.ரத்னம், **தமிழ்ச் செவ்வியல் இலக்கியத்தில் பறவைகள்,** ப.121.
22. அ.விசுவநாதன் (உ.ஆ.), **கலித்தொகை,** பா.140:5-6.
23. சு.சண்முகசுந்தரம், **சங்க இலக்கிய வரலாறு,** ப.577.
24. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு,** பா.264:3-4.
25. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு,** பா.249:12.
26. புலியூர்க்கேசிகன் (உ.ஆ.), **கலிங்கத்துப்பரணி,** பா.347:1.
27. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு,** பா.281:4-5.
28. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை,** பா.177:6.

29. பி.எல்.சாமி, **சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம்,** ப.201.

30. வி.நாகராசன் (உ.ஆ.), **நெடுநல்வாடை,** பா.128.

31. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு,** பா.289:13.

32. ஞா.மாணிக்கவாசகன் (உ.ஆ.), **சிலப்பதிகாரம்,** பா.27:208-209.

33. வி.நாகராசன் (உ.ஆ.), **பட்டினப்பாலை,** பா.76-77.

34. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு,** பா.321:1.

35. அ.விசுவநாதன் (உ.ஆ.), **கலித்தொகை,** பா.95:5-7.

36. ஞா.மாணிக்கவாசகன் (உ.ஆ.), **ஐந்திணை எழுபது,** பா.33:1-2.

37. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை,** பா.159:1-5.

38. மேலது., பா.362:4-6.

39. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு,** பா.226:4-6.

40. சு.சக்திவேல், **நாட்டுப்புற இயல் ஆய்வு,** ப.188.

41. மேலது., ப.213.

42. ச.சுபாஷ் சந்திரபோஸ் (உ.ஆ.), **தொல்காப்பியம் பொருளதிகாரம்,** நூ.88:17.

43. கு.இராசரெத்தினம், **சங்க இலக்கியத்தில் பொதுமக்கள்,** ப.154.

44. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை,** பா.161:8-9.

45. இரா.மோகன் (உ.ஆ.), **பொருநராற்றுப்படை,** பா.183-184.

46. வி.என்.தேவநாதன் (ப.ஆ.), **நாலாயிர திவ்வியப் பிரபந்தம், பெரியாழ்வார் திருமொழி,** பா.168:1-2.

47. க.ரத்னம், **தமிழ்ச் செவ்வியல் இலக்கியத்தில் பறவைகள்,** ப.34.

48. சி.கு.சென்னகேசவலு, **ஐந்திணைப் பறவைகள்,** ப.47.

49. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு,** பா.19:5.

50. பி.எல்.சாமி, **சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம்,** ப.311.

51. வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை,** பா.260:1-4.

52. மேலது., பா.25:1-5.

53. நிர்மலா மோகன் (தொ.ஆ.), **சங்க இலக்கியச் சால்பு,** ப.113.

54. இரா.மோகன் (உ.ஆ.), **பெரும்பாணாற்றுப்படை,** பா.255-256.

55. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை,** பா.59:2.

56. வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை,** பா.389:1-2.

57. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு,** பா.394:5.

58. புலியூர்க்கேசிகன் (உ.ஆ.), **திருக்குற்றாலக் குறவஞ்சி,** பா.7:13-14.

59. பி.எல்.சாமி, **சங்க இலக்கியத்தில் புள்ளின விளக்கம்,** ப.373.

60. சி.கு.சென்னகேசவலு, **ஐந்திணைப் பறவைகள்,** ப.27.

61. வி.நாகராசன் (உ.ஆ.), **பட்டினப்பாலை,** பா.263-264.

62. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை,** பா.143:5.

63. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு,** பா.34:14.

64. சதாசிவ செட்டியார் (உ.ஆ.), **திருஞானசம்பந்தர் தேவாரம்,** பா.2:1-4.

65. கா.கோவிந்தன், **பி.டி.சீனிவாச அய்யங்காரின் தமிழர் வரலாறு,** பாகம் 1, ப.356.

66. வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை,** பா.139:1.

67. இரா.செயபால்(உ.ஆ.), **அகநானூறு,** பா.277:15.

68. மேலது., பா.34:12-13.

69. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை,** பா.70:1-3.

70. அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), **ஐங்குறுநூறு,** பா.122:2-3.

71. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு,** பா.67:1-3.

72. கமலாமுருகன் (உ.ஆ.), **குயில்பாட்டு,** பா.1:12-13.

73. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை,** பா.312:2-4.

74. இரா.மோகன் (உ.ஆ.), **சிறுபாணாற்றுப்படை,** பா.85-87.

75. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **புறநானூறு,** பா.43:5-8.

76. ஆறுமுகநாவலர் (உ.ஆ.), **இரத்தினச் சுருக்கம்,** பா.7.

77. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), **நற்றிணை,** பா.102:1-9.

78. வி.நாகராசன் (உ.ஆ.), **குறுந்தொகை,** பா.254:6-7.

79. மேலது., பா.265:5.

80. இரா.செயபால் (உ.ஆ.), **அகநானூறு,** பா.333:17-22.

81. தி.சங்குப்புலவர்(உ.ஆ.), **கிள்ளை விடு தூது,** பா.235:5-6.

# முடிவுரை

சங்க இலக்கியங்கள் பாட்டும் தொகையும் என்று அழைக்கப்படுகின்றன. தமிழர்தம் வாழ்வியலைச் சங்க இலக்கியங்கள் அழகுற எடுத்தியம்புகின்றன. மிக நுட்பமாகவும், ஆழமாகவும் அக்கால மக்களின் வாழ்வியல் சூழலியல் குறித்தப் பதிவுகள் சங்க இலக்கியங்களில் வெகுவாகக் காணக்கிடக்கின்றன. இலக்கியங்கள் தாம் படைக்கப்படும் கால, சமுதாயச் சூழலைப் பின்புலமாகக் கொண்டுள்ளன. படைப்பாளர்கள் காலம், இடம், இயற்கை, பண்பாட்டுச் சூழல் முதலியவற்றைப் பின்புலமாகக் கொண்டு தம் கருத்துக்களைப் பதிவு செய்கின்றனர்.

சங்க இலக்கியங்கள் இயற்கையோடு இயைந்து வாழ்ந்த மக்களின் வாழ்வியல் பின்புலங்களை வெளிப்படுத்துகின்றன. முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் ஆகியவை கால, இடச்சூழலை மையமாகக் கொண்டே கட்டமைக்கப்பட்டுள்ளன. மனித வாழ்வியலை வெளிப்படுத்தும் இலக்கியங்கள் அம்மக்களின் சூழலியலையும் பதிவு செய்கின்றன. மக்களின் அகம் மற்றும் புறம் பற்றிய வாழ்வியல், சூழலியலோடு பின்னப்பட்டிருப்பதைப் புலவர்கள் தெள்ளிதின் அறிந்து வைத்திருந்தனர். சங்க இலக்கியங்கள் அக்கால மக்களின் வாழ்வியலில் இரண்டறக் கலந்த சூழலியல் காரணிகளாகியத் தாவரங்கள், விலங்குகள், பறவைகள் போன்றவற்றை இயல்பாக வெளிப்படுத்துகின்றன.

மரங்கள், செடிகள், கொடிகள், விலங்குகள், பறவைகள், தட்பவெப்பநிலை போன்றவைக்கும் மனிதனுக்கும் இடையேயுள்ள உறவுமுறை அல்லது தொடர்புநிலைச் சூழலியல் ஆகும்.

சூழலியல் குறித்த விளக்கங்களை பிரிட்டானிகா தகவல் களஞ்சியம், க்ரியாவின் தற்காலத் தமிழ் அகராதி, கல்வியியல் கலைச்சொல் அகராதி, ஆங்கிலம்-தமிழ்ப் பேரகராதி, லிப்கோ அகராதி, கௌரா ஆங்கிலம்-தமிழ் அகராதி எனத் தமிழ் அகராதிகளும், Oxford Dictionary, Lifco Dictionary,

Cambridge Dictionary போன்ற ஆங்கில அகராதிகளும் விளக்கியுள்ளன. சூழலியல் என்பதை எர்னஸ்ட் ஹேக்கல், ரெய்ட்டர், கெண்டே, ஓடம், ஹெக்டே, சார்லஸ் எல்டன் போன்ற அறிஞர்கள் வரையறை செய்துள்ளனர். இணையத்தளங்களும் விளக்கம் அளித்துள்ளன.

சூழலியல் என்பது மனிதனுக்கும் இயற்கைக் காரணிகளான மரங்கள், செடிகள், கொடிகள், பறவைகள், விலங்குகள், நிலம், நீர், காற்று, தட்பவெப்பநிலை போன்றவற்றிற்கும் இடையேயுள்ள உறவு முறை அல்லது தொடர்புநிலை என்பதே பெரும்பான்மையான அகராதிகளின், அறிஞர்களின் கருத்தாகும். மனிதனுக்கும் அவன் வாழும் சுற்றுச்சூழலில் அமைந்துள்ள தாவர, விலங்கு, பறவை, ஐம்பூதங்கள் போன்றவற்றிற்குமான தொடர்பு காரணிகள் சூழலியல் என்றாகிறது. மனித வாழ்வை மேம்படுத்துவதாகச் சூழலியல் கருத்துகள் அமைந்துள்ளன.

மூங்கில் மரங்கள் பாதுகாப்பிற்கும், உணவிற்கும் பயன்பட்டதை அகநானூறு, புறநானூறு, நற்றிணை பாடல்கள் தெளிவுறுத்துகின்றன. பனை மரங்கள் நாட்டின் இயற்கை அரணகாவும், மிக உயர்ந்த உணவுப் பொருளாகவும் சங்க கால மக்கள் வாழ்வியல் சூழலியலோடு அமைந்துள்ளது. புன்னை மரங்கள் தலைவன் தலைவி ஓய்வெடுக்கும் நிழலாகவும், சந்தித்துப் பேசும் இடமாகவும், மீன்களை உலர வைக்கும் நிலமாகவும் மக்கள் வாழ்வியலில் இணைந்துள்ளது.

வேப்ப மரம் கிருமி நாசினி என்பதை அன்றைய தமிழ் மக்கள் அறிந்திருந்தனர். வேப்ப மரத்தின் காய், இலை, பூ, மரப்பட்டை என அனைத்தும் மக்கள் வாழ்வியலோடு இணைந்திருந்தது. மருத மரம் உழவர்கள் களைப்பாறவும், தலைவன் தலைவி விளையாடவும், போர் வீரர்கள் யானைகளைக் கட்டுவதற்கு கட்டுத்தறியாகவும் அமைந்த சூழலியலை அறியமுடிகிறது. தென்னை மரம் இளநீர், தேங்காய் போன்ற உணவுப் பொருளாகவும், மெத்தையின் படுக்கைகளில் நாராகவும், கட்டுமானப் பொருளாகவும், விளையாட்டுப் பொருளாகவும் பயன்பட்ட சூழலியல் தொடர்பினை உணரமுடிகிறது.

மாமரம் மன்னர்களின் காவல் மரமாகவும், இயற்கை வளங்களில் ஓர் அங்கமாகவும் திகழ்கிறது. பலா மரம் மலைப்பகுதியில் வாழும் வேட்டுவர், குறவர் போன்றவர்களின் உணவுப் பொருளாகவும், பரண் அமைப்பதற்காகவும் ஒன்றிணைந்த சூழலியலை அறியமுடிகிறது. வாழை மரம் மக்கள் வாழ்வில் காய், கனி, இலை, தண்டு ஆகிய உணவுப் பொருளாகக் காணப்படுகிறது.

வேங்கை மரம் மன்றங்களில் ஓர் அங்கமாகவும், கோவலர்கள் வீட்டில் வளர்க்கும் விலங்குகளுக்கு உணவாகவும், குறவர்கள் கூத்தாடுகின்ற இடமாகவும் இரண்டறக் கலந்திருந்ததை உணரமுடிகிறது. தலைவன் தலைவி, வழிப்போக்கர்கள் செல்லும் வழியில் உணவாக நெல்லிக் காய்கள் பயன்பட்ட சூழலியலை உணரமுடிகிறது. காஞ்சி மரம் தலைவன் தலைவி சந்திக்கும் இடமாகவும், மகளிர் நீர் நிலைகளில் புனலாடுவதற்காகவும், விளையாடுவதற்காகவும் இரவுக் குறிகளில் ஒன்றுக்கூடிப் பேசுவதற்காகவும் பெருந்துணை புரிகின்றது.

ஆலமரம் ஊர் மன்றமாகவும், மன்னர்கள் போர்ச் செய்யும் முன்பு அறிவிப்புச் செய்யும் இடமாகவும், வணிகம் செய்யும் களமாகவும் காணப்படுகின்ற சூழலியலை அறியமுடிகிறது. சந்தனமரம் நறுமணப் பொருளாகவும், விறகாகவும், உலக்கை உரலாகவும் பயன்பட்ட இயற்கை சார்ந்த சூழலியல் சங்கிலியை அறியமுடிகிறது. நாவல் மரம் ஊர் மன்றமாகவும், உணவாகவும் பயன்பட்ட சூழலியலை உணரமுடிகிறது.

தில்லை மரம் பாதுகாப்பு வேலியாக அமைந்திட்ட சூழலியலைக் காணமுடிகிறது. வாகை மரம் மன்னர்களின் காவல் மரமாக இடம்பெற்ற சூழலியல் தொடர்பை உணரமுடிகிறது. மரா மரம் வீரர்கள் ஓய்வெடுக்கின்ற இடமாகவும், தலைவன் தலைவி சந்திக்கும் இடமாகவும், வேட்டுவன் பாதுகாப்பாக வேட்டையாட பரணாகவும், தெய்வம் உறையும் மரமாகவும் காணப்படுகிறது. யா மரம் உழவர்களுக்கு விறகாகவும், சிலை மரம் எயினர் வேட்டையாட வில், அம்பு செய்வதற்காகவும் அமைந்துள்ள சூழலியலை உணரமுடிகிறது.

கடவுளுக்குச் சூடும் மலர்களில் சிவனுக்குக் கொன்றை மலரும், முருகனுக்குக் கடம்ப மலரும், திருமாலுக்கு துழாய் மலரும் மாலையாகவும் தூவியும் மக்கள் வழிப்பட்ட சூழலை உணரமுடிகிறது. மன்னர்கள் சூடும் மலர்களில் சேரன் பனை மலரையும், சோழன் ஆத்தி மலரையும், பாண்டியன் வேப்ப மலரையும் தலையில் சூடிப் போர்ப் புரிந்த சூழலியலைக் காணமுடிகிறது.

தலைவன் சூடும் மலர்களில் காட்டு மல்லிகை, கூதளம், குல்லை, கூதாளி, குவளை, தேற்றா, வேப்பம் பூ, வேங்கை, கோங்கம், தாமரை, முல்லை, பூளை, உழிஞை, எருக்கம் ஆகிய மலர்கள் இடம்பெறும் சூழலியலைக் காணமுடிகிறது. தலைவி சூடும் மலர்களில் காட்டு மல்லிகை, ஆம்பல், நெய்தல், காந்தள், ஞாழல், செருந்தி, குவளை, முல்லை, தாழை, பாதிரி, வெண்கடம்பு, வேங்கை, மல்லிகை, அரும்பு, ஆவிரை, இலவம் பூ ஆகிய மலர்கள் இடம்பெறும் வாழ்வியலை அறியமுடிகிறது. மலர் தாதினைத் தலையில் சூடியும், மலர் படுக்கையைப் பயன்படுத்திய சூழலியல் வாழ்வியலையும் உணரமுடிகிறது.

பொதுமக்களான குறவர்கள் வேங்கை, நெய்தல் மலர்களையும், குயவன் நொச்சி மலர்களையும், பார்ப்பன மகளிர் முல்லை மலர்களையும், கோவலர் முல்லை, காந்தள் மலர்களையும், விறலியர் பாதிரி மலர்களையும், பரதவர்கள் கூதாளி, தாழை, புலிநகக் கொன்றை, அடம்பு, ஆம்பல் போன்ற மலர்களையும், இடையர்கள் குரா, பகன்றை, குருந்தம், செங்காந்தள் மலர்களையும், வேட்டுவர் காந்தள் மலரையும், பாணர் தாமரை மலரையும், உழவர் கொன்றை, நெய்தல் மலர்களையும், உப்பு வணிகர் பாதிரி, அலரி, தாழம் மலர்களையும், கோசர்கள் கொன்றை, குவளை, முல்லை மலர்களையும், மழவர்கள் வெண்கடம்பு மலர்களையும், வடுகர்கள் குல்லை மலரையும், வலையர் மக்கள் பகன்றை மலர்களையும், பரத்தையர் செங்கழுநீர், முண்டகம், தும்பை மலர்களையும் சூடிக் கொண்ட சூழலியல் தொடர்புடைய வாழ்வை உணரமுடிகிறது.

மலர்கள் மக்கள் வாழ்க்கையோடு இயைந்த திருமண நிகழ்வுகளிலும், நிமித்தங்களிலும், மாலைநேர வழிபாடுகளிலும், அன்றாட நம்பிக்கைகளிலும் இணைந்திருந்த சூழலியல் வாழ்வை உணரமுடிகிறது. இலைகள் உணவு உண்ணும் கொள்கலனாக அன்று முதல் இன்று வரை பயன்படுத்தப்பட்டுள்ளது. கிழங்கு வகைகளை வயல்களில் பாதுகாத்தும், அறுவடை செய்தும், உணவாகப் பயன்படுத்தியும் இயற்கையோடு இயைந்து வாழ்ந்த அக்கால மக்களின் சூழலியலை அறியமுடிகிறது. நெல் வகைகள், உழுந்து, வரகு, தினை போன்ற தானியங்களையும் பயிரிட்டு அறுவடைச் செய்து வளமான வாழ்க்கையை வாழ்ந்த உயர் வாழ்வியலை அறியமுடிகிறது.

மன்னர்கள் போர்க்களத்தில் யானைகள், குதிரைகள் போன்றவற்றைப் பெரும்படையாக அமைத்துப் போர்ப் புரிந்து வெற்றிப் பெற்ற புறச்சூழலியலை அறியமுடிகிறது. மன்னர்களின் வீரத்தின் குறியீடாகப் புலியும், மீனும் இடம்பெற்றிருந்த சங்க காலத்தைச் சங்க இலக்கியம் வெகுவாக எடுத்துக் காட்டுகின்றது. எருது, எருமை போன்ற விலங்குகளைப் பயன்படுத்தி உழுது, போர் அடித்துச் செல்வச் செழிப்புடன் வாழ்ந்த சூழலியலையும், கழுதை சுமை தூக்குவதற்கும் வாணிபத்திற்கும் முதன்மையாகவும் பயன்பட்டதையும் சங்க இலக்கியங்கள் தெளிவுறுத்துகின்றன.

சங்க கால மக்கள் தங்கள் இருப்பிடத்திற்கு ஏற்றவாறும், நிலத்திற்கு ஏற்றவாறும் விலங்குகளை வேட்டையாடி உண்டு வந்ததை அறியமுடிகிறது. மனித வாழ்வியலில் விலங்கின் உறுப்புகளான தந்தம், தோல், கொம்பு, சங்கு போன்றவை புழங்குப் பொருள்களாக நிலவியுள்ளன. விலங்குகளுக்கிடையே ஏற்பட்ட அன்பின் பரிமாற்றங்கள் மனித வாழ்விற்கு அடித்தளமாக அமைந்த சூழலியலைக் கண்டுணர முடிகிறது.

தலைவி தனிமையில் உள்ள போது மனதில் உள்ள துன்பங்களையும், தலைவன் வருகின்ற காலச் சூழலையும் பல்லியிடம் கேட்டு மன அமைதி பெறுகின்ற அகச்சூழலியலைச் சங்க இலக்கியங்கள் தெளிவுறுத்துகின்றன. அக்கால மக்கள் சக மனிதர்களை மட்டும் நேசிக்காமல் விலங்குகளையும்

நேசித்த சூழலியல் உயர் வாழ்க்கையை அறியமுடிகிறது. விலங்கினங்களும் மன்னர்களின் கொடைகளில் ஒன்றாக அமைந்த சூழலியலை அக்காலத் தமிழர்தம் வாழ்வில் காணமுடிகிறது.

மன்னர்களின் வீரத்தை ஆராயவும், கானவர், குறவர், வேட்டுவர் போன்றோர் உணவின் தேவைக்காகவும் வேட்டையாடியச் சூழலியல் வாழ்வை உணரமுடிகிறது.

மக்கள் வாழ்வியலில் பலியிடுதல், நடுகல் இட்டு வழிபாடு செய்தல், விலங்குகளின் உறுப்புகளை வீட்டில் வைத்துத் தெய்வமாக வணங்கியது போன்ற நம்பிக்கை சார்ந்த சூழலியலை உணரமுடிகிறது. ஏறு தழுவுதல் அக வாழ்விலும், புற வாழ்விலும் இன்றியமையாத இடம்பெற்றிருந்த சூழலியல் சங்கிலியை அறியமுடிகிறது. இயற்கையோடு இணைந்த சூழலியலைப் பேணிப் பாதுகாக்காமல் அவற்றை மீறும்போது மிகப்பெரிய இயற்கைப் பேரழிவுகளை மனித சமூகம் எதிர்கொள்ள வேண்டியுள்ளது.

அக்காலத் தமிழர்கள் இறைவழிபாட்டில் நம்பிக்கையுடையவர்களாக இருந்திருக்கின்றனர். அவர்கள் வணங்கும் கடவுளாகக் கருதப்பட்ட முருகன், திருமால் போன்றவர்களுக்குப் பறவைகள் ஊர்தியாகவும் கொடியாகவும் இடம்பெற்றிருந்த சூழலியலைக் காணமுடிகிறது. பறவைகளின் ஒலியை வைத்துக் கொண்டு பண்டைத் தமிழர்கள் காலத்தை அறிந்து அன்றாடப் பணிகளில் ஈடுபட்ட சூழலியல் நிலையைச் சங்க இலக்கியங்கள் வழி தெளிவுற உணரமுடிகிறது. ஆறலைக் கள்வர்களிடமிருந்து தங்களையும், தன் உடைமைகளையும் பாதுகாத்துக் கொள்ள உதவுகின்ற ஆட்காட்டிப் பறவையாகக் கணந்துள் பறவை வாழ்ந்த சூழலியலை அறியமுடிகிறது.

தமிழர் வாழ்வியலில் மயிலின் இறகானது மடலேறுதல், நடுகல் வழிபாடு, வீரர்கள் மாலையாகச் சூடுதல், வில்லில் கட்டி அம்பு எய்தல், தலைவன் பொருள் தேடச் செல்வதற்கு அறிவிக்கும் அடையாளம் எனப் பல்லாற்றானும் மக்கள் வாழ்வியலோடு நெருங்கிய உறவுகொண்டிருந்தது. அன்னப்பறவையின் இறகுகளை மன்னர்கள், மக்கள் போன்றவர்கள்

மெத்தைகளிலும், தலையணைகளிலும் பயன்படுத்தியுள்ளமையை அறியமுடிகிறது. அக்காலச் சமுதாயத்தில் சிறுவர்கள் கௌதாரி, கோழி, காடை போன்ற பறவைகளை சண்டையிடும் பறவையாகப் பழக்கி வைத்திருந்த சூழலை அறியமுடிகிறது. தலைவி தனிமையில் இருக்கும் போது பறவைகளை எண்ணி மகிழ்ந்த சூழலையும் காணமுடிகிறது.

தமிழர் வாழ்வியலில் காகம், ஆந்தை, குருகு போன்ற பறவைகளும், பெயர் குறிப்பிடப்படாத பிற பறவைகளும் நிமித்தமாகவும், நம்பிக்கைகளாகவும் இடம்பெற்ற சூழலியல் நிலையைச் சங்க இலக்கியங்கள் வாயிலாக அறியமுடிகிறது. அக்கால மக்கள் உணவுகளில் கோழி, ஈசல், கானாங்கோழி, காடை போன்ற பறவைகள் இடம்பெற்றிருந்ததை அறியமுடிகிறது. மக்களின் வீடுகளில் கோழி, கிளி, அன்னம் போன்ற பறவைகள் வளர்க்கப்பட்டதைக் காணமுடிகிறது.

தலைவி தம் மனதில் ஏற்படும் வருத்தத்தைப் பறவைகள் மூலம் போக்கும் உளவியல் சார்ந்த சூழலியலோடு வாழ்ந்து வந்ததை உணரமுடிகிறது. தமிழர்கள் சக மனிதர்களை மட்டும் நேசிப்பதோடு மட்டுமல்லாமல் பிற உயிரினங்களையும் நேசிக்கும் உள்ளத்தன்மை கொண்டவர்களாகக் காணப்படுகின்ற சூழலியல் வாழ்வை அறியமுடிகிறது. தலைவன் தலைவி வாழ்வியலில் தூது அனுப்புதலில் தலைவிக்கு மனநிறைவும், ஆறுதலும் கிடைக்கின்ற அகச்சூழலியல் வாழ்வியலைச் சங்க இலக்கியங்கள் காட்சிப்படுத்துகின்றன.

மக்களின் அகவாழ்விலும் புறவாழ்விலும் பறவையினங்கள் இரண்டறக் கலந்திருப்பதால் சங்க சமூகம் உயர்வுடையதாகிறது. உணவிற்கும் பாதுகாப்பிற்கும் பறவைகளும் மனிதனைச் சார்ந்து வாழ்ந்திருந்தன. மனிதனின் அன்றாட வாழ்வில் தனது பல்வேறு செயல்களுக்குப் பறவைகள் பெருந்துணை புரிகின்றன. சூழலியலின் உயிரினச் சங்கிலியில் மனிதனுக்கும் பறவைகளுக்குமிடையேயான உன்னத உறவு நிலையிலமைந்த சூழலியல் காரணிகளைச் சங்க இலக்கியம் தெளிவுற எடுத்தியம்புகின்றது.

மரங்கள், செடிகொடிகள், விலங்குகள், பறவைகள் போன்றவற்றிற்கும் மனிதனுக்கும் இடையேயுள்ள உறவுமுறையிலான உயிரினச் சங்கிலியாகிய ‘சூழலியல்’ நிலையை நமது சங்க இலக்கியங்கள் நுட்பமாகப் பதிவு செய்துள்ளமை பெருவியப்பை ஏற்படுத்துகின்றது. அக்காலப் புலவர்களின் இயற்கை சார்ந்த சூழலியல் தொடர்புடைய நுட்ப அறிவு போற்றுதற்குரியதாகும்.

இத்தகைய இயற்கை சார்ந்த சூழலியல் பின்பற்றப்படாமல் மீறப்படும்போதுதான் இயற்கைப் பேரிடர்களும் சமன்பாடற்ற உயிரினத் தொடர்புகளும் ஏற்பட்டு உலகம் பல்வேறு இன்னல்களுக்கு ஆளாகிறது. மனித சமூகமும் வாழ்வாதாரங்களை இழந்து வாடுகிறது. சங்ககால மக்கள்தம் வாழ்வியல், சூழலியல் விழிப்புணர்வுடன் அமைந்திருப்பதால் பெருமதிப்பிற்குள்ளாகிறது.

சங்க இலக்கியங்களின் அகச்சூழலியல் கருத்துகளை உளவியல் அணுகுமுறையிலும், புறச்சூழலியல் கருத்துகளை வரலாற்றுப் பின்புலத்தோடும் இந்த ஆய்வினை மேலும் தொடர இடமுண்டு.

## பின்னிணைப்பு – I

# சங்க இலக்கிய நூல்களில் இடம்பெற்றுள்ள தாவரங்கள் பட்டியல்

| வ. எண். | தாவரப் பெயர் | இடம்பெற்றுள்ள நூல் | பாடல் எண் மற்றும் அடிகள் |
|---|---|---|---|
| 1. | அகில் மரம் | சிறுபாண். | 155 |
| | | மதுரைக். | 554 |
| 2. | அரச மரம் | ஐங். | 325:1 |
| 3. | அலரி பூ | அகம். | 191:2 |
| | | புறம். | 371:3 |
| 4. | அவரைக்கொடி | குறுந். | 82:5, 240:1 |
| | | ஐங். | 271:1, 286:2 |
| | | அகம். | 104:8, 217:9, 301:14 |
| | | புறம். | 120:10, 215:5, 335:5 |
| | | பெரும்பாண். | 195 |
| | | மலைபடு. | 434 |
| 5. | அவரை மலர் | அகம். | 104:8, 301:14, 217:9, 243:1, 249:9 |
| | | ஐங். | 209:3 |
| | | குறுந். | 82:5, 240:1 |
| | | புறம் | 335:5 |
| 6. | அதிமதுரசெடி | குறுந். | 136:4 |
| 7. | அடும்பங்கொடி | நற். | 145:2, 254:2, 272:3, 338:2 |
| | அடம்பங்கொடி | ஐங். | 101:2 |
| | | குறுந். | 243:1, 248:5, 349:1, 401:1 |
| | | பதிற்று. | 30:6, 51:7 |
| | அரும்பு கொடி | அகம். | 160:3, 320:9, 330:14 |
| | | கலித். | 132:6 |
| 8. | அடும்ப மலர் | நற். | 145:2, 254:2, 349:2 |
| | அடம்ப மலர் | குறுந். | 243:2, 349:1, 401:1 |
| | | பட்டினப். | 65 |
| | அடும்பு மலர் | கலித். | 14:29 |
| 9. | அரும்பு மலர் | நற். | 19:3, 214:4, 257:5, 260:9, 267:1, 298:10, 335:5. |
| | | கலித். | 33:6, 92:63, 101:1, 119:7 |
| | | அகம். | 74:8 |

| வ. எண். | தாவரப் பெயர் | இடம்பெற்றுள்ள நூல் | பாடல் எண் மற்றும் அடிகள் |
|---|---|---|---|
| | அரும்பு | ஐங். | 462:5 |
| 10. | அசோகமரம் | நற். | 244:10 |
| | | குறுந். | 214:5 |
| | | ஐங். | 211:3, 273:1 |
| | | பரி. | 15:31 |
| | | கலித். | 15:12, 57:12 |
| | | அகம். | 7:19, 38:6, 68:5, 188:12 |
| 11. | அத்தி மரம் | நற். | 95:3 |
| | | குறுந். | 24:3 |
| | | புறம். | 338:6 |
| 12. | அனிச்ச மலர் | கலித். | 91:1 |
| 13. | ஆலமரம் | நற். | 76:3, 343:4 |
| | | குறுந். | 15:2 |
| | | ஐங். | 303:1 |
| | | பரி. | 4:67 |
| | | கலித். | 101:13, 106:28, 133:3 |
| | | அகம். | 70:16, 251:8, 287:7, 319:2, 385:9 |
| | | புறம். | 58:2, 198:9, 199:1, 254:7 |
| 14. | ஆசினி மரம் | புறம். | 158:22 |
| 15. | ஆவிரம்பூ | கலித். | 138:9, 138:18, 139:8, 140:7 |
| 16. | ஆவிரைப் பூ | குறுந். | 173:1 |
| 17. | ஆத்தி மாலை | அகம். | 93:4 |
| | | புறம். | 43:3, 43:13, 81:3, 82:6, 338:6 |
| | | பொருநர். | 148 |
| 18. | ஆத்தி மரம் | அகம். | 104:12 |
| 19. | ஆம்பல் கிழங்கு | புறம். | 176:4 |
| 20. | ஆம்பல் கொடி | குறுந். | 80:1, 293:5, 352:1 |
| | | ஐங். | 21:2, 35:2 |
| | | அகம். | 36:3, 176:13, 196:5, 256:7 |
| | | புறம். | 16:13, 63:12, 209:3, 248:1, 266:3, 280:13, 281:4 |
| 21. | ஆம்பல் (மலர்) | நற். | 6:1, 100:3, 200:6, 230:3, 250:4, 280:2, 290:1, 300:3, 345:3, 390:4 |
| | | குறுந். | 46:1, 84:5, 117:1, 122:2, 178:3, 300:2, 370:1 |

| வ. எண். | தாவரப் பெயர் | இடம்பெற்றுள்ள நூல் | பாடல் எண் மற்றும் அடிகள் |
|---|---|---|---|
| | | ஐங். | 40:5, 65:1, 68:1, 72:1, 91:2, 93:2, 96:2 |
| | | பதிற்று. | 13:6, 19:20, 23:24, 27:3, 62:17, 63:19, 71:2 |
| | | பரி. | 8:116, 10:78, 12:78, 19:75 |
| | | கலித். | 72:6, 75:2, 108:62 |
| | | அகம். | 6:1, 78:18, 96:5, 136:27, 156:9, 176:14, 316:2, 356:18 |
| | | புறம். | 61:2, 70:12, 209:3, 383:7 |
| | | ஐங். | 34:2, 57:2 |
| | | பட்டினப். | 66 |
| | அல்லி | கலித். | 72:6, 91:1 |
| 22. | இரவ மரம் | அகம். | 125:3 |
| | | புறம். | 276:2, 281:1 |
| 23. | இரவ மலர் | புறம். | 281:1 |
| 24. | இலந்த மரம் | நற். | 113:2 |
| | | புறம். | 34:12 |
| 25. | இலவ மரம் | நற். | 105:1 |
| | | ஐங். | 301:1, 320:1, 338:2, 368:1 |
| | | அகம். | 17:18, 185:12, 245:14, 309:7 |
| 26. | இலவ மலர் | ஐங். | 301:1, 320:1, 338:2, 368:1 |
| | | பரி. | 19:79. |
| | | கலித். | 26:5, 33:10 |
| | | அகம். | 11:3, 17:18, 25:9, 133:9, 142:1, 185:12, 245:14 |
| 27. | இருவாட்சி மலர் | பதிற்று. | 81:25 |
| | | புறம். | 342:2 |
| 28. | இருப்பை மரம் | நற். | 111:1 |
| | | குறுந். | 329:1 |
| | | அகம். | 9:3, 15:13, 81:2, 95:6, 107:16, 135:8, 149:3, 171:14, 225:11, 247:5, 267:6, 275:11, 321:5, 331:1, 351:8 |
| | | புறம். | 384:7 |
| 29. | இருப்பை மலர் | நற். | 111:1 |
| | | குறுந். | 329:1 |
| | | அகம். | 9:5, 95:7, 107:16, 138:8, 149:3, 225:11, 247:5, 267:6, 275:11, 321:5, 331:1, 351:8 |

| வ. எண். | தாவரப் பெயர் | இடம்பெற்றுள்ள நூல் | பாடல் எண் மற்றும் அடிகள் |
|---|---|---|---|
| | | புறம். | 384:7 |
| 30. | இஞ்சி | பதி. | 42:10 |
| 31. | இண்டங்கொடி | நற். | 2:6, 193:1, 312:2 |
| | | ஐங். | 456:3 |
| 32. | இண்டங் மலர் (ஈங்கை) | ஐங். | 456:3 |
| | இண்டஞ் கொடி (ஈங்கை) | அகம். | 75:17, 206:7, 243:2, 252:9, 294:6, 306:3, 357:1. |
| 33. | இத்தி மரம் (இச்சி) | நற். | 162:9 |
| | | புறம். | 325:11 |
| | இற்றி மரம் | குறுந். | 106:1 |
| | | ஐங். | ??? |
| | | அகம். | 57:6, 77:13, 345:19 |
| 34. | ஈங்கை மரம் | நற். | 2:6, 86:7, 193:1, 205:9 |
| | | குறுந். | 380:5 |
| | | அகம். | 125:3 |
| 35. | ஈங்கை மலர் | நற். | 79:1, 86:7, 124:4, 181:4 |
| | | குறுந். | 110:5 |
| | | கலித். | 31:3 |
| | இண்டஞ் மலர் | அகம். | 125:3, 243:2, 252:9, 294:6, 306:3, 357:1 |
| 36. | ஈச்ச மரம் (ஈந்தின்) | நற். | 2:2, 126:2 |
| | | அகம். | 21:20 |
| | | புறம். | 116:7 |
| 37. | உகாய் மரம் | நற். | 66:2 |
| | | குறுந். | 274:1, 363:4 |
| | உகா மரம் | அகம். | 293:8 |
| 38. | உழிஞை கொடி | பதிற்று. | 44:10, 63:8 |
| | | புறம். | 50:4, 76:5, 77:3 |
| 39. | உழிஞை மலர் | கலித். | 140:4 |
| | | பதிற்று. | 22:27, 43:23, 44:10, 56:5, 63:8 |
| | உழிஞைப்பூ | பட்டினப். | 234 |
| 40. | உளுந்தஞ்செடி | குறுந். | 68:1, 384:1 |
| | உழுத்தம் பருப்பு | அகம். | 86:1 |

| வ. எண். | தாவரப் பெயர் | இடம்பெற்றுள்ள நூல் | பாடல் எண் மற்றும் அடிகள் |
|---|---|---|---|
| 41. | உன்ன மரம் | பதிற்று. | 23:1, 40:17, 61:6 |
| | | புறம். | 3:23 |
| 42. | உன்ன மலர் | பதிற்று. | 61:6 |
| 43. | ஊகம் பூ | புறம். | 307:7 |
| 44. | எருக்கம் பூ | நற். | 152:2, 220:2 |
| | எருக்க மலர் | குறுந். | 17:2 |
| | எருக்கம் பூ | கலித். | 138:9, 139:8 |
| | | புறம். | 106:2 |
| | எருக்க மலர் | அகம். | 301:11 |
| 45. | எறுழ மரம் | ஐங். | 308:3 |
| 46. | எறுழ மலர்கள் | நற். | 302:5 |
| 47. | எள்ளுச்செடி | புறம். | 120:10, 246:7, 321:27 |
| | | குறுந். | 261:2 |
| 48. | ஓமை மரம் | நற். | 34:8, 106:6, 137:7, 198:2, 252:1, 279:7, 318:2 |
| | | குறுந். | 79:2, 124:2, 207:2, 260:8, 396:4 |
| | | ஐங். | 316:4, 321:2 |
| | | அகம். | 3:2, 5:8, 21:15, 117:63, 191:9, 223:8, 297:11, 369:17, 397:11 |
| 49. | கடம்ப பூக்கள் | நற். | 20:3, 34:8 |
| | கடம்ப மலர் (மரா மலர்) | குறுந். | 22:3, 211:5, 341:1 |
| | | ஐங். | 331:2, 348:2, 357:1, 383:2 |
| | | பதி. | 11:12 |
| | | புறம். | 23:3 |
| | | திருமுருகு. | 20 |
| | கடப்ப மலர் | பரி. | 5:81, 6:55, 14:3, 15:20, 19:97, 20:11 |
| | வெண் கடம்ப பூ | கலித். | 36:1 |
| | கடம்பப் பூ | அகம். | 80:8, 83:1, 98:16, 99:8 |
| | மரா மலர் | அகம். | 21:11, 121:8, 127:13, 172:7, 199:3, 211:2, 221:7, 257:6, 261:4, 317:15 |
| 50. | கரந்தைக் கொடி | ஐங். | 261:1 |
| | | பதிற்று. | 40:5 |
| 51. | கரந்தை மலர் | அகம். | 269:11 |
| | கரந்தைப் பூ | புறம். | 261:18, 340:8 |

| வ. எண். | தாவரப் பெயர் | இடம்பெற்றுள்ள நூல் | பாடல் எண் மற்றும் அடிகள் |
|---|---|---|---|
| 52. | கவலைக் கிழங்கு | குறுந். | 233:1 |
| 53. | கழற்சிக்காய் (கிழங்கு) | ஐங். | 245:2, 246:2 |
| | | புறம். | 36:4 |
| 54. | கழிமுள்ளிச்செடி | குறுந். | 49:1, 51:1 |
| | | ஐங். | 108:2, 177:3 |
| | | அகம். | 80:7, 130:4 |
| 55. | கழிமுள்ளிச்செடி மலர் | குறுந். | 49:1, 51:1 |
| | கழிமுள்ளி மலர் | அகம். | 130:4 |
| 56. | கரும்பு | குறுந். | 35:3, 85:4, 149:3, 180:3, 198:2, 262:7, 267:2, 384:1 |
| | | ஐங். | 12:1, 18:2, 55:1, 65:1, 87:2 |
| | | பதிற்று. | 13:3, 13:13, 30:14, 50:3, 75:6 |
| | | பரி. | 19:39 |
| | | அகம். | 6:11, 116:4, 156:6, 217:4, 237:11, 256:15, 302:10, 306:6, 346:7 |
| | | புறம். | 16:15, 22:15, 28:12, 35:10, 42:15, 99:2, 137:6, 386:10, 392:21 |
| | | மதுரைக். | 258 |
| 57. | கரும்பு மலர் | நற். | 241:5, 366:7 |
| | | குறுந். | 35:3, 85:5, 149:3 |
| | | ஐங். | 4:4, 12:1, 91:4 |
| | | பதிற்று. | 13:13 |
| | | கலித். | 31:15 |
| | | அகம். | 13:22, 217:4, 235:12 |
| | | புறம். | 24:13, 35:10 |
| 58. | கருவிளை மலர் | குறுந். | 110:4 |
| | | ஐங். | 464:1 |
| | | அகம். | 255:11 |
| 59. | கண்டல் மரம் (தாழை) | நற். | 45:11, 75:10, 123:9, 131:6, 163:8, 163:11, 178:5, 191:5, 203:2, 207:1, 270:1, 335:4, 345:1, 363:1, 372:13 |
| | தாழை மரம் | குறுந். | 117:3, 219:6, 228:1, 304:7, 340:4, 345:5 |
| | | கலித். | 131:10, 144:27 |
| | | பதி. | 55:5 |

| வ. எண். | தாவரப் பெயர் | இடம்பெற்றுள்ள நூல் | பாடல் எண் மற்றும் அடிகள் |
|---|---|---|---|
| | | அகம். | 20:6, 90:6, 100:18, 130:5, 170:9, 180:12, 210:12, 260:3, 330:13, 340:23, 353:19, 380:6 |
| 60. | கள்ளிச்செடி | நற். | 169:4, 314:9 |
| | | குறுந். | 16:5, 67:5, 154:5, 174:2 |
| | | ஐங். | 323:2 |
| | | அகம். | 151:2, 184:8, 337:17 |
| | | புறம். | 225:7, 245:3, 260:5, 363:101 |
| 61. | காயா மரம் | பரி. | 1:6 |
| | | அகம். | 108:14 |
| 62. | காயாச் செடி | குறுந். | 183:5 |
| 63. | காயா மலர் | குறுந். | 183:5 |
| | | ஐங். | 412:1, 420:2 |
| | | பரி. | 1:6, 3:73, 4:29, 13:42 |
| | | கலித். | 101:5, 103:1, 103:57, 108:43 |
| | | அகம். | 14:2, 133:8, 134:3, 304:14, 374:13 |
| 64. | காளாண் | புறம். | 164:2 |
| | பாசி | நற். | 65:3 |
| | | அகம். | 91:5, 336:2 |
| | நாணல் | ஐங். | 11:1, 18:1, 20:3 |
| 65. | காளாண் பூ | புறம். | 164:2 |
| 66. | காரைச் செடி | புறம். | 258:1 |
| 67. | காஞ்சி மரம் | குறுந். | 10:4, 127:3 |
| | | பதிற்று. | 23:19, 62:15 |
| | | கலித். | 74:5, 108:60 |
| | | அகம். | 25:3, 56:6, 96:8, 156:6, 246:6, 286:4, 296:1, 336:9, 341:9, 346:6 |
| | | புறம். | 18:7, 344:6, 351:11 |
| 68. | காஞ்சி மலர் | குறுந். | 10:4 |
| | காஞ்சிப்பூ | கலித். | 34:8, 108:63 |
| | காஞ்சி (பூவரசு) மலர் | அகம். | 56:5, 246:6, 296:1, 336:9, 341:9 |
| | | புறம். | 18:7 |
| 69. | காந்தள் கிழங்கு | புறம். | 168:2 |
| 70. | காந்தள் கொடி | குறுந். | 361:4, 361:4 |

| வ. எண். | தாவரப் பெயர் | இடம்பெற்றுள்ள நூல் | பாடல் எண் மற்றும் அடிகள் |
|---|---|---|---|
| | | பதிற்று. | 15:11 |
| | | பரி. | 14:13 |
| | | அகம். | 338:7 |
| 71. | காந்தள் மலர் | நற். | 14:7, 17:10, 29:1, 34:2, 69:6, 85:10, 99:9, 161:7, 173:2, 176:6, 185:8, 188:4, 221:3, 294:7, 313:6, 355:2, 359:2, 379:13, 399:2 |
| | | குறுந். | 1:4, 62:1, 84:4, 107:1, 167:1, 185:6, 239:3, 259:2, 265:1, 284:3, 373:7 |
| | | ஐங். | 223:2, 226:2, 254:2, 259:5, 293:1, 440:3 |
| | | பதிற்று. | 15:11, 21:26, 30:9, 67:19, 81:22 |
| | | பரி. | 8:25, 11:20, 14:13, 18:35, 19:76, 20:98, 20:101 |
| | | கலித். | 7:15, 39:15, 40:12, 43:8, 45:2, 48:11, 53:5, 59:3, 102:3, 121:13 |
| | | அகம். | 4:15, 18:15, 78:8, 92:9, 94:5, 108:15, 132:11, 138:17, 152:17, 154:7, 164:6, 217:10, 218:20, 235:7, 238:16, 264:3, 312:5, 338:7, 364:6 |
| | | புறம். | 90:1, 144:8, 157:7, 168:2 |
| | | திருமுருகு. | 43 |
| | | நெடுநல். | 5 |
| 72. | குவளைக்கொடி | குறுந். | 321:2, 342:5, 388:1 |
| 73. | குவளை மலர் | நற். | 34:2, 37:4, 77:12, 85:1, 105:8, 160:9, 161:2, 166:3, 204:3, 205:6, 262:7, 271:8, 301:3, 308:2, 217:9, 332:2, 357:9, 367:8, 370:8, 376:5, 391:8 |
| | | குறுந். | 13:5, 30:4, 59:3, 62:2, 167:3, 270:6, 291:6, 300:1, 321:2, 329:6, 339:6, 346:4, 377:1, 388:1 |
| | | ஐங். | 72:3, 73:3, 190:4, 208:5, 225:2, 277:5, 299:2, 351:4, 375:6, 376:4, 471:2, 500:2 |
| | | பதிற்று. | 27:2, 52:22, 58:2, 70:81 |
| | | பரி. | 11:102 |
| | | கலித். | 41:31, 64:16, 66:2 |
| | | அகம். | 19:10, 27:13, 36:3, 38:2, 56:4, 62:4, 125:6, 128:9, 129:16, 138:2, 149:18, 150:11, 156:8, 161:14, 162:11, 165:11, 179:12, 180:5, 183:1, 197:1, 216:9, 223:14, 228:4, 285:13, 308:11, 310:5, 350:1, 361:2, 381:19, 393:24, 395:1 |
| | | புறம். | 42:16, 105:2, 116:1, 132:5, 153:7, 348:6, 396:2 |
| | | மலைபடு. | 189 |
| 74. | குரா மரம் | நற். | 56:1, 224:3 |

| வ. எண். | தாவரப் பெயர் | இடம்பெற்றுள்ள நூல் | பாடல் எண் மற்றும் அடிகள் |
|---|---|---|---|
| | | ஐங். | 344:2, 357:1, 369:4 |
| | | அகம். | 97:16, 237:3, 317:10 |
| | குரவு மரம் | கலித். | 104:12 |
| 75. | குரா மலர் | நற். | 56:1, 224:3, 266:2 |
| | | ஐங். | 344:2, 357:1 |
| | | அகம். | 97:16, 237:3 |
| | குரவ மலர் | அகம். | 317:10 |
| 76. | குருக்கத்திர் கொடி | பரி. | 15:41 |
| 77. | குருக்கத்தி மலர் | நற். | 97:6 |
| | | பரி. | 12:79 |
| 78. | குருந்த மரம் | ஐங். | 436:3 |
| | | அகம். | 59:11, 85:12, 194:14, 304:10 |
| 79. | குருந்தம் மலர் | நற். | 321:9 |
| | | ஐங். | 436:3, 439:2 |
| | குருந்து மலர் | கலித். | 103:3, 111:7, 113:25 |
| | குருந்த மலர் | அகம். | 133:15 |
| | குருந்தம் பூ | புறம். | 335:2 |
| 80. | குறிஞ்சி செடி | புறம். | 374:8 |
| | | அகம். | 308:16 |
| 81. | குறிஞ்சி பூ | நற். | 268:3, 301:2 |
| | | மதுரைக். | 613 |
| | குறிஞ்சி மலர் | குறுந். | 3:3 |
| | | அகம். | 308:16 |
| 82. | குப்பைக் கீரை | புறம். | 159:9 |
| 83. | குமிழ் மரம் | நற். | 6:7, 6:7, 274:5, 274:4, 286:2 |
| | | புறம். | 324:9 |
| 84. | குல்லை (கஞ்சா) மலர் | நற். | 376:5 |
| | கஞ்சங் குல்லை மலர் | திருமுருகு. | 200 |
| | | பரி. | 12:79 |
| | பைஞ்சாய் மலர் | பரி. | 19:77 |
| | குல்லை மலர் | கலித். | 103:3 |

